ஸ்ரீ :



# பிரும்ம வித்யா

பாகம்-1

பரவித்யையின் பெருமை – ஸ்ரீபாஷ்ய சரித்திர வரலாறு

பூஜ்ய பகவத்பாதாள் சங்கரரின் பாஷ்யச்சுருக்கம்—

பகவத் ஸ்ரீராமானுஜரின் ஸ்ரீவைஷ்ணவ சித்தாந்தம்




Author & Publisher

**S. JAGANNARAYANAN**

Deputy Secy., (Retd.), Ministry of Finance,
Government of India, New Delhi.

ஸ்ரீ:



# பிரும்ம வித்யா

## முதற்பாகம்

பரவித்யையின் பெருமை ஸ்ரீபாஷ்ய சரித்திர வரலாறு
பூஜ்ய பகவத்பாதாள் சங்கராச்சாரியாரின் பாஷ்யச்
சுருக்கம், பகவத் ஸ்ரீராமானுஜாச்சாரியாரின்
ஸ்ரீவைஷ்ணவ சித்தாந்தம்




Author—Publisher :

**S. JAGANNARAYANAN**

Deputy Secy., (Retd.)
Ministry of Finance
Government of India, New Delhi

10, Thiruveedhi Amman Street
R.K. Nagar Madras-28.


**Author of:**

துளஸி ராமாயணம், திரிவேணி ராமாயணம், திருப்பாவை,
நம்மாழ்வாரின் திருவாய்மொழி, கீத கோவிந்தம், மீரா பஜன்,
தியாகராஜரின் பஞ்ச ரத்ன கீர்த்தனைகள் etc.

First Edition—1987 - 1000 Copies



This book has been printed with the financial assistance given by the Tirumala Tirupathi Devasthanams, Tirupathi(AP) Under their Scheme-Aid to Authors for Religious books.

Financial assistance by a token grant has been promised by the Ministry of Education Govt. of India, New Delhi after Completion of all the volumes of Brahma Vidya.

Please see also the list of donors.

வெளியிடுபவர் :

சுதா & சுஜாதா
10, திருவீதி அம்மன் தெரு,
ராமகிருஷ்ண நகர், சென்னை-28.

பிரதிகள் கிடைக்குமிடம் :

S. ஜெகந்நாராயணன்
10, திருவீதி அம்மன் தெரு,
ராமகிருஷ்ண நகர், சென்னை-28.

அச்சிட்டவர்கள் :

1. ரத்னம் பிரஸ்
   G.T. Madras-1.

2. நியூ பாரதி விஜயம் பிரிண்டர்ஸ்
   49, வெங்கடாசல செட்டி தெரு,
   திருவல்லிக்கேணி, சென்னை-5.

3. இளங்கோ அச்சுக்கூடம்
   166, இராயப்பேட்டை நெடுஞ்சாலை,
   மயிலாப்பூர், சென்னை-4.

॥ श्रीः ॥

ஸ்ரீ



# பிரும்ம வித்யா

(முதற்பாகம்)

ஸமர்ப்பணம்

பூஜ்யபகவத்பாதாள்
ஸ்ரீசங்கராச்சாரியாரின்
பன்னிரண்டாவது நூற்றாண்டு
நினைவு வெளியீடு.

1987

# பொருளடக்கம்

**இப்புத்தகத்திற்கு திரவிய சகாயம் செய்த**
**மஹனீயர்கள் இவர்களுக்கு நாங்கள்**
**மிக்கக் கடமைப்பட்டிருக்கிறோம்**

1. **Tirumalai Tirupathi Devasthanam**
2. **Govt of India—Ministry of Education, New Delhi.**
3. **Sundaram Charities, Madras.**
4. **Thanga Maligai, Madras**
5. **The Hindu, Madras.**
6. **Southern Roadways LTD., Madurai.**
7. **The Mrs. Madhuram Narayanan Charitable Foundation, Madras.**
8. **Sri Venkata Charities, Madras**
9. **Shree Niwas Trust – Bombay.**
10. **Sri Arvind N. Mafatlal, Bombay.**
11. **M/s Seshasayee Papermills-Erode.**

**S. JAGAN NARAYANAN,**
**(Retd) Dy. Secy.**
**Ministry of Finance**
**Govt. of India**
**New Delhi**

# நன்றி—அஞ்சலி

''பிரும்ம வித்யா'' என்கிற தலைப்பில் கொண்ட புத்தகங்களை எழுதுவதற்கு அடியேனுக்குப் பலர் உதவி புரிந்துள்ளார்கள். ஸ்ரீமத்சங்கர பாஷ்யத்தை அடியேன் தர்மாத்மா ஸ்ரீமான் வைத்திய சுப்பிரமணிய அய்யரின் க்ருஹமான நவசுஜாவில் ஆத்ம வித்யா பூஷணம் பிரும்மஸ்ரீ V.S.V. குருஸ்வாமி சாஸ்திரிகள் அவர்களிட மிருந்து பயின்றேன் இவர்களுக்கு நான் கடமைப்பட்டிருக்கிறேன்.

ஸ்ரீமத்ராமானுஜ பாஷ்யத்தை அடியேன் ஸ்ரீ அஹோபிலமடம் ஆஸ்தான வித்வான் வித்வன்மணி ஸ்தார்த்த பிரகாசகராஜ: நியாய வேதாந்த வித்வான் ஸ்ரீ உப.வே. வில்லிவலம் கிருஷ்ணமாச்சாரி யார் ஸ்வாமியிடம் பயின்றேன். இந்த மஹானுபாவர் சிரமத்தைப் பாராமல் அடியேனை நன்கு சிக்ஷித்து ஸ்ரீ பாஷ்ய அதிகாரியாக ஆக்கினார். அதற்கடுத்தாற்போல் நான் வேதாந்த சிக்ஷை பெற்றது கோஷ்டிபுரம் ஸ்ரீ உ.வே. ராமானுஜாச்சாரியார் ஸ்வாமியிடம் இவருடைய திருத்தகப்பனார் கோஷ்டிபுரம் ஸ்ரீ உ.வே. சௌம்ய நாராயணாச்சாரிய ஸ்வாமியைப் பண்டித உலகில் அறியாதார் யாரும் இருக்க முடியாது. எனக்குத்தான் பாக்யமில்லை. அப்பேற்பட்ட வம்சத்திலுதித்த மஹாவித்வானுக்கும் அடியேன் மிக்கக் கடமைப் பட்டிருக்கிறேன். மூன்றாவதாக ஸ்ரீரங்கம் ஸ்ரீமதாண்டவன் பெரியாச்ரமம் ஆங்காங்கு எழுந்தருளிய போது அவர்களுடைய உபந்யாஸங் களில் அன்வயித்து பெரும் பயனையடைந்தேன். இவர்கள் அனைவருக்கும் நன்றி சொல்லி அஞ்சலி செய்கிறேன்.

S. ஜகந்நாராயணன்

மதருஸ்

27-7-87

ஸ்ரீ



ஓம்

## அவதாரிகை

# ஸமர்ப்பணம்

ஸ்ரீமதே ராமானுஜாய நம:

ஸ்ரீமதே வேதாந்த தேசிகாய நம:

"பிரும்ம வித்யா" என்கிற தலைப்பில், ஐந்து ஆறு பாகங்கள் கொண்ட ஆத்ம வித்யை என்கிற இந்த கிரந்தத்தில் பிரும்ம ஸூத்ரங்களுக்கு பூஜ்ய ஸ்ரீமத் சங்கர, ஸ்ரீமத்ராமானுஜ பாஷ்யங்களுடன் வெளியிட உத்தேசம். அவற்றுள் முதற்பாகத்தில், ஆத்ம வித்யையின் அவசியத்தையும், பூஜ்யஸ்ரீ சங்கர பகவத்பாதாளுடைய பாஷ்ய ஸாராம்சமும், அதற்குத் துணையாக அத்வைத சித்தாந்தத்தின் பெருமையும், அத்வைத சாஸ்திரத்தின் பிரமாண பதவியுள்ள நூல்களின் பெயர்களும், ஜகத்மித்யை பிரும்மம் ஸத்யம் என்பதற்கு உபநிஷத் வாக்யங்களின் ஆதாரங்களும், காட்டப்பட்டிருக்கின்றன இவை புத்தக ஆரம்பத்தில் முதலில் (Section A) கொடுக்கப்பட்டிருக்கின்றன.

ஸ்ரீமத் ராமானுஜரின் ஸ்ரீபாஷ்யத்திற்கு தமிழாக்கமும் விரிவுரையும் இரண்டு, மூன்று தொடர்ந்துள்ள மற்ற பாகங்கள் மூலம் பிரசுரிக்க உத்தேஸ்யம். ஸ்ரீமத் ராமானுஜரின் ஒன்பது நூல்களிலிருந்து ஸ்ரீமத் வைஷ்ணவ சித்தாந்தத்தின் முக்கிய அம்சங்களும், ஸ்ரீபாஷ்யத்தைப் பற்றிய பிரமாண பதவியுள்ள நூல்களும் புத்தக துவக்கத்திலே பர (அதாவது ஆத்ம) வித்யையின் அவசியம் காட்டப்பட்டதின் தொடக்கமாக (History of Sri Bhashyam & Names of the Authors and their Books) ஸமர்ப்பிக்கப்பட்டது. இவை ஸ்ரீமத்ராமானுஜரின் ஸ்ரீபாஷ்யத்தின் சரித்திர வளர்ச்சி நூல்களாகும். அவற்றுள் முக்கியமானவற்றை நாம் தந்துள்ளோம்.

ஸ்ரீமத்ராமானுஜரின் ஸ்ரீபாஷ்யத்தின் முதல் நான்கு அதிகரணங்கள் ''சாஸ்திர சதுஷ்டயம்'' என்று ஸ்ருத பிரகாசிகா பட்டரால் பெயரிடப்பட்டது. அவற்றுள் முதல் அதிகரணமாகிற ஜிக்ஞாஸாதிகரணம் மிகமிக முக்கியம்; ஆக இந்த நான்கு அதிகரணங்களின் தமிழாக்கமும்-விளக்கமும் ''பிரும்ம வித்யை'' என்கிற கிரந்தத்தின் இரண்டாம் பாகத்தில் காணப்படும். இந்த இரண்டாம் பாகம் அக்ஷய வருஷம்-பங்குனி மீ 11உ (25ம் மார்ச், 1987) சமீபத்தில் நடந்த ஸ்ரீரங்கம் பெரிய கோவில், தெற்கு ராஜகோபுர ஸம்ப்ரோக்ஷண சமயத்திலும் (அதே சமயத்தில் நடந்த ஸ்ரீமதாண்டவனின் (பெரியாஸ்ரமம்) சதாபிஷேக வைபவத்தின் சமயத்திலும், ஸ்ரீஆண்டாள் திருவாய் மலர்ந்தருளிய திருப்பாவையின் வ்யாக்யானத்துடன் உபய வேதாந்த நூற்களாக ஸ்ரீபாஷ்யமும் திருப்பாவையும் ஸமர்ப்பிக்கப்பட்டன. (பிரசுரமான தேதி—25th March 1987)

ஸ்ரீஆண்டாளின் முப்பது பாட்டுக்களுக்கும் ஸ்வரம் வர்ண மெட்டுக்கள் இயற்றப்பட்டு சம்பிரதாய ராகங்களுடன் பிரசுரிக்கப் பட்டன. இப்புத்தகங்களை ஸஹ்ருதயர்களும் ஆஸ்திக மக்களும் படித்து இன்புறுவார்கள் என நம்புகிறோம்.

மீதியுள்ள ஸ்ரீமத்ராமானுஜரின் மற்ற அதிகரணங்கள் (541 ஸூத்ரங்கள்) பிரும்ம வித்யை மூன்று, நான்கு பாகங்களின் தொடக்கமாக சீக்கிரம் வெளியிட எதிர்பார்க்கிறோம். புஸ்தகத்தின் விஷயங்கள் இரண்டு வருஷங்கள் முன்பே தயாராகியும், அச்சு வடிவில் உடனடியே கொண்டு வருவதற்கு பணஉதவி மிக்க அவசியம். ஸஹ்ருதயர்களும் ஆஸ்திக மக்களும் மனம் உவந்து உதவி செய்ய வந்தால், மிக்க நன்றியாகும். இம்மாதிரி நூல்கள் இதற்கு முன்பு தமிழ்மறையில் ஒரேபடியாக ஓரிடத்தில் காணும்படி எழுதப்படவில்லை. ஆசார்யர்களிடம் சிஷ்யமூலமாகப் பயின்று ஸத்ஸம்பிரதாய பிரகாசமாக எழுதப்பெற்றதால் ஒரேவிடத்தில் இரண்டு பாஷ்யங்களும் காணப்படுவது பெரும் பாக்கியமே. இந்த நூல் ஒரு சிந்தனை நூலாகும். குருபரம்பரா வழியாக ஒராண் வழியாக போதிக்கப்படும் இந்த ஒப்பற்ற இரண்டு உபநிஷத் பாஷ்யங்களும் நம்மிடையே ஆஸ்திக மனப்பான்மையும் வேதங்களின் பெருமையையும் அதைக் காத்து ரக்ஷிப்பது ரக்ஷிப்பவர்கள் இத்யாதி எவ்வளவு பெருமையையும் சிரமசாத்தியமான காரியம் என்பதும் தெளிவாகும். எல்லாம் நன்மையைப் பயக்கும் என்ற சிறிய அறிவில் பல சிரமங்களுக்கிடையே பிரசுரம் செய்யப்பட்டன. அடியேனுக்கு எவ்விதமும் தகுதியில்லை, ஆனால் பட்ட சிரமத்திற்கும், எண்ணங்களுக்கும் வை நன்கு அடையப்பட்டால், அதுவே எமக்கு பெரும்

பாக்கியமாகும். ஆசார்யர்களின் கடாக்ஷமும் ஆசிகளும் அவசியம் எனச் சொல்லி இவைகளை ஸமர்ப்பணம் செய்கிறேன்.

இப்புத்தகங்களை வெளியிடும் சமயம் எனது அன்புள்ள மனைவி ஸ்ரீமதி ராஜலக்ஷ்மி ஜகந்நாராயணன் என்னுடன் இல்லை. சுமார் பதினேழு பதினெட்டு வருஷங்கள் ஆகி விட்டன. அவர் தற்போது இருந்திருந்தால் அவர்களுக்கு இந்த வருஷம் ஷஷ்டி அப்த பூர்த்தி யாகும் அவர்கள் மிகவும் சந்தோஷப் படுவார்கள். அது மாதிரி என் ஜேஷ்ட பிராதா S. சுந்தரராஜனின் மனைவி ஸ்ரீமதி புஷ்பவல்லியும் இல்லை. அவர்கள் போய்கிட்டத்தட்ட ஒரு வருஷம் ஆகப்போகிறது, அவர்களுடைய ஆத்மாக்கள் நற்கதியையும் உத்தம சாந்தியடையும்படி எல்லாம்வல்லப் பகவானைப் பிரார்த்திக்கிறேன்.

மீண்டும் நான் சொல்வேன். இந்த கிரந்தம் சிந்தனை நூலாகும். முதலில் இதைப்படித்த பின்பு ஆர்வமுற்று குருவினிடம் காலட்சேப முறையில் ஸ்ரீ பாஷ்யத்தைக் கற்றல் நலம் என்று சொல்வேன்.

இப்புத்தகத்தை அச்சிட பல அச்சகங்கள் உதவி செய்தனர். அவர்களின் பெயர்கள் புத்தக ஆரம்பத்தில் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அவர்களுக்கு நான் மிகக் கடமைப்பட்டிருக்கிறேன்.

ஸ்ரீ மஹாலக்ஷ்மி சமேத ஸ்ரீமந்நாராயண திருவடிகளே சரணம்
ஸ்ரீ விஷ்ணு சித்தகுல நந்தன கல்பவல்லிம்

ஸ்ரீரங்கராஜமஹிஷீம் ஸ்ரீமத்கோதாயை நித்யமங்களம்

ஸ்ரீமதே ராமானுஜாய நம:

ஸ்ரீமதே வேதாந்ததேசிகாய நம:

Madras
17-7-87

S. ஜகந்நாராயணன்
Retd. Deputy Secretary
Ministry of Finance
Govt of India

ஸ்ரீ:

# அத்வைதம்

## சிறப்பு வாய்ந்தது முரண்பாடு அற்றது.

by

ஆத்ம வித்யாபூஷணம்
ஸ்ரீ V. S. V. குருஸ்வாமி சாஸ்திரி அவர்கள்

---

"सर्वव्यवहारोपमं शान्तं शिवमद्वैतम्" (माण्डूक्य)
सलिल एको द्रष्टाऽद्वैतः [बृहदारण्यकं]

அத்வைதம் எனப்படும் ஆத்மசொரூபம் பேதமற்றது ஆகும். விவகாரங்கள் அனைத்தும் இல்லாதது ஆகும். ஆனந்த வடிவமாகும். அமைதியின் வடிவமாகும். நீரை போன்று தூய்மை வாய்ந்ததும், எப்பொழுதும், எங்கும் பிரகாசிக்கின்றதும், ஒன்றானதும் இரண்டற்றதும் ஆக இருப்பது ஆத்மதத்துவம் என்று வேதாந்தங்கள் அறிவிக்கின்றன.

"यत्रहि द्वैतमिव भवति तदितर इतरं पश्यति इतर इतरं श्रृणोति"... ।

"यत्रत्वस्य सर्वमात्मैवाभूत् तत्केन कं पश्येत् कं केन जिघ्रेत्"...।
[बृहदारण्यकं मैत्रेयीब्राह्म]

இத்தகைய அத்வைத ஆத்ம சொரூபத்தை உள்ளபடி உணரும் சமயம் வரை [அவித்யா தசையில்] வைதீகமானதும், லௌகீகமானதுமான எல்லாவிதமான விவகாரங்களும் நிகழ்ந்து கொண்டு இருக்கின்றன. அத்வைதமான ஆத்ம சொரூபத்தின் உண்மையான உணர்வு ஏற்பட்டவுடனேயே த்வைத பிரபஞ்ச

விவகாரங்கள் அனைத்தும் மறைந்து விடுகின்றன. இல்லாமல் போகின்றன. பழுதை, சிப்பி, கானல், இருட்டில் மொட்டை மரம் ஆகியவைகளை உள்ளபடி உணராதபொழுது அவைகளில் முறையே பாம்பு, வெள்ளி, நீர், திருடன் ஆகியவைகள் தோற்ற மளிக்கின்றன. பழுதை முதலியவைகள் உள்ளபடி உணரப் பட்டவுடன், பாம்பு முதலியவைகள் மறைந்துவிடுகின்றன. இங்ஙனமே அத்வைதபொருள் உள்ளபடி உணரப்படும்பொழுது த்வைதபொருள் காணப்படுவதில்லை.

अनिश्चिता यथा रज्जुरन्धकारे विकल्पिता ।
सर्पधारादिभिर्भावैस्तद्वदात्मा विकल्पितः ॥

[माण्डूक्यकारिका चैतन्य प्रकरणम्]

இவ்வுலகில் :-

அந்திவேளையில் சிறிது இருளும் சேர்ந்தபோது பழுதை யானது - இது பழுதையே என்று தீர்மானமாக அறியப்படாத போது, இது பாம்பு அல்லது நீர்தாரை, அல்லது கம்பு என்று பலவிதமாக அறியப்படுகிறது பேசப்படுகிறது, முதலிலேயே - இது பழுதையே என்று அறியப்பட்டால் - இது பாம்பு, ஜலதாரை, கம்பு என்று நம்முடைய கைவிரல்களில்போல தவறான அறிவு ஏற்படுவதில்லை. இவ்விதமே — ஸச்சிதானந்த அத்வைதப் பொருளும் உள்ளபடி அறியப்படாதபோது - ஜீவன் பிராணன் - முதலான எண்ணிறந்த பொருளாக அறியப்படுகிறது, பேசப் படுகிறது.

निश्चितायां यथा रज्ज्वां विकल्पो विनिवर्तते ।
रज्जुरेवेति चाद्वैतं तद्वदात्मविनिश्चयः ॥

தவறான அறிவிற்க்கிருப்பிடமாயிருந்த பழுதையில் இது பழுதை என்ற தீர்மான மேற்பட்டவுடன் பாம்பு, நீர் கோடு, கோணக்கம்பு என்ற பலவிதமான தவறான அறிவுகள் மறைந்து விடுகின்றன. பழுதை ஒன்றே - உண்மை என்ற நிலையான அறிவு ஏற்படுகிறது. அவ்விதமே "नेति नेति" என்ற வேதாந்

தங்களிலிருந்து ஸகல்ஸம்ஸ்கார தர்மங்கள் அற்றது பரம்பொருள் என்ற விஞ்ஞான ஸூர்ய பிரகாசத்தால் - ஆத்மைவேதம் ஸர்வம் எல்லாம்-ஆத்மஸ்வருபமாத்திரமே ஆத்மா, காரணமற்றது, காரியமற்றது, உள்ளும், வெளியும் இல்லாதது பிறப்பு இறப்பு, மூப்பு, பயம் அற்றது, இரண்டற்றது ஆத்மா ஒன்றே உண்மையானது என்ற அறிவு ஏற்படுகிறது என்று ஸ்ரீ கௌடபாதாசார்யர் கூறுகிறார்.

எனவே அத்வைத அனுபவசாலிகளான மகான்களான பிரும்மநிஷ்டர்கள் அத்வைததத்துவத்தை விளக்கும் விஷயத்தில் த்வைதவாதிகளோ நம்மால் அனுபவிக்கப்படும் இந்த த்வைத உலகமோ முரண்பாடு உள்ளதாக ஆவதில்லை, என்று கருதுகின்றனர். ஏனெனில் த்வைதவாதிகளோ, த்வைத பிரபஞ்சமோ, உண்மையில் அத்வைதிகளிடமே தோன்றுகின்றனர். மேலும் அத்வைதம் என்ற கொள்கையை நன்கு விளக்குவதற்கு த்வைத வாதிகள் அனைவரும் பெரிதும் உபகாரம் செய்கின்றவர்களாகவே ஆகின்றனர்.

இதனை சிறிது விளக்குவோமாக ;-

இவ்வுலகில் காரியபொருள் அனைத்துமே அவை உண்டாவதற்கு முன்பு உள்ளதா? அல்லது இல்லாததா? என்ற விஷயத்தில் த்வைதிகள் கருத்து வேறுபாட்டை அடைகின்றனர். சட்டி, பானை முதலிய காரிய பொருள்கள் அவைகள் தோன்றுவதற்கு முன்பு இல்லாததனாலேயே அதற்கான முயற்சிகளை மேற்கொண்டு அவைகளை உண்டுபண்ணுகின்றோம். ஆகையால் காரிய பொருள் உண்டாவதற்கு முன்பு இல்லாததாகும் என்று சிலர் (தார்க்கிகர்கள்) கருதுகின்றனர். வேறு சிலர் சட்டி, பானைகளை அடைய விரும்புபவன் மண்ணையும், எண்ணெயை விரும்புகிறவன் எள்ளையும், ஆடைகளை விரும்புபவன் நூல்களையுமே தேடி, அலைந்து அப்பொருள்களை அடைகின்றான். இதனிலிருந்து குறிப்பிட்ட இடங்களிலேயே அந்த அந்த காரிய பொருள்கள் இருப்பதனால் அதை நாடுகின்றனர். எனவே காரியப் பொருள், உண்டாவதற்கு முன்பு உள்ளதாகவே கொள்ளவேண்டும் என்று சிலர் கூறுகின்றனர்.

பாதிப்பட்ட சுருதிகளுடைய த்வைதிகளின் கூற்றானது உண்மையை தோற்றுவிக்கின்றது. காரியப்பொருள் எனப்படுவது எப்பொழுதும் இருக்கின்ற ஆத்மாவை போன்று இருக்கும் பொருளாக ஏற்று கொள்வதற்கு முடியாததாகும். ஏனெனில் காரியங்கள் (பொருள்கள்) அழிந்து விடுவதை கண்கூடாக காண்கின்றோம். மலடிமகன் வானமலர், முயல்கொம்பு, ஆமைப்பால், இவைகளைப் போன்று காரியப்பொருள் ஒருபொழுதும் இல்லாத சூன்யப் பொருள் என்று கூறுவதற்கு இடமில்லை. ஏனெனில் இவ்வுலகம் நன்கு புலன்களால் உணரப்பட்டு விவகாரத்திற்கு விஷயமாக ஆகின்றது. இதனால் எப்பொழுதும் இருக்கும் பொருளாகவோ, எப்பொழுதும் இல்லாத பொருளாகவோ, காரியப்பொருளைக் கூறுவதற்கு இல்லை. பகவான் வாசுதேவன் கீதையில்

नासतो विद्यते भावो नाभावो विद्यते सतः
उभयोरपि दृष्टोऽन्तस्त्वनयोस्तत्त्वदर्शिभिः [गी–2]

"இருக்கும் பொருள் அழிவதில்லை இல்லாதப் பொருள் தோன்றுவதில்லை" என்று தீர்மானமாக கூறியிருக்கின்றார்.

இக்காரணத்தால் இவ்வுலகம் எனப்படும் காரியப்பொருள் இருக்கும் பொருளிலிருந்தும், இல்லாத பொருளிலிருந்தும் வேறுபட்டு, தோன்றும் காலத்தில் மட்டுமே தோன்றும் தன்மை வாய்ந்ததாகும்.

கிளிஞ்சலில் வெள்ளியானது தோன்றி, இருந்து மறைவது போலவே, அத்வைதமான ஆத்ம சொருபத்தில் இவ்வுலகம் தோன்றி இருந்து, மறைவதாகும். உண்மையில் தோற்றமோ, இருப்போ, மறைவோ இல்லை. இதுவே நேர்மையான முடிவு. இதனை

भूतं न जायते किञ्चिदभूतं नैव जायते ।
विवन्दोऽद्वयाह्येवमजातिं ख्यापयन्ति ते ॥

[माण्डूक्यम्-अलात]

காரியப்பொருள் - உண்டாவதற்கு முன்பு ஆத்மாவைப் போல் இருக்கும் பொருளானால் அது ஒருபொழுதும் உண்டா காததாகும் என்று தார்கிகர் - ஸாங்கியருடைய கொள்கையை மறுக்கின்றனர். காரியப்பொருள் தோன்றுவதற்கு முன் இல்லாதிருக்குமானால் - முயல் கொம்பு போன்று அது ஒருபோதும் உண்டாகாததாகும் என்று ஸாங்கியர்கள் - தார்கிகர்களுடைய கொள்கையை மறுக்கின்றனர் என்று இருவரும் தங்களுடைய கொள்கைகளை ஒருவருக்கொருவர் மறுப்பவர்கள் என்றும் - இருக்கும் பொருளும் உண்டாவதில்லை, இல்லாத பொருளும் உண்டாவதில்லை என்ற கருத்தில் - தார்கிகர்களும் ஸாங்கியர் களும் அத்வைதிகளாகவே இருக்கின்றனர்.

रव्याप्यमानामजाति तैरनुमोदामहे वयम् ।
विवदामो न तैःसार्धमविवादं मिबोधत ॥

[माण्डूक्य अलात]

இருப்பதோ இல்லாததோ ஒன்றும் உண்டாவதில்லை என்று தார்க்கிர், ஸாங்கியர் கூறுவதை ஸந்தோஷமாக நாங்கள் ஏற்றுக்கொள்கிறோம். அவர்களுடன் எங்களுக்கு முரண்பாடில்லை எங்களுடைய கொள்கை முறணற்றதாக தெரிந்து கொள் கிறீர்கள்.

स्वतो वा परतो वापि न किञ्चिवस्तु जायते ।
सदसत्सदसद्वापि न किञ्चिद्वस्तु जायते ॥

[माण्डूक्य अलात]

காரியப்பொருள் — தன்னிடமிருந்தோ வேறுபொருளிட மிருந்தோ இரண்டின் சேர்க்கையிலிருந்தோ இருப்பதாகவோ, இல்லாததாகவோ, இருப்பதும் இல்லாததுமாகவோ ஒரு பொருளும் உண்டாவதில்லை. இருக்கும் சட்டியிலிருந்து-வேறொரு சட்டி உண்டாவதில்லை. ஒரு துணியிலிருந்து ஒரு சட்டி உண்டா வதில்லை, சட்டியிலிருந்தும் துணியிலிருந்தும் ஒரு சட்டியும் உண்டாவதில்லை.

भूततोऽभूततोवापि सृज्यमाने समा श्रुतिः ।
निश्चितं युक्तियुक्तं च यत्तद्भवति नेतरत् ।।

[माण्डू-अद्वैत]

உலகங்கள் அனைத்தும் படைக்கப்படுகின்றன என்று வேதங்கள் கூறுகின்றன. எனினும் அப்படைப்பை, குயவனுடைய மெய்யான சட்டிபானைகளின் படைப்பு போன்றும் கூறலாம், மாயாவியினுடைய பொய்யான மாயப்பொருள்களின் படைப்பு போன்றும் கூறலாம். ஆனால் - எது பிரமாணத்திற்கும் - யுக்திக்கும் பொருத்தமாயிருக்கின்றதோ - அதனையே விவேகிகள் ஏற்றுக்கொள்ளவேண்டும். இவ்வுலகத்தின் - காரணமான வஸ்துவை, இருப்பு அறிவு ஆனந்தமானவைகளின் வடிவம் - இரண்டற்றது, ஒன்றானது உருவமற்றது - உருப்பற்றது பெயரற்றது, உள்ளிலும் புரத்திலும் இருப்பதாகும் என்று வேதாந்தங்கள் கூறுகின்றன உள்ளமிருக்கும்போது மாத்திரம்- இவ்வுலகம் அறியப்படுகிறது-நல்லுறக்கத்திலும், ஸமாதியிலும்- மூர்ச்சையிலும் - உள்ள இல்லாதநிலையில் உலகம் அனுபவிக்கப் படுவதில்லை. பரம்பொருளின் மாயையால் இவ்வுலகம் படைக்கப் பட்டதென்ற கொள்கையிலேயே வேதாந்தபிரமாணமும் யுக்தியும் இருக்கிறது ! அதுவே ஏற்க்கத்தகுந்தது.

न कश्चिज्जायते जीवः सम्भवोऽस्य न विद्यते ।
एतत्तदुत्तमं सत्यं यत्र किञ्चिन्नजायते ।।

[माण्डूक्य-अद्वैत]

எனவே "படைப்பு" என்பதே உண்மையில் இல்லை. கர்த்தா போக்தா எனப்படும் ஜீவாத்மா உண்டாவதில்லை - அவ்விதம் உண்டாவதற்குக் காரணம் இல்லை ஆத்மஸ்வருபத்தில் - ஒன்று உண்டாவதில்லை என்பதே - ஸத்யங்களுக்குள் உத்தம சிறந்த ஸத்யமாகும்.

வேதாந்த சம்பிதாயம் அறிந்த பரமாச்சாரியர்களான ஸ்ரீ கௌடபாதர்கள், "அத்வைதமான தத்துவத்தில் ஒன்றும்

ஒருபொழுதும் உண்டாவதில்லை'' என்று தக்க யுக்திகளுடனும் பிரமாணங்களுடனும், சான்றுகளுடனும் தெளிவாக உபதேசித்திருக்கிறார்கள்.

**அத்வைதமே உண்மையான தத்துவமென்றறியும் வழி :—**

கொசவனுடைய சூளையில் காணப்படும் சட்டி பானைகள் அனைத்தும் மண்ணில் செய்யப்பட்டவைகள். ஆகவே மண்ணிலிருந்து வேறுபட்டவைகள் அல்ல. மண் மாத்திரமே உண்மையானது, அதில் காணப்படும் உருவங்கள் மாறுதல் உடையவைகள், நிலையற்றவைகள். எனவே அவைகள் உண்மையானவைகள் அல்ல. இவ்விதமே தங்கத்தாலோ, வெள்ளியாலோ, இரும்பாலோ செய்யப்பட்ட பொருள்களும் தங்கம், வெள்ளி, இரும்பு மாத்திரமே ஆகும். எனவே—இவ்வுலகில் காணப்படும் பொருள்கள் அனைத்துமே இருப்புடன் (ஸத்தையுடன்) இருக்கின்றன. இருப்பின்றி (ஸத்தையின்றி) ஒரு பொருளும் உணரப்படுவதில்லை. அதனால் உலகம் ஸத்தில் தோன்றி, ஸத்திலேயே நின்று ஸத்திலேயே மறைகின்றது. "सन्मूलाः सोम्येमाः सदायतनाः सत्प्रतिष्ठाः'' என்று சாந்தோக்யோபநிஷத் 6வது அத்யாயத்தில் கூறப்படுகிறது. ஸத்தே உண்மை - பலதரப்பட்ட மாறுதலுடன் நிலையற்ற இவ்வுலகம் ஸத்திலிருந்து வேறுபட்டதில்லை. அதில் தோன்றுவது மட்டுமே உண்மையானதல்ல.

தினந்தோறும் நல்லுறக்கத்தில் மாந்தர் அனைவரும் :- இவ்வுலகம், தன்னுடல் உயிர், புலன், உள்ளம் இவைகளை உணருவதில்லை, விழித்தபின் - முன்பு கூறியவைகளை தன்னில் மறைத்து கொண்ட அறியாமையுடன், தன்னிருப்பை மட்டுமே உணருகிறான். நல்லுறக்கத்தில் ''ஸத்'' என்ற தன்னுடைய ரூபத்தில் மட்டுமே இருக்கின்றான் என்று சாந்தோக்யோபநிஷத் உபதேசிக்கிறது. 'स्वं ह्यपीतो भवति तस्मात्स्वपितीत्याचक्षते' என்று स्वपिति (ஸ்வபிதி) என்ற வடமொழி சொல்லிற்கு 'தன்னில் லயித்திருக்கிறான்' என்று விளக்கத்தையும் அளித்திருக்கிறது.

முமுக்ஷுவானவன் - முன்பு கூறிய முறையைத்தழுவி - இவ்வுலகத்தின் காரணம் ''ஸத்'' மாத்திரமே என்று தீர்மானமாக

உணர்ந்து நனவு கனவு, உறக்கம், ஆகிய மூன்று நிலைகளைத் தவிர்த்து நான்காவதான ஸமாதி நிலையில் ''ஸத்ரூபமாகவே'' நீண்டகாலம் நிலை - பெற்று விட்டால் - ''அக்ஞானம்'' அறவே ஒழிந்து - இரண்டற்ற ''ஸச்சிதானந்த'' வடிவத்தை உணருகின்றான். இவ்விதம் யமதர்மராஜா - நசிகேதஸ் என்ற முனி குமாரனுக்கு கூறியதாக

नैव वाचा न मनसा प्राप्तुं शक्यो न चक्षुषा ।
अस्तीति ब्रुवतोऽन्यत्र कथं तदुपलभ्यते ॥
अस्तीत्येवोपलब्धव्यः तत्त्वभावेन चोभयोः ।
अस्तीत्येवोपलब्धस्य तत्त्वभावः प्रसीदति ॥

கடோப - நிஷத்'' ஆறுவது வல்லி 12, 13 மந்திரங்கள் உபதேசிக்கின்றன.

**அத்வைதம் நன்கு அனுபவிக்கப்படும்போது அவ்வனுபவத்தின் இன்மையால் தோன்றிய த்வைதம் - அறவே மறைந்து விடுகிறது:—**

அத்வைதமான தத்துவம் — த்வைதம் போன்று தோற்மளிக்கும்போது வைதிகமானதும், லௌகிகமானதுமான செயல்கள் நிகழ்கின்றன. உண்மையான அத்வைதமான ஆத்ம ஸ்வரூபம் மட்டுமே உணரப்படும்போது - எல்லாவிதமான செயல்களும் அற்று போகின்றன. ஆத்மா ஒன்றே அழியாத அத்வைதமான உண்மைப் பொருளாகும். என்று யாக்ஞ்ய வல்க்ய முனி - மைத்ரேயி எனப்படும் தம் மனைவிக்கு உபதேசித்ததாக ''பிருஹதாரண்யக உபநிடதம்'' உபதேசிக்கின்றது.

இவ்வுலகம் அனைத்தும் உண்மையான அத்வைதாத்மஸ்வரூபத்திலிருந்து வேறுபட்டதில்லை என்ற உண்மையறிவு ஏற்பட்டவனுக்கு - நீண்டகாலமாக தவிர்க்க முடியாமல் தொடர்ந்து வரும் சோகம், மோகம், அதைச் சேர்ந்த சம்சாரம் அறவே மறைந்து விடுகிறது, என்று ஈசாவாஸ்யம் என்ற உபநிஷத் அறிவிக்கின்றது.

**ஞானமே—மோக்ஷ ஸாதனம்**

**அக்ஞான நிவிருத்தியே—மோக்ஷமாகும்**

''பரம் பொருளான ப்ரம்மதத்வம் - தன்னுடைய அத்வைத ஸ்வருபத்தை உணராததால், ஜீவத்தன்மையை அடைந்து ஸம்ஸாரியாகி துன்பத்தை. அனுபவித்தது, பின்னர் குருகிருபையால் அவர் உபதேசப்படி ''ப்ரும்மமே நான்'' என்று தன்னை உள்ளபடி உணர்ந்து அத்வைதப் ப்ரும்மமாகவே ஆயிற்று. **"ब्रह्म वा इदमग्र आसीत् तदात्मानमेव अवेत् "अहं ब्रह्मास्मि" इति तस्मात् तत् सर्वमभवत्" [बृहदारण्यकम्]** என்று பிருஹதாரண்யகம், கூறுகிறது.''

''ப்ரும்மத்தை அறிந்தவன் ப்ரும்மமாகிறான்.'' ப்ரும்மத்தை உள்ளபடி உணர்ந்தவுடன் - ஸம்ஸாரம் அனைத்தும் அழிந்து விடுகிறது.'' இவை போன்ற **"तमेव विदित्वा अतिमृत्युमेति" "ज्ञात्वादेवं मृत्युपाशाद्विमुक्तः" ' भिद्यते हृदयग्रन्थिः तस्मिन्दृष्टे परावरे" "एतद्यो वेद निहितं गुहायां सोऽविद्याग्रन्थिं विकिरति" "तत्र को मोहः कः शोक एकत्वमनुपश्यतः" "स यो ह वै तत्परमं ब्रह्मवेद—तरति शोकं तरति पाप्मानं गुहाग्रन्थिभ्यो विमुक्तोऽमृतो भवति।" "तस्याभिध्यानात् भूयश्चान्ते विश्वमायानिवृत्तिः" "प्रतिबोधविदितं मतं अमृतत्वंहि विन्दते' "तस्मै तमसस्पारं दर्शयति सनत्कुमारः"** வேதாந்தங்கள் ஞானத்தால் மாத்திரமே - முக்தியைக் கூறுகின்றன. எந்த ஒரு பொருளுடைய உண்மையான அறிவால் - முன்பு தோன்றிய பொருள் மறைந்து விடுகிறதோ அந்தப்பொருள் - அது தோன்றிய இடத்தின் உண்மையான ஆதாரப் பொருளின் அறிவின்மையால் தோன்றியதே ஆகும். உதாரணம் - பழுதைப் பாம்பு, கிளிஞ்சல் வெள்ளி முதலியன.

ஆகவே அத்வைதாத்ம தத்துவத்தை தவிர்த்து மீதமுள்ள அனைத்தும் அக்ஞானகல்பிதமே. உண்மையானதல்ல. எனினும் அத்வைதாத்ம ஸாக்ஷாத்காரம் ஏற்படும் வரை த்வைத பிரபஞ்சம் அனைத்தும் பிரமாணமாகும். கனவில் உண்மையாகவே அனுபவிக்கப்படுகின்றன ஸம்பவங்கள் - விழித்தவுடன், பொய்யாகின்றன. அவ்விதமே அத்வைத ஆத்மா அறியப்படாத நிலையில் விவகாரம் அனைத்தும் ப்ரமாணமே.

ஜீவன் நீண்டகாலமாக துடர்ந்துவரும் - உண்மையான அத்வைதப் பொருளை துலங்காமலும் பொய்யான த்வைதப் பொருளை துலங்கும்படி செய்கின்ற மாயையாகின்ற ஸ்வப்பனத்திலிருந்து-ஸத்குருவின் உபதேசத்தால், அத்வைதாத்மஸ்வருபத்தில் விழித்து கொண்டவுடன் கனவு, நனவு, பிறப்பு, அற்ற அத்வைதப் பொருளை உணருகிறுன். முந்திய த்வைதப்பொருள்கள் பொய்யாகவே ஆகின்றன.

''अनादिमायया सुप्तः यदा जीवः प्रबुध्यते ।
अजमनिद्रमस्वप्नं अद्वैतं बुध्यते तदा'' ।।

[माण्डूक्यकारिका-1-16]

என்று ஸ்ரீ கௌடபாதாசாரியார் கூறுகின்றனர்.

ஒரு மாயாவி பூமியில் ஒரு கம்பை நட்டு அதன் மீது கயிறைக் கட்டி அதனுல் மேலே சென்று, இரண்டு மனிதர்கள் சண்டையிட்டு ஒருவர் ஒருவரைக் கொன்றதாகக் காண்பிக்கிறுன். உண்மையில் மாயாவீ ஒருவனே பூமியில் நிற்கின்றுன். இவ்விதமே பரமாத்மா ஒருவனே - ஸ்தூலம், ஸீக்ஷ்மம், காரணம் ஆகிய ப்ரஞ்சங்களையும், நனவு, கனவு, உறக்கம் ஆகிய நிலைகளையும் - அவைகளை அனுபவிக்கும் விச்வன், தைஜஸன், ப்ராக்ஞன். இவர்களையும் தோற்றுவிக்கின்றுன். பரமாத்மா ஒருவனே - உண்மையானவர். உருவமற்றதும், அவயமற்றதுமான ஆத்மாவிலிருந்து உலகங்கள் மாயையால் தோன்றி உண்மையாய் படைக்கப்பட்டவைகள் போன்று துலங்குகின்றன, சட்டி பானைகளுக்கு மண் போன்று, உலகங்களுக்குக் காரணமாக பரம்பொருளைக் கூறினுல் பரம்பொருள் உருவமுள்ளதாகவும் அவயவமுள்ளதாகவும் அழிவுள்ளதாகவும் ஆகும். ஆத்மா ஒன்றுனுலும் எங்குமிருப்பினும் ஆகாசம் போன்று ஒன்றுடனும் ஒட்டுவதில்லை. ஆத்மா ஒன்றுனுலும் பலவிதமான உபாதிகளுடைய சேர்கையால் பலவிதமாக ஆகாசம் போன்றும், காற்றையும், தீயையும் போன்றும் காணப்படுகிறது. மாந்தர்கள் அனைவருக்கும் கண்ணுக இருப்பினும் சூரியன் நம்முடைய கண்ணிற்கு ஏற்படும் நோய்களை அடைவதில்லை. ஒரு சட்டியிலுள்ள ஆகாசம் புகையால் கேட்டை

யடைந்தால் எல்லா சட்டியினுடைய ஆகாசங்களும் கேட்டை அடைவதில்லை. அங்ஙனமே ஆத்மா, மாந்தர்கள் அனைவருடைய உள்ளத்திருப்பினும் அங்குள்ள குற்றங்களை அடைவதில்லை.

यथा सर्वगतं सौक्ष्म्यात् आकाशं नोपलिप्यते ।
सर्वत्रावस्थितो देहे तथात्मा नोपलिप्यते ॥

[गी-13-32]

अग्निर्यथैको भुवनं प्रविष्टः रूपं रूपं प्रतिरूपोबभूव ।
एकस्तथा सर्वभूतान्तरात्मा रूपं रूयं प्रतिरूयो बहिश्च ॥
वायुर्यथैको भुवनं प्रविष्टो रूपं रूपं प्रतिरूपो बभूव ।
एकस्तथा सर्व भूतान्तरात्मा रूपं रूपं प्रतिरूपो बहिश्च ॥
सूर्यो यथा सर्वलोकस्य चक्षुर्नलिप्यते चाक्षुषैः बाह्यदोषैः ।
एकस्तथा सर्वभूतान्तरान्मा न लिप्यते लोकदुःखेन बाह्य ॥

[कठोपनि-5-9, 10, 11,]

यथैकस्मिन्घटाकाशे रजोधूमादिभिर्युते ।
न सर्वे सम्प्रयुज्यन्ते तद्वज्जीवाः सुखादिभिः ॥

[माण्ड्कल्ये-अद्वैतप्रकरणे]

என்று பகவத்கீதை, கடோபநிஷத் மாண்டூக்ய காரிகை ஆகிய பிரமாண நூல்கள் கூறுகின்றன.

உண்மையான வருங்காலத்திய ஸம்பவங்களுக்கு பொய்யான ஸ்வப்னம் காரணமாவது போல உண்மையான மோக்ஷத்திற்கு பொய்யான சாஸ்திரம் குருஉபதேசம் ஆத்மஞானம் காரணமாகின்றன. மத்யபானம் செய்து மயக்கமுற்ற யானைப்பாகன், யானை மீது இல்லாதிருப்பினும் யானை மீதிருக்கும் யானைப்பாகனை கூப்பிட்டு அவனுடைய யானையை தன்னுடைய [இல்லாத] யானையுடன் சண்டையிடும்படி அழைக்கிறான். அப்போது உண்மையாக யானை மீதிருக்கும் யானைப்பாகன் மத்யபானம்

செய்து மயக்கமுற்றிருக்கும் யானைப்பாகனுடைய கூற்றிற்கு செவிசாய்ப்பதில்லை. அவ்விதமே அறியாமையால் தோன்றிய த்வைத் விவகாரங்களை முரண்ணுள்ளவைகளாகவே உணருவ் தில்லை. த்வைதம் மாயையால் மட்டுமே தோன்றுவதாகும். அத்வைதம் எங்கும் எப்போதும், எல்லாமாகவும், உண்மையாகவும் இருப்பதாகும்.

मायामात्रमिदं द्वैतं अद्वैतं परमार्थत:

இவ்விதம் அத்வைதம் சிறப்புற்றதும் முரணற்றதுமாகும் என உணர வேண்டும்.

**ஓம் தத்ஸத் பிரும்மார்ப்பணம்**

**ஸ்ரீ V. S. V. குருஸ்வாமி சாஸ்திரிகள்**
**26-4-1985**

# பூஜ்யபகவத்பாதாள் ஸ்ரீ சங்கராச்சாரியாரின் வாழ்க்கை வைபவம்

அத்வைத சித்தாந்தத்தை ஏற்படுத்திய ஸ்ரீ சங்கரர் கேரள ராஜ்யத்திலே காலடி க்ஷேத்ரத்திலே — பிராம்மண குலத்திலே — சிவகுரு, ஆர்யாம்பாள் இவ்விருவருக்கும் திருக்குமாரராக அவதரித்தார். சிறு வயதிலே தந்தையை இழந்தார்; ஐந்தாவது வயதில் உபநயனம் செய்யப்பெற்று - சிறுவயதிலே, ஆற்றிலே நீராடும்போது, அவருடைய காலை ஒருமுதலைப்பற்றி இழுக்க, அந்த சமயம் சந்யாஸம் மேற்கொண்டால், முதலையிடமிருந்து விடுபடலாம் எனச்சொல்ல, தாயும் சம்மதித்ததுதான் தாமதம் - முதலையும் தன் பிடியை விட்டது. சங்கரர் வீடு துறந்து, துறவறம் யேற்று — நர்மதைக்கரை யடைந்து, ஸ்ரீ கோவிந்த பகவத் பாதரிடம் சிஷ்யரானுர்—சந்யாசம் பெற்று — உ ப தே ச மு ம் பெற்ருர். அங்கிருந்து காசி வந்துசேர்ந்தார். இங்கேதான் அவர் உபநிஷத்துக்கள், பிரம்ம சூத்ரம் - பகவத்கீதை ஆக்ய பிரஸ்தானத்ரயத்திற்கு விரிவுரை எழுதினுர். அந்த சமயம் அவர் குமாரில பட்டரை சந்தித்து - அவருடைய பிரேரணையின் மீது - மாகிஷ்மதி நகரம் சேர்ந்து - பிரபல கர்மமீமாம் ஸகரான மண்டன மிசிரரை வாதுக்கு அழைத்தார். அவருடைய மனைவி உபய பாரதியை — மத்ய ஸ்தமாகக் கொண்டு வாதம் செய்தார்; இது பற்றி பிற்பாடு நாம் சொல்வோம்.

பூஜ்ய ஸ்ரீ சங்கரர் கங்கைக் கரையில் ஒருநாள் சாரீரக ஸூத்ர பாஷ்யத்தை சிடர்களுக்கு உபதேசம் செய்து வருகையில், வியாஸர் அவர் முன் தோன்றினுர். சாரீரக சாஸ்திரம் — சாரீரன் ஜீவன் - அவனுக்கு "கம்" (சுகம், ஆனந்தம்) - எதனுல் உண்டாகிறதோ - அத்தகைய உண்மையான அறிவைப் புகட்டும் நூல் - சாரீரக சூத்ரபாஷ்யம்.

வியாஸர் அந்தணர் வடிவாகா யதீஸ்வமரிடம் சாரீரக சாஸ்திரத்தின் மூமிருபது அத்யாயத்தைப் பற்றியுள்ள - ஆரம்

பத்திலிருக்கும்-ததந்தர பிரதிபத்தௌ ரம்ஹதி ஸம்பரிஷ் வக்தஹ பிரச்ன நிருபணாப்யாம் - என்கிற சூத்திரத்தின் பொருளை விளக்கச் சொல்ல - சங்கரர் பதில் கூறினார்-ஜீவன் சரீரத்தை விடும்போது - சூக்ஷ்ம பூதங்களுடன் கூடியவனாக வேறு உலகிற்குப் போகிறான் — இந்த விஷயம் தாண்டி உபநிஷத்தில் கௌதமருடையவும், ஜைவலியினுடையவும் வினா விடைகளில் கூறப்பட்டுள்ளது. வந்திருந்த வியாஸர் பலவிதமாக ஆக்ஷேபிக்க - சங்கரர் ஒவ்வொரு வாதத்திற்கும் தக்கபதில் கூறி - எட்டுநாள் வாதத்தில் - ஒன்றும் முடிவு பெறாவண்ண மிருக்க - பத்மபாதர் தமது குருவான சங்கரருக்கு - "இந்த அந்தணர் வியாஸபகவான்தான்", என்று கூற — அப்போது கூறிய வியாஸ பகவானின் வாக்யங்கள் பிரஸித்தமானவை -

त्वं शङ्करः शङ्कर एव साक्षात् व्यासस्तु नारायण एव नूनम्।
तयोर्विवादे सतत प्रसक्ते किं किङ्करोऽहं करवाणि सद्यः—

சங்கரபகவானே சங்கரமுனியாக அவதரித்தார். ஸ்ரீமந் நாராயணரே வியாஸமுனிவர் ஆவதுபோல. நீங்கள் இருவர் களும் வாதம் செய்வதால் - யான் என்ன செய்வேன்? - என்று பத்மபாதர் சொல்ல - சங்கரமுனிவர் வியாஸமுனியை வணங்கி, ஆசிர்வாதம் வேண்டினார்; மின்னல் கொடிகளால் சூழப்பட்ட நீர் மேகம் போல காந்தியுடன் கூடியவரும் - பொற்குவியல்கள் போல ஜடாமுடியினால் அலங்கரித்திருப்பவரும், சின்முத்ரையினால் விளங்குபவருமான வ்யாஸபகவான் சங்கரரை ஆசீர்வதித்து - "நீர் எங்களைப் போன்றவர்களுடைய ஆத்மநிலையை அடைந்து விட்டீர். சுகமுனியைப்போல எனக்கு ஆனந்தம் அளிக்கிறீர். உமது பிரும்ம சூத்ரபாஷ்யம் பிரசித்தி ஆகக்கடவது, ஸித்தர்கள் சபையில் இது பற்றி பிரஸ்தாவம் வர - நான் உம்மைக் காண இங்கு வந்தேன்." என்று கூற-

**சங்கரர்:-** சூரியனுக்குத்தீபத்தினால் ஆரத்தி எடுப்பது போலவும்; மஹோததிக்கு ஜலாஞ்சலி செய்வது போலவும் - இருக்கும் நிலையில் வெட்கமுற்றேன். தங்களுடைய சிஷ்ய ருடைய சிஷ்யரின் சிஷ்யனாகிய (வியாஸர் — சுகர் — கௌட பாதர் - கோவிந்தர் - சங்கரர் - என்கிற ஆசார்ய சிஷ்ய பரம் பரையில் வரும்) என்னைத் தயாளுவாகிய நீர் அருள் செய்வீராக;

வியாஸர் :- மீமாம்ஸா — வியாகரணம் அறிந்தவனுக்கு விருக்கிறீர். தர்க்கத்திலும் பாண்டித்யம் பெற்றவனுகவும் விருக்கிறீர். சூத்ரங்களின் உண்மையான அர்த்தங்களை அறிவது மிகக் கடினம் - நீர் ஸர்வக்ஞன். ஸாங்கியன், நையாயிகன் வெவ்வேறு வழிகளில் தவறுதலாகச் சென்றனர் அதைத் திருத்தி - வேத மார்க்கத்தை ஸ்தாபிக்க அவசியம் யேற்படுகிறது. எம்முடைய சூத்ரபாஷ்யத்திற்கு - பல வ்யாகியானங்கள் எதிர் காலத்திலும் தோன்றும். நீர் பேதவாதங்களை வென்று - வேதாந்த நூலை பிரசாரம் செய்வாயாக''

சங்கரர் :- எனக்கு ஆயுள் முடியும் காலம் வந்துவிட்டது. உமது ஸந்நிதானத்திலே உடலைத்தியாகம் செய்கிறேன்.

வியாஸர் :- உன்னால் பல அறிஞர்கள் வாதில் வெல்லப் படவேண்டியதாயிருக்கிறது. உனக்கு விதியினால் எட்டு வயது. சந்யாஸம் பெற்றுக் கொண்டதால் - எட்டு வயது அதிகமாகப் பெற்றாய். இன்னும் பதினாறு ஆண்டுகள் நீ பூலோகத்தில் வாழ்ந்து - உனது சாஸ்திரத்தை பிரசாரம் செய்வாய். உமது சித்தாந்தம் அத்வைதம் எனப்பெயர் பெறும் — என்று கூறி அந்தர் தியானமானார்,

சங்கரர் அதற்குப் பிறகு கர்ம மார்க்கத்தில் தேர்ந்த குமரில பட்டரை சந்திக்க அவருடைய அபிப்ராயத்தை அறிய விரும்பி பிரயாகைக்குச் சென்று-கங்கைக் கரையில், பிரசித்தி பெற்ற பிரபாகரர் முதலிய சீடர்கள் சூழ-உமித்தீயில் உயிருடன் போராடும் நிலைமையிலிருந்த குமரிலரைக் கண்டார். நாஸ்திகர்களான பௌத்தர்களை வென்று, வேதமார்க்கத்தைப் பிரதிஷ்டாபனம் செய்தவரும், மஹாதேஜஸ்ஸுடன் விளங்கும் குமரிலரைக் கண்டதும்-குமரிலர் சங்கரரிடம் சொன்னார் "உமது தர்சனம் கிடைப்பதற்கு அரிது. சுகதுக்கங்கள் காலத்தினால் ஏற்படுகின்றன. உம்மால் ஆஸ்திக மதம் மார்க்கம் நிலைபெற வேண்டும். நையாயிகர்களுடைய யுக்தி வாதங்கள் என்னால் கண்டிக்கப்பட்டன. மறைகள் இறைவனால் இயற்றப்பட்டவைகளல்ல. அபௌருஷேயக-ஸ்வத:பிரமாணம்-ஸ்வயமாகவே பிரமாணங்கள் இந்தக் கருத்தை நிலைநிறுத்துவதற்காக, ஈஸாநோ பூதபவ்யஸ்ய

என்கிற வேத வசனங்களாலே-யுக்திகளாலும் ஈசுவரன் உள்ளார் என்று தீர்மானம் செய்யப்பட்ட கொள்கையை நிராகரித்ததால், பாபமுற்று, பிராயச்சித்தமாக உமியில் உயிர் விட்டுக்கொண்டிருக்கிறேன். ஈஸ்வரன் இல்லாவிடில் உலகம் உய்யாது. வேத விருத்தமான பௌத்தர்களை வெல்ல அவர்களுடன் வாதம் செய்தேன். ஜைமினி முனியை மூல காரணமாகக் கொண்ட பூர்வமீமாம்ஸா சாஸ்திரத்தில் மனப் பற்றுக்கொண்டு-நிரீஸ்வர மீமாம்ஸகன்-என்பதால் பரமேஸ்வரன் இல்லை யென்று நிராகரித்து-பாபம் செய்தேன், அதனால் இறந்து கொண்டிருக்கிறேன். நீ கைலாஸ வாஸியாகிற பரமேஸ்வரனே. உம்முடைய அத்வைத சித்தாந்தம் புகழ்பெற்று விளங்குக-''உமது ''ஞான மார்க்கம்'' பிரசித்தி பெற வேணுமாகில், நீர் மண்டனமிச்ரரை வாதில் வெல்லவேண்டும். அவர் வெல்லப்பட்டாராகில் மற்ற மதங்கள் யாவும் உம்மால் வெல்லப்பட்டதாகும். அவர் எப்போதும் கர்ம மார்க்கத்தைப் புகழ்கின்றார். பிரவிருத்தி மார்க்கத்தில் இருந்து கொண்டு-இல்லற தர்மங்களைச் செய்துகொண்டிருக்கிறார். அவர் ஸ்வாதீனம் செய்யப்பட்டால், உமது நிவிருத்தி மார்க்கம் ஸ்தாபிதமாகும் என்று கூறி உயிரை விட்டார்.

முன்பு கூறியபடி-சங்கரர் மண்டனமிஸ்ரரை வாதில் வென்றார். மண்டனமிஸ்ரரைக் காண அவர் வீட்டில் நுழைந்த போது, இரு பெண்கிளிகள் தங்களுக்குள்ளே வாதம் செய்யக் கண்டு-உற்றுக் கேட்டார். ''வேதங்கள் ஸ்வயமாக பிரமாண மில்லை. பகவானால் உச்சாரணம் செய்யப்பட்டமையால், பிரமாணம். நற்வினைகள், தீய வினைகள் பலனை அளிக்கின்றன; இதற்கு மாறாக, ஈசுவரன் பயன்களை அளிக்கிறவன்; உலகம் நித்யம் என்றும் அநித்யம் என்றும் விஷயங்களை வெளிவாயிலில் கிளிகள் சர்ச்சை செய்வது கண்டு இதுதான் மண்டன பண்டிதருடைய தர்சனம் எனப் புரிந்து வாதத்திற்கு உள் நுழைந்தார். அப்போது மண்டனமிஸ்ரர் இல்லறம் நடத்துபவராக-சிரார்த்தம் செய்து கொண்டிருக்க - வாத பிக்ஷையைக் கேட்டுக் கொண்டே யதீஸ்வரரான சங்கரர் நுழைந்தார். இருவர்களுக்கும் வாதம் பல நாட்கள் நடந்தன. உபய பாரதியினால் இருவர்களுக்கும் வாத ஆரம்பத்தில் போட்ட மாலைகளில்-தன் பதியாகிய மண்டன

மிஸ்ரரின் கழுத்தில் போடப்பட்டிருந்த மாலை வாட, ஸ்ரீ பரமஹம்ஸ சங்கராச்சாரியாரின் மாலை வாடாமலிருப்பதைக் கண்டு அவரே வாதத்தில் வென்றவர் என்று தீர்ப்புக் கூறி-ஸரஸ்வதி தேவியின் அம்சமான உபயபாரதி-சங்கரரை தன்னுடன் வாதிக்க வேண்டினாள்.

மண்டனமிஸ்ரரின் பக்ஷம்-சித்ரூபியான பரமாத்மாவை கூறும் விஷயத்தில் வேதவசனங்கள் பிரமாணமன்று. தனிப்பட்ட பதங்கள் (அரசன், குதிரை, குடம் என்கிற பதங்கள்) ஸித்தமாக யிருக்கும் ஒரு பொருளை விளக்குகிறதில்லை. கிரியையுடன் சேர்ந்தால்தான் (குதிரையைக் கொண்டுவா-குடத்தைக் கொண்டு வா, என்கிற செயல்களுடன் சேர்ந்தால்தான்) பொருள் விளக்கம் யேற்படும் - ஆகவே கிரியை சம்பந்தமில்லாத ஸச்சிதாநந்த வஸ்துவாகிற பிரும்மத்தை உணர்த்துவதற்கு வேத வசனங்கள் சக்தியற்றவை. கர்மங்களினால்தான் முக்தி யேற்படுகிறது- ஆகவே விதிக்கப்பட்ட கர்மாக்கள் வாழ்நாட்கள் முழுவதும் விடாமல் செய்யப்படவேண்டும்'' என்பதே.

சங்கரர் உத்தாலகர் - श्वेतकेतो, तत्त्वमसि ; யாக்ஞ்ய வல்கியர் अभयं वै जनक प्राप्तोऽसि- ; अहं ब्रह्मास्मि - என்கிற வசனங்களால் ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும் பேதமில்லை என்றார். முக்தி செயலினால் யேற்படுகிறது. உபாஸனை மனத்தின் செயல். ஆகவே உபாஸனையின் பயனாகிய முக்தியும் அழிவுள்ளது-நித்ய சுகமாகாது. மானஸப் பிரத்யக்ஷமான சாக்ஷிஞானம் அவித்யையுடன் கூடிய ஜீவனுக்கும், மாயையுடன் கூடிய பரமாத்மாவுக்கும் பேதத்தை உணர்த்துகிறது. அவித்யை, மாயை என்கிற உபாதிகள் விலகினால் இருவருக்குமுள்ள அபேதத்தை உபநிஷத் உபதேசிக்கிறது. ஆகவே பிரத்யக்ஷ பிரமாணத்திற்கும் உபநிஷத்திற்கும் விரோதமில்லை. அதாவது, ஆவரணசக்தியை முக்யமாகக் கொண்டது அவித்யை. தான் எதனை ஆஸ்ரயித்ததோ, அதனுடைய உண்மை நிலைமையை மறைத்து, வெளிப் பொருள்களை மறைக்கும் தன்மையுள்ளது அவித்யை, ஆனால் மாயையோ தன் ஆஸ்ரயத்துக்கு எவ்வித தீங்கை விளைவிக்காமல் பற் பல மாறுபாடுகளை வெளியில் தோற்றவைப்பது மாயை - இது ஈஸ்வரனை ஆஸ்ர

யித்தது, உலக ஸ்ருஷ்டிக்குக் காரணம். பிரத்யக்ஷ பிரமாணத்திற்கும் சுருதிக்கும் விரோதம் யேற்படின், அபச்சேத நியாயத்தை அனுஸரித்து-பலமுள்ளதும் பின்னர் யேற்பட்டதுமாகிறது மான இந்த நியாயத்திஞல்-சுருதியிஞல் பிரத்யக்ஷம் பாதிதம் எனக் கூற வேண்டும். ஆத்மஞானத்திஞல் பேதபுத்தி நாச மாகிறது. வாக்ய ஜன்யஞானம் என்பது பேதஞானத்தை நாசமாக்குகிறது. நிர்குண பிரும்ம ஞானம்யேற்படுகிறது. சுகம் துக்கம் என்று ஜீவன் தன்னை குணங்களுள்ளவனுக உணருவ்தால் பேதஞானம் நீங்குவதில்லை. பேதம் உபாதியிஞல் யேற்படுகிறது. சங்கரர் பிரத்யக்ஷம் அனுமானம் முதலிய பிரமாணங்களைக்கூறி, சுருதியினுலும் அபேதத்தை விளக்கினுர். த்வாஸுபர்ண என்கிற சுருதி ஜீவபரமாத்மாக்களைக் கூறுவதாகச் சொல்லப்படுவது-வாஸ்தவத்தில் அவைகளைக் கூறவில்லை. கர்ம பலன்களை அனுபவிக்கும் புத்தியைக்காட்டிலும், ஆத்மா வேறு என்று சொல்லி, ஆத்மாவிற்கு எவ்விதத்திலும் கர்ம பந்தமில்லை. என்பதைப் போதிக்கிறது. இதற்கு பைங்கிரஹஸ்யம் ஆதாரம். அதில் புத்தி அனுபவிக்கின்றது-என்றும், ஆத்மா சாக்ஷியாகவிருக்கிருன் என்றும், வியாக்யானம் கூறுகிறது. ஆகவே சித்தத்தையும் ஜீவனையும் பற்றிக் கூறுகிறது. இரும்பை நெருப்பின் அருகே கொண்டுவருவதால், இரும்பு சுடுகிறது-அதுபோல சித்தினுடைய சம்பந்தத்தால், ஜடமான புத்தியும் பயனை அனுபவிக்கிறது. ஆகவே தத்வமஸி போன்ற ம்ஹாவாக்யங்கள் மிக்க பலமுள்ள பிரமாணங்கள், அவைக்ள் பேத சுருதியைப் பாதிக்கின்றன மற்றையப் பிரமாணங்கள் வேதத்திற்குப் பலத்தை அளிக்க மாட்டா. நேர்மாருகத் தெரிந்த விஷயத்தை கூறுவதால் வேதவசனத்தின் பலத்தைக் குறைப்பதாகும். இவ்விதம் வாதம் நிகழ்ந்து கொண்டிருக்கும் போது, சங்கர முனியினுடைய மலர்மாலை வாடாமலும், மண்டனமிச்ரரின் மாலை வாடிப் போயிற்று. அப்போது உபயபாரதி, இருவரும் பிக்ஷைக்கு எழுங்கள்-என்று கூறி மீண்டும் சொன்னுள்-" எனக்கு துர்வாஸ முனிவரால் கொடுத்த சாபத்தின் முடிவுகாலம் தங்களுடைய வெற்றியினுல் முடிவு பெற்றது. நான் என் உலகுக்குப் போகிறேன்" என்று சொல்ல, சங்கரர் அவளைத் தடுத்தார். இருவருக்கும் வாதம் நடந்தது.

வேதம் அத்வீதியமான ஆத்மாவைத்தான் கூறுவதில் முக்கிய தாத்பர்யம் கொண்டது. நையாயிகனுடைய அனுமானு வாதத்தைக் கண்டித்து, யுக்திவாதம் சரியல்ல-என்று சங்கரர் சொன்னார். சங்கரர் உற்பத்தி ஸ்திதிலயம் ஈஸ்வரனிடமிருந்துயேற்படுகிறது என்பதைக் கண்டனம் செய்தாராகில் இதனுல் இவர் ஈஸ்வரது வாதக்கண்டனமல்ல - யுக்திவாதகண்டனமே. இதனுல் சங்கரர், ஈஸ்வரனில்லை என்று மறுக்கிறவர் எனக் கூறலாமோ வெனில், இல்லை. இரவில் கோட்டான் முதலிய பிராணிகள் சூரியனுக்கு ஒளியில்லை என்று சொன்னுல் - பகலில் பிரகாசிக்கின்ற சூரியன் ஒளியை இழந்து விடுமா? இவ்விதம் சொல்லும் போது மண்டன் மிஸ்ரர் முன்பு ஜைமினிரிஷி தோன்றி - சங்கரரை முக்கால ஞானி யென்றும் - இவர் கூறுவது சரி என்று சங்கரரைப் புகழ்ந்து அவரை, ஜனங்கள் சம்சாரசாகரத்தில் மூழ்காதபடி-உத்தாரணம் செய்வதற்காகவே அவதரித்தவர் என்று கூற, மண்டனமிஸ்ரர் சங்கரரின் பிரதம சிஷ்யராகி - சுரேஸ்வரர் என்கிற நாமத்தைப் பெற்ருர். அவித்யை என்கிற அரக்கியால் விழுங்கப்பட்ட உலகத்தைக் காப்பாற்றும் ஈஸ்வரனைக் காப்பாற்றியவர். ஒப்பற்ற புத்தி திறமையுள்ள கபிலர் அக்ஷபாதர், கௌதமர் போன்றவர்கள் வேதத்தின் உட்கருத்தை உணருகிருர்களில்லை பரமேஸ்வரனுடைய அம்சமல்லவோ சங்கரர் என்று புகழ் பெற்ருர்.

இச்சமயம் உபயபாரதி சில கேள்விகளை காமசாஸ்திரத்தில் சம்பந்தப்பட்டதைக் கேட்டாள். மன்மதனுடைய கலைகள் எவ்வளவு - அவைகளின் ஸ்வரூபம் என்ன? எதைப்பின் பற்றியுள்ளன? சுக்லபக்ஷத்திலும் - கிருஷ்ணபக்ஷத்திலும் பெண்ணிடம் இவை எவ்வாறு அமைந்துள்ளன? ஆணிடம் எவ்வாறு அமைந்துள்ளன? இந்தக் கேள்விகளுக்கு ஒருமாத தவணை அளிக்கவேண்டும் என்று சங்கரர் கூற - சரஸ்வதி அனுமதித்தாள்.

சங்கரர் தமது யோக சக்தியால் தமது பூதஉடலை சிஷ்யர்களிடம் ஒப்பிவித்து - லிங்கசரீரத்துடன் உயிர் நீக்கிய ஒரு அரசனின் உடலில் புகுந்து அவனுடையப் பட்டணத்தில் புகுந்து - சில காலம் அரண்மனையின் போக வாழ்க்கையில் ஈடுபட்டார். இந்த உண்மையை அறிந்த மந்திரி இறந்து போன சடலத்தை எங்குப் பார்த்தாலும் - உடனேயே எரிக்கவேண்டும் என்று ஆக்ஞாபிட,

அதனால் சங்கராரின் சிஷ்யர்களில் ஒருவரான பத்ம பாதர் அரசனுக் நடிக்கும் சங்கரரைப் புகழ - அவரால் உணர்த்தப்பட்ட அந்த அரசனுடைய உடலிருந்து வெளியேக் கிளம்பி - லக்ஷ்மி நரஸிம்ம கராவலம்ப ஸ்தோத்திரத்தினால் வெளிக்கிளம்ப ; மந்திரியினால் யேவப்பட்ட வேலைக்காரர்களிட்ட நெருப்பினால் எரிந்துக் கொண் டிருக்கும் தனது உடலில் மறுபடியும் புகுந்தார் சங்கரர். ஸ்ரீலக்ஷ்மி நரசிம்ம பகவானுடைய கருணையால் நெருப்புதணிந்தது. தன் னுடலில் புகுந்து அந்த சங்கரர் வெளியேறி - உபயபாரதியிடம் சென்று - அவள் கேள்விகளுக்கு சமாதானம் கூற - சரஸ்வதி தேவியின் அம்சமாகிற உபயபாரதி, "தாங்கள் ஆற்றிய செயல் இவ்வுலகில் மனிதனுடைய செய்கையை அனுசரித்தே செய்தது" நான் என்கிறதும் - கர்த்தா என்கிறதுமான பற்றுதலற்ற செய் கைக்கு - பாபமில்லை. உமது யோகப்பயிற்சியின் மகிமையைக் காண்பித்தீர். நீர் ஸர்வக்ஞர்" என்றாள். அப்போது சங்கரர் அவளை ஒருவரமாகக் கேட்டார் - "என்னால் அமைக்கப்படும் ஸ்தானங்களில் "சாரதா" என்ற பெயருடன் ஸந்நிதானம் பெற்று விளங்கிக் கொண்டு - வாஸம் செய்வீர்களாக," என - அந்த தேவி "சரி" என்று ஆமோதித்து - தமது யிருப்பிடமாகிய ஸத்ய லோகமடைந்தாள். யதீசுவரரால் வெல்லப்பட்ட தன் கணவன் மண்டனமிஸ்ரர் - சுரேஸ்வரராக சந்யாஸ ஆஸ்ரமம் ஸ்வீகாரம் செய்ய, சாரதா தேவி தமது மகிமையினால் தன் லோகத்தை யடைந்தாள்.

அப்போது சங்கரர் - तत्त्वमसि - வாக்கியத்தின் பொருளைக் கூறினார் - "நீ தேகமல்லன்' தேகத்திற்கு உருவம் பிறப்பு உண்டு அழிவு உற்பத்தி உண்டு. ஆகவே உடல் ஆத்மாவல்ல. நான் மெலிந் தவன் - இளைத்தவன் - கருப்புநிறமுள்ளவன் - என்கிற தேகதர் மங்களை ஆத்மாவுடன் பிணைத்து, பிரமத்தினால் உண்டாகும் வியவ ஹாரங்களே யன்றி - உண்மையான அபேத ஞானத்திற்கு சான் றல்ல. நாசமடையும் பொருள் வேறு. அதற்குக் காரணமான பொ ருளை விட வேறு. தடி குடத்தை உடைக்கிறது. தடி - குடம் வேறு அதுபோல ஆத்ம ஞானத்தினால் நாசமடையும் உடல் வேறு - அழியாத ஆத்மா வேறு. திருஸ்யம் (பார்க்கப்படுவது) யாவும் அழிவுள்ளது - உடல் திருஸ்யம் - பொறிகளும் ஆத்மாவல்ல.

கருவிகளே. தச்சனுக்கு உளிகருவியாகவிருப்பது போல, இந்திரியங்கள் காது போன்றவை அறிவிற்கு கருவிகளாகும். துயிலும் காலத்தில் இவை செயலற்று இருக்கின்றன. தூக்கத்தில் யேற்படும் கனவு முதலியவைகளை உணரும் ஆத்மாவாக இந்திரியங்கள் ஆக மாட்டா. மனமும் ஆத்மாவல்ல, புத்தியும் ஆத்மாவல்ல. "என்னுடைய புத்தி "என்கிற வேற்றுமை வ்யவஹாரம் இருப்பதால், புத்தியும் ஆத்மாவல்ல. அஹங்காரம் ஆத்மாவல்ல. பிராணன் தூக்கத்தில் இருக்கிறதே -அதுவும் ஆத்மாவல்ல. இவ்வாறு சரீரம் முதலியவற்றைக் காட்டிலும் வேறாகிய ஆத்மா - त्वं (நீ) என்ற சொல்லினால் கூறப்படுவது तत् - ஜகத்காரண வஸ்துவாகிற பிரும்மம். असि - இந்தபதத்தால் ஜீவாத்மா - பரமாத்மா இரண்டினுடையதும் அபேதம் கூறப்படுகிறது सोऽयं देवदत्तः - நேற்றுக் கண்டதேவதத்தன் - அந்த மனிதன் இவன் - என்கிற வாக்யத்தில் இறந்தகாலம், முன்கண்ட தேசம் (இடம்) முந்திய நிலைமை முதலியவற்றை அகற்றி; நிகழ்காலம் தேசம் (இடம்) நிலைமை முதலியவற்றையும் அகற்றி - தனிப்பட்ட வ்யக்தியை (ஒரு மனிதனை - உதாரணமாக தேவதத்தனை மட்டும் கூறுவது போல, வாக்யார்த்தத்தின் சிலஅம்சங்களை (ஏகதேசத்தை) நீக்கி - லக்ஷ்யார்த்தத்தை அதாவது இரண்டுக்குமுள்ள சைதன்யாம்சத்தை மட்டும் (தல்லக்ஷ்ய ஐக்ய போதநபரம் நறுகோ விரோத:) கூறுவதால் யாதொரு ஆட்சேபம் இருக்கமுடியாது - இடமில்லை என்பது சங்கரரின் பாஷ்ம்.

சுருக்கமாக தேகத்தில் ஆத்ம புத்தியை-அத்யாஸத்தை அகற்றி-வாக்ய ஜன்ய ஞானத்தினால் - तत्त्वमसि போன்ற மஹாவாக்யங்களின் உதவியினால், பிரவிருத்திமார்க்கத்தில் வெகுகாலமாக நிலவியதுமாகிய தேகத்தில் ஆத்ம புத்தியை விலக்கி - பரமாத்மாவை நிதித்தியாஸம் செய்த வண்ணமாக - சாக்ஷாத் காரத்தினால் முக்தி சுகம் உண்டாகுகிறது. "நான்" என்கிற தேகத்தின் மீதுள்ள அபிமானம் துக்க காரணம். வைராக்யம் - பரமாத்விடம் சித்தம் நிலை பெறுதல் முக்தி ஸாதனம். ஒரு பெரிய மீன் கடலிலும் நதியின் பிரவாஹத்திலும் சஞ்சரிக்கும் போது - அந்த மீன் பிரவாஹம் - கரை என்பவைகளைக் காட்டிலும் மாறுபட்டது. அதுபோல விழிப்புணர்ச்சியிலும், கனவிலும் வ்யவஹாரங்களை ஆத்மா செய்

கிறதாயினும், அந்த ஆத்மா அவைகளைக்காட்டிலும் வேறுபட்டதுதான். ஆகவே கயிற்றில் பாம்பு போன்ற பலகற்பனைகள் தோன்ற, அதுபோல சித்ரூபியான் ஆத்மா வினிடத்திலே விழிப்புணர்ச்சி கனவு, துயில் முதலியபுத்தியின் மாறுபாடுகளாகிற பல கற்பனைகள் தோன்றுகின்றன. இவை உண்மையல்ல, பாரமார்த்திகமான (உண்மையான) நிலை - ஜாக்ரத ஸ்வப்ன, துயில், ஆகிற புத்தியின் இந்தநிலைமைகளைக் கடந்து - அச்சம் (பயம்) நீங்கிய நான்காவது பிரும்ம வஸ்துவாக நீ இருக்கிருய் - பேதபுத்தியை அகற்று- ஆத்மா வேறு தேகம் வேறு - பிரும்மம் வேறு பிரபஞ்சம் வேறு - அப்பேற்பட்ட பிரும்ம வஸ்து வாக நீ (ஆத்மா) இருக்கிருய் - முன் போல பிரமையைத் கொள்ள வேண்டாம். சச்சிதாநந்த அந்த பரம் பொருள் அறிஞனுக்கு அருகே யிருக்கிருன். ஓங்காரத்தை அடிக்கடி ஜபிப்பதாலும், விதிக்கப்பட்ட கடமைகளை பலனை அபேக்ஷித்துக் செய்யாமல் - நிஷ்காமமாகச் செய்வதாலும், குரு சுஸ்ரூ ஷையினுலும் மனத்தின் மலம் நீங்கி - சாதனசதுஷ்டிய சம்பத் ஏற்படுகிறது அதனுல் தத்வஞானம் பயன்படுகிறது. குருவின் கடாக்ஷம் கற்பக விருக்ஷத்தைப் போல குரு ஆக்ஞை முக்யமாக நிறைவேற்றப்பட வேண்டும். குருவே விஸ்வமயம் - ஸர்வ உலகரூபி. இதுதான் சங்கரரின் அத்வைத ஸாராம்சம்.

அத்வைத மதம் பரவி எங்கும் வியாபித்தது. இதற்கு சில மதபிரவர்த்தகர்கள் யேற்பட்டனர். சுரேச வரரும் குருவின் ஆணையினுல் சிருங்கேரி ஸ்ரீசாரதா பீடத்தின் முதல் ஆசாரியராக விளங்கினுர். காசியில் வாழ்ந்து வரும் போது, ஒருபிரமசாரி அணுக, அவனை, சிஷ்யனுக யேற்று தன் முதல் சீடனுக - ஸநந்தனன் என்ற யோகப்பட்டத்துடன் - பிற்பாடு பத்ம பாதர் என்று அழைக்கப்பட்டவர் - இவரும் முக்யமானவர். மண்டன மிஸ்ரரே ஸுரேஸ்வராவர். இவ்விதம் சிஷ்யர்களால் சூழப்பட்ட சங்கரர் திக் விஜயம் செய்ய, ஸ்ரீ சைலத்தில் காபாலிகன் ஒருவனின் பிடியிலிருந்து தப்பினுர். பத்மபாதர் நரசிம்மரைத்துதித்து - காபாலிகனைக் கொன்றுர். நரசிம்ம ஸ்தோத்திரம் செய்ய, பத்மபாதரும் சாந்தமடைந்தார். சங்கரர் கோகர்ணக்ஷேத்ரம் - மூகாம்பிகை ஆலயத்தில் வசிக்கும் போது - ஹஸ்தாமலகர் என்கிற பெயரை அடையப்போகும் ஒரு குழந்தையின் ஜடஸ்வருபத்தை அகற்றி - "நான்

சித்ஸ்வரூபி - என்கிற அர்த்தம் பொதிந்த'' ஹஸ்தாமலகீயம்'' என்கிற தோத்திர பாடலை இயற்ற - அந்த பாலவடிவான அவரைத் தன் சிஷ்யராகச் சேர்த்துக் கொண்டார். சிருங்கேரியில் கிரி என்பவர் சிஷ்யராஞர். இவரே பிற்பாடு ''தோடகாசாரியார்'' என்கிற பெயரும் பெற்ருர். சங்கரரே ஹஸ்தாமலகீயம் என்கிற நூலுக்கு பாஷ்யம் இயற்றிஞர்.

குருவின் உத்தரவுப்படி-எல்லா சிஷ்யர்களும் பல கிரந்தங்களை இயற்றிஞர்கள். சங்கரபகவத்பாதாள் அருளியுள்ள தைத்திரீய உபநிஷத் பாஷயத்திற்கும், பிருஹதாரண்யக உபந்ஷத் பாஷ்யத் திற்கும் சுரேஸ்வரர் ''வார்த்திகம்'' இயற்றிஞர். நைஷ்கர்ம்ய ஸித்தி என்பதும் இவருடைய நூல். பஞ்சபாதிகா என்ற சூத்ர பாஷ்ய டீகை பத்மபாதர் இயற்றியது. ''பிரபஞ்சஸாரம் ''என்கிற ஆசாரியரின் மந்திரசாஸ்திர கிரந்தத்திற்கும் - இவர் வ்யாக் யானம் எழுதியிருக்கிருர். தோடகாச்சார்யர்-''ச்ருதிஸார ஸமுத் தரணம்'' என்கிற நூலையும் இயற்றிஞர்.

இத்தருணத்தில் சங்கரரின் தாய் பிரிந்தாள். சங்கரர் தமது யோக மகிமையிஞல் இதை உணர்ந்து, தாயைசந்தித்து. சிவ புஜங்கம்-விஷ்ணு ஸ்துதி செய்து தாயாருக்கு தகனக் கிரியைகளைச் செய்து- சிறிது காலம் காலடியில் தங்கிஞர். பிறகு சிஷ்யர்களுடன் ராமேஸ்வரம் சென்று, பிறகு, காஷ்மீருக்குச் சென்று. ஒரு வரும் தென்திசையிலிருந்து வராததால் ஸர்வக்ஞபீடத்தின் தெற்கு வாசல் மூடப்பட்டிருப்பதைப் பற்றிக் கேள்விப்பட்டு-சிஷ்யர் களுடன் ஸ்ரீ நகரையடைந்து-அங்கு யாவரையும் வாதில் வென்று ஸர்வக்ஞபீடாரோஹணம் செய்தார் என்பது சரித்திர வரலாறு. இன்றும் சங்கரருக்கு கோயில் ஒன்று ஸ்ரீநகரில் இருக்கிறது என்பது சான்று.

இவ்விதம் பாரத பூமியைத் தமது 32 வயதுக்குள் இரண்டு தடவைகள் சுற்றி - சிருங்கேரி - த்வாரகை - பதரி - பூரி - என்கிற இடங்களில் மடங்களையும் ஸ்தாபித்து - அங்கு அவைகளை நிர் வஹிக்க தமது நான்கு சிஷ்யர்களை அமர்த்தி கேதாரக்ஷேத்ரத் திற்குச் சென்று ஜோதிர் மடத்தினை நிறுவி - தோடகாக்சாரியாரை அமர்த்தி - திருக்கயிலையை அடைந்து வணங்கிஞர்.

"அங்கே சிவபெருமான் ஐந்து ஸ்படிகலிங்கங்களையும் செளந்தரிய லஹரி என்கிற நூலையும் அவருக்கு அளித்தார் என்று குருமரபு பேசுகின்றது. வழியில் பசுபதி நாதரை வணங்கி - அங்கு ஒரு ஸ்படிக லிங்கத்தை (வரலிங்கம்)யும் மஹா திரிபுர சுந்தரி திருவுருவையும் பிரதிஷ்டை செய்தார். கேதாரத்தில் ஒரு ஸ்படிக லிங்கத்தை (முக்திலிங்கம்) பிரதிஷ்டை செய்தார். காசியில் விசுவேஸ்வரரை வணங்கி - அன்னபூர்ணையையும் வணங்கி - பூரி ஜகந்நாத்தையடைந்து - கோவர்த்தன மடத்தை ஸ்தாபித்து - பத்மபாதரை அமர்த்தினர். பின்பு சிருங்கேரி அடைந்து ஒரு ஸ்படிக லிங்கத்தை (போக சந்திர மௌலீஸ்வர லிங்கம்) பிரதிஷ்டை செய்து - பிறகு திருவேங்கடம் சென்று ஸ்ரீசக்ரபிரதிஷ்டை செய்து பிறகு சிதம்பரத்தையடைந்து அங்கே ஒரு ஸ்படிகலிங்கத்தை (மோக்ஷஸ் ஸ்படிகலிங்கம்) பிரதிஷ்டை செய்தார். எஞ்சிய ஒரு ஸ்படிக (யோக) லிங்கம் இன்றும் நம் காஞ்சி ஆசார்யர்களால் பூஜிக்கப்பட்டு வருகிறது.

தில்லையிலிருந்து திருச்சி சென்று - ஸ்ரீரங்கம் திருவானைக்காவல்-ராமேஸ்வரம்-பிறகு திருவொற்றியூர் வந்து திரிபுரசுந்தரி அம்பிகை சந்நிதியில் ஸ்ரீசக்ரபிரதிஷ்டை செய்து - பூவிருந்தவல்லி மாங்காட்டிலும் ஸ்ரீசக்ரபிரதிஷ்டை செய்து - அதன் வழியே காஞ்சியை யடைந்தார். காஞ்சமா நகரை ஸ்ரீசக்ரவடிவில் அமைக்கச் செய்து ஸ்ரீகாமாக்ஷி அம்மன் ஆலயத்தை நிறுவச் செய்தார். நான்கு திசைகளிலும் நான்கு மடங்கள் - இவற்றிற்கு மூலத்தானமாக மத்ய ஆம்நாய பீடமாக (Central Vedic Peetam) நிறுவி அதற்கு காமகோடி பீடம் எனப்பெயர் கொடுத்து - அதில் தாமே ஏறி ஸர்வக்ஞ பீடாதிபதியாக விளங்கினர் என்பது சரித்திர வரலாறு. காஞ்சியில் ஆதிசங்கரர் திரிபுர சுந்தரி ஸ்தவம் பாடி - தமது 32 வது வயதில் காமாக்ஷி அம்மையின் திருவுருவில் சிதாகாசத்தில் கலந்தார்.

சங்கரர் அருளிய நூல்கள் - பிரஸ்தானத்ரயம்-பல தோத்திர பாடல்கள் - சித்தாந்த நூல்கள் பல. கனகதார ஸ்தவம், தசஸ்லோகி - விவேக சூடாமணி, பிரபோத ஸுதாகரம், ஆத்ம போதம், மனீஷா பஞ்சகம், உபதேச ஸாஹஸ்ரி, பஜகோவிந்தம், பிரஸ்னோத்ர ரத்னமாலிகா, த்வாதசபஞ்ரீகாஸ் தோத்ரம்,

அம்பாஷ்டகம் அம்பா பஞ்சரத்னம். சியாமளா நவரத்தின் மாலிகா, திரிபுர சுந்தரி ஸ்தோத்ரம் - அன்னபூரணி ஸ்தோத்ரம், சீதலாஷ்டகம், ஸ்ரீமாத்ருகா புஷ்பமாலா ஸ்துதி, ஸ்ரீதேவி அபராதக்ஷமாபண ஸ்தோத்ரம், விசுவநாதாஷ்டகம், வேதசார சிவன் ஸ்தோத்ரம், சிவ நாமாவளி அஷ்டகம், ஹரிஸ்துதி, விஷ்ணு ஷட்பதி-காசி பஞ்சகம், ஆத்மபஞ்சகம், அபரோக்ஷானு பூதி, விக்ஞானநௌகா, ஸ்ரீதட்சிணாமூர்த்தி ஸ்தோத்ரம் - சிவா னந்தலஹரி - சௌந்தரியலஹரி - ஸ்ரீலக்ஷ்மி நிருஸிம்ஹ ஸ்தோ த்ரம்-சிவபுஜங்க ஸ்தோத்ரம், மோக முத்கரம், ஸ்ரீகணேச பஞ்ச ரத்தினம்-ஸ்ரீசுப்ரமண்ய பஞ்சரத்தினம் - மீனாக்ஷி பஞ்சரத்தினம்- ஸ்ரீபவானி புஜங்கம் - இப்படி பல தோத்திர நூல்கள்.

காமகோடி பீடம் ஞானபீடமாக விளங்குகிறது. காஞ்சியில் அன்னை காமாக்ஷி சங்கரருக்கு ''இந்திர ஸரஸ்வதி'' என்ற பட்டத் தைக் கொடுத்தாள். ஆகவே காஞ்சிகாமகோடி பீடத்தில் வரும் ஆசார்யர்கள் ''இந்திர ஸரஸ்வதி'' என்கிற பட்டத்தைச் சூட்டிக் கொண்டார்கள். தற்போதிருக்கும் காஞ்சிப் பெரியவாள் ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி சுவாமி காமகோடி பீடத்தின் 68-வது பட்டத்தில் எழுந்தருளிய ஆசாரியர் ஆவர்.

பௌத்த-ஜைன-சார்வாக-பாசுபத-சாங்கிய-யோகமதங்களை நிரஸித்து - வேதத்தை ஸம்ரக்ஷிப்பதில் ஊக்கம் காட்டிய சங்கரருக்கு, பல தோத்திர பாடல்களை அனுக்ரஹித்த பகவத் பாதருக்கு, பாஷண்டமதங்களைக் கண்டித்து-ஹிந்து மதத்தை ஓங்கச் செய்தவரான பகவத் பாதாளுக்கு, காணபத்யம்— ஸௌரம்-சைவம்-வைஷ்ணவம்—சாக்தம்—கௌமாரம் என்கிற ஆறு வைதிகமதங்களையும் ஸ்தாபித்தவருக்கு, நாம் எவ்விதம் நன்றி செலுத்தக்கூடும்? வைதிகமதம் இன்று தழைத்து ஓங்கியிருப்பதற்கு அவர் மூலகாரணமாவார். அவருடைய பிரஸ்தானதிரயம் — (சங்கரரின்) பிரும்ம சூத்ரபாஷ்யம் — ஸ்ரீ கீதையின் பாஷ்யம் — தசஉபநிஷத்துக்களின் பாஷ்யம் இத்துடன் கௌடபாதரின் காரிகை நூலுக்கு வ்யாக்யானம் இவை அத்வைத சம்பிரதாயத்துக்கு அஸ்திவாரக் கற்களாகும். பிற்பாடு வந்துள்ள மதாசார்யர்கள் இந்த நூல்களைக் கவனி யாமல்-தங்கள் நூல்களையோ - மதங்களையோபிரஸ்தாபிக்கவில்லை

என்பதே போதுமான சான்றுகும். உலகிற்கும்—நமது பாரத தேசத்திற்கும் பரம உபகாரம் செய்துள்ள ஸ்ரீ சங்கரபகவத் பாதாசார்யாரை நாம் அனவரதமும் பக்தியுடன் பூஜிப்பதே பெரிய பிறவிப்பயனுகும்.

ஸதாசிவ ஸமாரம்பாம் (ஸ்ரீமந் நாராயண)

சங்கராசார்ய மத்யமாம் — இந்த குரு பரம்பரைக்கு சதாசிவரே. (ஸ்ரீமந் நாராயணனே) ஆதிகுரு; பிரும்மா—வசிஷ்டர்-சக்தி-பராசரர்-வியாஸபகவான்-சுகர் — கௌடபாதர். (முதல் ஆசார்யர்)-மாண்டுக்ய உபநிஷத்திற்குக் காரிகை எழுதி-விவாத்த வாதத்தைப் போற்றி — உலகம் மனத்தோற்றமே — மாயையினுல் பிரும்மத்தினிடம் அத்யாஸம் அத்யாரோபம் என்பது விவர்த்தவாதம். உலகம் மித்யை மாற்றமும் கொண்டது-அனுதிமாயையால் நிகழ்வது-என்கிற பரிணுமவாதம்-(உலகம் அத்யாரோபம்) கோவிந்தபாதர்—(நல்லசிஷ்யனுக்காகக் காத்திருந்து, சங்கரர் தம்மிடம் வரும்வரை காத்திருந்தவர்)—சங்கரர் (கி,பி.788-820)—என்பது குரு பரம்பரையின் ஆதி. பிரும்மமேவஸத்யம் என்கிற வேதாந்தக் கொடியை உயர்த்தி—உலக குருவாகப் போற்றப்படுபவர்—ஆதி சங்கரபகவான்.

தற்போதுள்ள காஞ்சி ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் 29வது வயதில் 22—3—54ல் காஞ்சியில் சந்யாஸம் அளிக்கப்பட்டு ஸ்ரீசந்திரசேகரேந்திர சரஸ்வதி ஸ்வாமிகளால் ஆட்கொள்ளப் பெற்ருர். ஸ்ரீசந்திரசேகரேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் 1894ல் அவதரித்தவர் - 13 - 2 - 1907 ல் பட்டம் ஏற்றவர். ஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் தற்போதுள்ள காஞ்சி பீடாதிபதியாவர். இவருக்கு அடுத்தபடியாக இளைய பெரியவர் சங்கரானந்தாவும் குருவாகத் திகழ்கிருர்.

சாரதா பீடத்தில், வித்யாரண்யருக்குப் பிறகு - சந்திரசேகர பாரதி பட்டம் வகித்து வேதாந்த உலகில் சக்கிரவர்த்தி என விளங்குகிருர்கள். தற்போதுள்ள அபிநவ வித்யாதீர்த்தர் - முப்பத்தைந்தாவது பட்டம் வகிப்பவர். 22 - 5 - 1931ல் சந்யாஸம் பெற்று ஸ்ரீஜகத்குரு மஹாஸந்நிதானம்-ஸ்ரீசங்கராச்சாரியார் (ஸ்ருங்கேரி) அபிநவ வித்யா தீர்த்தர் என்கிற திருநாமம் பெற்றவர். இவருடன் கூடவிருக்கும் ஸ்வாமி — ஸ்ரீஜகத்குரு ஸந்நிதானம் ஸ்ரீமத் பாரதி தீர்த்த சங்கராச்சாரியர் ஸ்வாமிகள் (Junior) தற்போதுள்ள ஸ்ருங்கேரி பீடாதிபதிகளாவார்கள்.

**சுபமஸ்து**

# அத்வைததத்வத்தை விளக்கும் பிரமாண நூல்கள்

1) அனைத்து உபநிஷத்கள்.

2) இதிஹாஸ புராணங்கள்.

3) ஞான வாஸிஷ்டம்.

4) கௌடபாதர் இயற்றிய மாண்டூக்யகாரிகைகள்.

5) பிரும்ம மீமாம்ஸா சாஸ்திரம் ஸூத்ரவடிவத்துடன் கூடினது வேதவ்யாஸர் இயற்றியது.

6) உபநிஷத்பாஷ்யம், பகவத்கீதாபாஷ்யம், ஸநத்ஸுஜாதீய பாஷ்யம், விஷ்ணுஸஹஸ்ரநாம பாஷ்யம் பிரும்மஸூத்ரபாஷ்யம். பஞ்சீகரணம், ஸ்ரீசங்கரபகவத்பாதர் இயற்றியது.

பஞ்சபாதிகா—பிரும்மஸூத்ரபாஷ்ய வியாக்யானம்
ஸ்ரீபத்மபாதர் இயற்றியது

விவரணம்—பஞ்சபாதிகையின் உரை ஸ்ரீப்ரகாசாத்மமுனி
இயற்றியது,

தத்வதீபனம்—விவரணத்தின் உரை ஸ்ரீ அக்ண்டாநுபவானந்த
இயற்றியது.

(பஞ்சபாதிகை – விவரணம்—தத்வதீபனம், இம்மூன்றும் முதல் நான்கு ஸூத்திரங்களுக்கு மட்டுமே உள்ளதாகும். பிரும்மஸூத்ரம் பாஷ்யம் பஞ்சபாதிகை விவரணம் தத்வதீபனம். இந்த ஐந்து நூல்கள் மிகப்பழமையானதாகும். விவரணம் வாதப்ரஸ்தானத் திற்கு மூலமாகும்.

7) பிருஹதாரண்யகபாஷ்யவார்த்திகம், தைத்தரிய பாஷ்ய வார்த்திகம் பஞ்சீகரண வார்த்திகம் தக்ஷிணாமூர்த்தியஷ்டக வார்த் திகம், நைஷ்கர்ம்யஸித்தி இவைகள் ஸ்ரீ ஸுரேச்வராச்சார்யரால் இயற்றப் பெற்றவை.

8) பாமதீ—ப்ரும்மஸூத்ரபாஷ்ய வியாக்யானம்
வாசஸ்பதிமிச்ரரால் இயற்றப் பெற்றது

கல்பதரு—பாமதீயின் உரை, உரை ஆசிரியர் அமலானந்த
ஸரஸ்வதீ.

பரிமளம்—கல்பதருவின் உரை—

உரை ஆசிரியர்—ஸ்ரீ மதப்பய்ய தீக்ஷிதர்

(பிரும்ம ஸூத்ரம் பாஷ்யம் பாமதீ கல்பதரு, பரிமளம் ஆகிய ஐந்து நூல்களும் சேர்ந்து வேதாந்த சாஸ்திரம் என்று பெரியார்கள் கூறுகின்றனர். ஐந்து நூல்களும் முழுமையாக இருக்கின்றன.)

9) பிரும்மஸித்தி—மண்டனமிச்ரர் இயற்றியது.

10) இஷ்டஸித்தி—விமுக்தாத்மா இயற்றியது.

11) தத்வப்ரதீபிகை—சித்ஸுகாசார்யர்.

12) நியாய தீபாவளி—ஆனந்தபோதர்.

13) கண்டனகண்டகாத்யம்—ஸ்ரீ ஹர்ஷர் இயற்றியது.

14) வேதாந்தஸித்தாந்த முக்தாவளி—ஸ்ரீ பிரகாசானந்தர்.

15) ஸம்க்ஷேபசாரீரகம்—ஸர்வக்ஞாத்மமுனி.

16) பஞ்சதசீ, அநுபூதிப்ரகாசம், ஜீவன் முக்தி விவேகம் ஸ்ரீமத்சங்கர திக்விஜயம் வித்யாரண்யாள் இயற்றியது, ஸ்ரீ மத்வாச்சாரியர் இயற்றிய சங்கர விஜயம்

17) அத்வைதஸித்தி—மதுஸூதனஸரஸ்வதீ இயற்றியது.
வேதாந்த கல்பலதிகை— ,, ,, ,,

18) குருசந்திரிகை—அத்வைதஸித்தியின் உரை
லகுசந்திரிகை ,, ,, கௌடப்ரம்மானந்த ஸரஸ்வதீ இயற்றிது.

19) பிரும்ம ஸ்ரீ கடலங்குடி நடேச சாஸ்திரிகளின் பிரும்ம ஸூத்ர சங்கர பாஷ்யம்.

20) ஸ்ரீ V.S.V. குருஸ்வாமி சாஸ்திரி அவர்களால் பிரும்மம் ஸத்யம் ஜகத்மித்யை என்கிற நூல்.

21) ஸ்ரீ பிரும்ம வித்யா சதுஸ் ஸூத்ரி-சாஸ்திர ரத்னாகர தேதியூர் ஸுப்ரமண்ய சாஸ்திரிகள்,

ஜீவன் செல்கிருன்? ஸ்வரூப ஸாம்யம் என்பது என்ன? போகஸாம்யம் என்பது என்ன? ஜகத்வியாபாரம் ஸ்ருஷ்டி ஸ்திதி லயம். ஜீவனுக்கு மோக்ஷதசையில் யேற்படுகிறதா என்பது விளக்கப்படுகிறது. " अयमात्मा ब्रह्म " 'प्रज्ञानं ब्रह्म' என்பவை முக்கியமான வாக்யங்கள், तत्त्वमसि (நீ பிரும்மமாக விருக்கிருய்); இத்யாதி வாக்யார்த்தங்களின் கருத்துக்கள் என்ன என்பதும் விசாரிக்கப்படுகின்றன. பிரும்மமும் ஜீவனும் ஸ்வரூப ஐக்யமாக ஆகிவிடுகின்ருர்களா ஒரே மாதிரி ஸ்வரூப ஸ்வபாவத்தை உடையவர்களாக ஆகிருர்களா—இல்லே. வேருக விருக்கிருர்களா என்கிற விஷயங்கள் சொல்லப்படுகின்றன. மோக்ஷ தசையில் ஜீவன் எந்த வழியாக அர்ச்சராதி கமனம் தூமராதிகமனம் என்று இருவழிகளில் யார் எதன் வழியாகச் செல்கிருன் என்பது விசாரம். வித்யை உடையவன் அர்ச்சராதி வழியாகச் செல்கிருன் என்பது ஸித்தம்.

முதல் அத்யாயம் சங்கரரின் அபிப்ராயப்படி நான்கு பாதங்கள் கொண்டவை. அவைகளுள் முதல் பாதம் ஸ்பஷ்டமாக பிரும்மலிங்க வாக்ய ஸமந்வயம் அதாவது ஸகுண பிரும்மம். நிர்குண பிருமமம் என்கிற பிரும்மத்தைப்பற்றிய வாதம். முதன் நான்கு அதிகரணங்கள் பிரும்ம சதுஸ்ஸூத்ரி நிர்விசேஷ (நிர்குண) பிரும்மம் பற்றி விசாரம். அதற்குபின் எல்லா முதல் அத்யாயம் 2வது பாதம் ஸகுண பிரும்மம் மாயை இந்த இரண்டையும் பற்றி ஏற்பட்ட விசாரம் இந்த இரண்டாம் பாதத்தில். அஸ்பஷ்டமான உபாஸ்யமான பிரும்மலிங்க (அடையாளமுள்ள) வாக்யங்களுக்கு பிரும்மத்தினிடமுள்ள விஷயத்தை தாத்பர்யத்தைச் சொல்வதால் அஸ்பஷ்டோபாஸ்ய பிரும்மலிங்க வாக்ய ஸமந்வயம் எனப் பெயர். முதல் அத்யாயம் 3ம் பாதம்—சில சுருதிகள் நிர்குண பிரும்மத்தைத்தான் சொல்கின்றன என்று ஸ்பஷ்டமாகத் தெரியாதபடியால் இந்த சுருதிகளுக்கு விஷயம் நிர்குண பிரும்மமா அல்லது மாயை முதலியவற்றைச் சொல்கின்றனவா இதற்கு அஸ்பஷ்டக்ஞேய பிரும்மலிங்க வாக்ய ஸமந்வயம் என்று பெயர்.

நான்காவது பாதத்தில் இரண்டு மூன்று பாதங்களில் சொல்லப்பட்ட சுருதிகளின் அர்த்தத்தை மீண்டும் பரிசீலித்து பிரதானம் அவ்யக்தம் அஜா-ஜந; என்கிற பதங்களுக்கு அர்த்தத்தை விசாரித்து அதன் விளைவால் இவை பிரும்மத்தையே தாத்பர்யமாகச்சேரும் என்று சொல்லுகிறபடியால் இந்த நான்காம் பாதத்திற்கு ஸந்திக்த அவியக்தாதிபத ஸமந்வயம் எனப்பெயர்.

ஒரு சூத்ரம் என்றால் விஷய வாக்யம் (சோதன காரண வாக்யங்கள உபநிஷத்துக்களிலிருந்து கொடுக்கப்படவேண்டும். பிறகு சமசயம் யாது அது பிரும்மமா அல்லது மாயையா இத்யாதி பூர்வபக்ஷம் ஸித்தாந்த பக்ஷம் ஸங்கதி இதற்கும் மற்றதுக்கும் உள்ள சம்பந்தம் இத்யாதிகளால் சுருதி அர்த்தத்தை நிர்ணயம் செய்யவேண்டும். இவ்விதம் ஐந்து தத்வங்கள் எந்த சூத்திரத்தில் அடங்கியிருக்கின்றனவோ அதுதான் அதிகரணமாகும். உதாரணமாக अथातोब्रह्मजिज्ञासा என்ற சூத்திரத்தில் தத்விஜிக்ஞாஸஸ்வ' என்பது சுருதிகளால விஷயம் அடங்கியுள்ளது. இதனால் கிடைக்கப்படும் ஸம்சயம் ஸாதன சதுஷ்டய ஸம்பந்நன்தான் பிரும்ம விசார அதிகாரியா? ஜீவன் விஷயமா? ஜீவ பிரும்ம ஐக்ய விஷயமா? இது சுருதிகளால் போதிக்கப்படுகிற விஷயமா? தர்க்கமா? அனுமானமா? மோக்ஷம் வேதாந்த விசாரத்தினால யேற்படுமா? இத்யாதி சம்சயங்கள் ஏற்படலாம். ஆகவே இந்த முதல் பாதத்தில் முதல் சூத்ரத்தினால் ஸாதன சதுஷ்டய சம்பத் உள்ளவன்தான் அதிகாரி. ஜீவபிரும்ம ஐக்ய விஷயம் அவிதயாநிவிருத்தி என்பதே மோக்ஷம் பலன் அதுவே என்ற சித்தாந்தமும் இந்த அதிகரணத்தில் அடங்கியுள்ளது.

ஸ்ரீமத் ராமானுஜர் சங்கரர் போன்றவர்களின் அத்வைத கருத்துக்களைப் பலவிடங்களில் சொல்லி அதற்கு ஆட்சேபங்களையும் சொல்லியிருக்கிறார். அந்த அந்த விடங்களில் அவைகளைப்பார்க்கவும். (இந்த புத்தகத்தில்) மொத்தத்தில் அத்வைத சாஸ்திரம் யேற்பட்டகாலம் வேதங்களின் முக்கிய நோக்குக்கு மதிப்பில்லாமல் கர்மாக்களையே பிரதானமாகக்கொண்டு கர்மாக்களை ஸ்வர்க்காதி (அழியும் தன்மையுள்ள) நஸ்வரபலன்களை அடைய விருப்பத்தினால், கர்மாக்களால் பிரும்ம ஆராதனை

நிஷ்காம்யமாகச் செய்யப்படவேண்டியது பகவத் சாக்ஷாத் காரமே பெரிய பலன், ஜீவிய வாழ்க்கையின் ஏக ஸாரமான அர்த்தமாம். இதை உபேட்சித்து பௌத்தர்கள் ஜீனர்கள் சாங்கியர்கள் பாசுபதர்கள் இத்யாதி பல வேறுபட்ட மத ஸ்தாபகர்கள் தோன்ற சங்கர பகவத்பாதாளின் அவதாரம் அந்த அக்ஞான இருள் கும்பல்களுக்கு ஞானபாஸ்கரனுகத் தோன்றினதாகும். வேதங்களுக்கு மரியாதை செய்யப்பட்டதாகும். பிரும்மம் ஏகம் அத்வீதீயம் என்பதால் பிரும்மசாக்ஷாத்காரம் அடைதலே இப் பிறப்பிலே அடைதலே பெரும்பாக்யம் என்று பகவத்பாதாள் காட்டியமார்க்கம். சம்சாரம் நசிக்க பக்தியைப்பெருக்கி வைக்க வைராக்யம் யேற்பட இவைகளால் போதிக்கப்படுவது ஆத்மா வைக்காட்டிலும் பிரும்மம் வேறில்லை அது ஏகம். ஞானுகார மாக அகண்டை கரஸமாக நித்ய சுத்த புத்தமாக விருக்கிறது. அத்தகைய ஜீவாத்மாவை விட வேருனதல்ல பிரும்மம். அந்த ஆத்மாதான் சகலமானவர்களுக்கும் தான் என்கிற பிரத்யக்ஷ ஸித்த வஸ்துவாக விருந்து கொண்டு அந்த பிரும்மம் அந்த அந்த மனுஷனுக்கு அவனவன் கர்மத்துக்கு யேற்ப ஞானமும் தெளிவும யேற்பட அவனவனுக்கு பிரும்மம் ஸந்திக்தம் பிரத் யக்ஷமாகத் தெரிந்துகொள்ளப்பட்ட நிச்சயிக்கப்பட்ட வஸ்து வாகும். ஆகவே ஆத்மாவிற்கும் பிரும்மத்திற்கும் பாரமார்த்த தசையில பேதமில்லை. வியவஹார தசையில் அவித்யா கர்ணகளே பரங்களாகிற உபாதிகளால் த்வைதமாக பிரும்மம் வேறு ஜீவன் வேறு என்று தோன்றுகிறது. அது ஒரு தோற் றமே ஆகவே ஆத்மா அஸந்திகதமானுல் பிரும்மமும் அஸந் திக்தம் தான், ஆத்மாவுக்குள்ளது பிரும்மத்துக்கு உண்டு ஏனெனில் இரண்டும் ஒன்று தானே. உபாதிகளாலே தான் பலவாகத்தோன்றுகிறது.

ஒருவன் நன்ருகத்தூங்குகிருன் அச்சமயம் இந்திரியங்கள் ஒன்றும் வேலை செய்வதில்லை, பிராணன் மாத்திரம் சஞ்சரித்து கொண்டிருக்கிறது. இந்த "நான்" "என்னுடையது" என்கிற எண்ணமே அப்போது அவனுக்கில்லை. கௌடபாதர் காரிகா என்கிற க்ரந்தத்தில் "சூன்யவாதம்" ஒன்றுமேயில்லை கிட்ட தட்ட பௌத்தர்களின் சூன்யத்வத்தை ஒத்தாற்போல சொன்ஞர்

"காரிகையை" வியாக்யானம் செய்த சங்கர பகவத்பாதாள் சொல்கிறார்: மூண்டக உபநிஷத்தை ஆதாரமாக வைத்து சுஷுப்தி ஸ்தானம் என்பதால் அந்த தூங்குகிறவனுக்கு ஆசைகள் இல்லை. ஏகிபூதனாக ஒரே மனிதனாக விருக்கிறான் வேற்றுமை வித்யாஸம் எல்லாம் அழிந்துபோய் அனுபவங்கள் எல்லாம் அவனிடம் லயித்துப்போய் வஸ்து விரோதம் ஒன்று மில்லாமல் "பிரக்ஞானகனம்" என்று சொல்லும்படி இது அது என்கிற பல வேறுபட்ட வஸ்துக்கள் எல்லாம் அழிந்து போய் ஞானாகாரமாக விருக்கிறான். அவனையே ஆனந்த மயன் என்று நாம சொல்கிறோம். ஒருவித முயற்சியும் அந்த தூங்கும் சுஷுப்தியில் இல்லை. அதனால் அவனே ஆனந்த புக்காக (அனுபவிக்கிறவனாக) விருக்கிறான். இது மாதிரித்தான் சுத்த பிரும்மமும் ஞானாகாரமாகத் திகழ்கிறது. அகண்டை கரஸ மாக ஞான ஆனந்த சச்சிதானந்தமயமாக—"சேதோ முக" (चेतोमुख) அது சுஷுப்தி ஸ்திதிஜாக்ரதை (Waking) ஸ்வப்னம் (Dream) இரண்டுக்கும் நடுவேயுள்ள சுத்த சைதன்யமாக ஜாக்கிரதை ஸ்வப்னம் ஆகிற இரண்டு தசைகளிலும் யேற்படும் அனுபவங்களுக்கு வாசற்பாதையாக (door way) விருக்கிறான். அதனால் அவனைப் பிராக்ஞன்—முந்தின காலம், வரும் காலம் எல்லா வஸ்துக்களைப்பற்றியும் அறியக்கூடிய சேதனத்வம் கொண்டவனாகவிருக்கிறபடியால் பிராக்ஞன் என்று அழைக்கப் படுகிறான் (பிரு. உப. प्राज्ञेनात्मना संपरिष्वक्तो न बाह्यं किंचन वेद नान्तरम्-4-3-21) பரமாத்மாவினால் தழுவப்பட்டவனாக பிராக்ஞன் ஒன்றையும் அறிவதில்லை எது வெளியோ எது உள்ளிருக்கிறதோ ஒன்றையும் அறிவதில்லை. அந்தநிலையில் ஒரு தோஷமும் பாபமும் அவனை ஸ்பர்சிக்கிறதிலலை. तं नकेऽष्ट पाप्मास्पृशते (சா.2-8-3-3) இந்தவிதமாக விருக்கும் ஆத்மா எல்லாக்காலத்திலும் சூரியன் சந்திரன் அக்னி சப்தம் இல்லாத காலங்களிலும் ஸதா பிரகா சித்துக்கொண்டு ஞான ஒளியாகத்திகழ்கிறது பிரகஞானகன மாகவிருககிறது. அதாவது ஞானமாத்திரமே ஸ்வரூபம்; அதற்கு வெளி வஸ்துக்களின் அறிவு கிடையாது. ஆனால் சைதன்ய மாக விருக்கிறது. அதாவது அவன் பார்த்துக்கொண்டிருக் கிறான். ஆனால் பார்க்கிறதில்லை ஏனெனில் பார்க்கிறவனுக்கு (ஆத்மாவுக்கு) பார்க்கிறதில் யாதொரு தடங்கல் பிரதிபந்தகம்

இல்லை ஏனெனில் அவன் அழிவற்றவன் அவனைத்தவிர வேறு ஒன்றுமில்லை வேருக ஒன்றுமில்லை. அவன் பார்ப்பதற்கு அதாவது காரியம் பேதம், காரணம் அபேதம். பரமாத்மா ஒருத்தன் என்பதால் அத்வீதீயம். ஆகையால் உபக்ரம உப ஸம்ஹாரங்களிலும் इदं सर्वं यदयमात्मा என்று பிரதிக்ஞை செய்து உத்பத்தி ஸ்திதிலயஹேதுக்களின் திருஷ்டாந்தங்களால் விகார விகாரிதவாத் காரியம் காரணம் இதயாதிகளால் "अनन्तरमबाह्य" "अयमात्माब्रह्म என்று உபஸம்ஹாரம் ஏற்படுவதால் ஆகையால் உபக்ரம் (ஆரம்பத்திலும்) உபஸம்ஹாரத்திலும் (முடிவிலும்) இந்த அர்த்தம் நிச்சயிக்கப்படுத்தப்படுகிறது-திருடப்படுத்தப் படுகிறது பரமாத்மா ஏகம் ஒன்றுதான், உத்பத்தி ஸ்திதிலயம் இத்யாதிகளைச்சொல்லும் வாக்யங்களால்.

தொலைந்துபோன ஒரு ராஜகுமாரனை அவனிடம்போய் ஒரு நன்கு தெரிந்த மனிதன் "பையா-நீ ராஜகுமாரன், வேடபுத்ர னல்ல, உன் அப்பா அம்மா உனக்காகத்தேடிக்கொண்டிருக் கிறார்கள். சிறு வயதில் நீ தவறிப்போய் காட்டிற்கு வந்து விட்டாய்" என்று சொல்லியதால் அந்த பையனுக்கு அறிவு யேற்பட்டபோது அவன் மீண்டும் ராஜகுமாரனாகி விடுகிறான் அன்றோ? அதுபோல் அக்ஞானம் அவித்யை ஸம் சாரம் பிறவி எல்லாம் ஞானத்தினால் அழிந்துபோகும். அந்த ஞானம் பிரும்மத்தை நன்கு அறிவதால் யேற்படுவது. ஏகரஸ் மாகவும் உப்புக்கட்டியைப்போல உள்ளும் வெளியும் உப்பா யிருக்கிறபடி ஞானகாரமாகவிருக்கும் அப்பேற்பட்ட பிரும்மத் திற்கு நாமரூபங்கள் கற்பிதத்தினால் பேதம் உபாதியினால் தோன்றுகிறது. இதனால் பிரும்மத்துக்கு ஸம்சாரகதி யேற் படுகிறது. रूपं रूपं प्रतिरूपोबभूव என்று சொல்லும்படி பிரும்மம் பல ரூபங்களாகக்காட்சியளிக்கிறது. இதனால் सर्वाणिरूपाणि विचित्यधीरः नामानिकृत्वाभिवदन्यदास्ते—என்று மந்திர வர்ணமும் சொல்லுகிறது. (பிரு. உப). அத்தகைய ஜீவனுக்கு உபாதி யினால் ஸம்ஸாரத்வம் பிராந்தி த்வைத நினைவுயேற்படுகிறது. காரியம் என்று சொல்லக்கூடிய நிலையில்—ஸ்வபாவத்திலோ ஸ்வரூபத்திலோ பேதமில்லை காரணத்தோடு சம்பந்தப்படுத்தி பார்க்கும்போது.

உபநிஷத்துக்களின் மூன்று உதாரணங்கள் கொடுக்கப் பட்டிருக்கின்றன. சுவர்ணம் அக்னி மிருத் இவைகளின் கார்யங்கள் காரணத்திலிருந்து வேறுபட்டதாகவில்லை. இந்த வளை விளக்கு மண்பானை ஆகிற மூன்று காரியங்களும் பரிணாமமாகவில்லை பால் தயிராவது போல இல்லை.

உபநிஷத்துக்கள் பிரும்மத்தை ஒன்று என்று மாத்திரம் சொல்லவில்லை. ஸ்வார்த்தம் அவனவனுக்கு ஞானத்தை உண்டு பண்ணுவதால் ஸ்வார்த்தவிதாதோ பவேத மித்யாபூத ப்ராமாண்யம். உபநிஷத் வாக்யங்களால் பிரத்யக்ஷமாக ஞானத்தை உண்டு பண்ணுவதால் அநத சம்சாரியான ஜீவனுக்கு (பிரும்மத்துக்கு) சோகமோக நிவிருத்தி யடைகிறது. அதனால் பிரும்மமும் ஜீவனும ஸ்வரூப ஐக்யமடைகிறது, ஏகத்வ ஞானம் வந்ததும் ஸ்வருப ஐக்கியமடைகிறது.

ஆனால் இவ்விதம் சொல்வதால் கர்மகாண்டம் எனப்படும் பூர்வ மீமாம்ஸததினால் யாது பயன் ஏற்படக்கூடும்? சங்கரர் வாதிப்பது கர்மகாண்டத்தின் நோக்கம் வேறு; பிருமம காண்டத்தின் நோக்கமும் வேறு, கர்ம காண்டத்தினால் ஸ்வர்க்காதி அடைந்து அவை அழியும்போது ஞானம யேற்படுகிறதல்லவா இந்த மாதிரி கர்மாக்களைச்செயயாத போனால் ஸ்வர்ககாமோ தர்சபூர்ண மாஸாப்யாம் யஜேத ஸ்வர்க்கத்தையடைய தர்ச பூர்ணமாஸ கர்மாக்களைச் செய்யவேண்டும் என்பதால் வேதம் பிராமாண்யத்தையடைகிறது. காம்யா கர்மாக்களுக்கு பலன் சித்திக்கிறது, என்று நம்பிக்கை விஸ்வாஸம் வேதத்திற்கு யேற்படுகிறது.

இதே மாதிரி ஆத்மா வேறு உண்டு. சாஸ்திர நம்பிக்கை ஏற்படுகிறது. புருஷார்த்தம் என்பது அழிவுற்றது அழிவில்லாதது என்கிற பாகுபாடுகளைக்கொண்டது என்கிற ஞானம் உண்டாகிறது. அவ்வித ஞானத்தினால் பிரும்மம் ஏகம் அத்விதீயம் என்கிற ஞானம் யேற்பட்டதும் பிரும்மத்தை சாஸ்திர நிஷ்டையினால் அறிகிறான். விக்ஞான்மயோ ऽन्योनेति नेति என்பதால் பிரும்மத்தைத்தவிர வேறுஒன்றும் பாரமாத்திகமாக ஸத்யஸ்ய ச ஸத்யே அப்பேற்பட்ட பிரும்மம் [illegible]

[illegible]—इति நான் அந்த பிரும்மம் என்று உணருகிருன் ஆகையால் तस्य हैतस्य—इति लिङ्गपुरुषस्यैवतानि रूपाणि என்று அறிகிருன். பிரும்மம் ஒன்றே ஸத்யம் அதை விட்டு வேறு ஒன்றுமில்லை ஸத்யமாகவில்லை எல்லாம் உபாதியினுல் விளைவிக்கப்பட்ட பேதங்கள். எப்போது வாக்ய ஜன்ய ஞானத்தினுலே பிரக்ஞானகனம நந்தரமபாஹ்யம் உள்ளும் வெளியே உப்புக்கட்டியிலே உப்பைத்தவிர வேறு ஒன்றுமில்லையோ அதுபோல பிரும்மத்தைத்தவிர, ஸத்யத்தைத்தவிர ஸத்யமஹம் பிரும்மாஸ்மி என்று ஸர்வ வஸ்துக்களையும் நிஷேதித்தலால் ஏற்படும் நிவர்த்தகஞானம்—இது இல்லை இது இல்லை—नेतिनेति என்பதால் பிரும்மம் ஒனறே ஸித்திக்கிறது. அதுவே ஸத்யம்—ஜக்த்மித்யை—நாமரூபங்கள் எல்லாம் வாக்கிற்கு ஆரம்பணம் சொல்வதற்கே யேற்பட்டதே ஒழிய பாரமார்த்திகமாக பிரும்மததைத்தவிர வேறு ஒன்றுமில்லை என்பதாம். அதாவது இவர்களுககு மூன்றுவித ஸத்யம் சொல்லப்படுகிறது. முதலில் பார்த்த க்ஷணத்தில் பிராதி பாஸிக ஸத்யம்; வ்யவஹாரிக தசையில் எல்லாம் ஸத்யம். பாரமார்த்திக தசையில் பிரும்மம் ஒன்றுதான் ஸத்யம் மற்றவை மித்யையாகும்.

எப்பொழுது அத்தகைய பிரும்ம ஞானம் சித்திங்கும்? சாஸ்திரத்தினுல் போதிக்கப்பட்ட பிரும்ம ஸ்வரூபத்தை அடிக்கடி ஆவிருத்தி (திரும்பச்சொல்லிச்சொல்லி) செய்வதால் ஒரு பிரவாஹம் ஓடுகிறதுபோல இடைவிடாமல் சிந்திப்பதால் நான் பிரும்மம் அந்த பிரும்மம் நானே என்கிற அப்யாஸ நினைவினுல் இவ்விதம் ஏக ஞானம் தோன்றும்—"நானே ஸ்ருஷ்டிக்கு முன்பு இருந்தேன், இப்போதும் இருப்பவன் நானே, வரப்போகும் காலத்திலும் இருப்பவன் நானே" இதனுல் அறிகிறவனின் ஸ்வரூப ஸ்வபாவம் மாருமல் ஞானுகாரமாக सर्वदा वर्तमानत्वात् எப்பொழுதும் பிரும்ம பாவமாக விருக்கிறபடியால் ஆத்ம சாந்தியை யடைகிருன். அவனுக்கு உபலப்தி (ஞானம்) யேற்படுகிறது. தனது ஸ்வரூபத்தை தெரிந்துகொள்கிருன்—அதாவது ஸ்வரூப சைதன்யம் நித்ய உபலப்தி निर्विशेषज्ञानமாகுக ஆகிருன். அவனுககு சேஷ்டிதங்கள் (கர்மாக்கள்) இலலை. காமமோ-ஆசையோ இலலை. அவித்யையினுல்

ஏற்படும் அநுபவங்கள்-கர்மாக்கள்-பலன்களை அனுபவிப்பது கர்த்ருத்வ-போக்த்ருத்வம் இல்லை. தன் மகிமையினாலே தன்னுடைய பாரமார்த்திக ஸத்யத்தினாலே எங்கும் நிரம்பியுள்ளவனாகவும் (ஸர்வகத்த்வம்)—யாவருக்குமுள்ள ஆத்மாவாகவும் (ஸ்வரூப ஞானமாகவே) सर्वात्मत्वम् என்பதால் பிரகாசிக்கிறான். அவன் அடையும் மனநிம்மதி ஆனந்தம்-துரீய அவஸ்தையில் இருப்பதைவிட ஒரு சில மாறுதல்களுடன்—அதாவது துரீய வஸ்தையில் மனம் துக்கங்களில் விடுபட்டு தான் வேறு விஷயம் வேறு என்கிற நிலை அழிந்து அதனாலே யேற்படும் ஆனந்தத்தை முயற்சியில்லாமலே ஆனந்த மயனாகவும் மற்றவர்களுக்கு ஆனந்தத்தைக்கொடுப்பவனாகவும் விருக்கிறான். இந்த அவஸ்தை ஜாகிரத ஸ்திதியிலும் அவனுக்கு யேற்படுகிறது. உலகத்தை அப்ரும்மாத்மகமாகப் பார்க்கிறான். அந்த ஸ்திதியில் அவன் என்று தனியான நிலையில்லை-யாரைப்பார்ப்பான்? எதனால் பார்ப்பான்? எதற்காகப் பார்ப்பான்?—யாதொரு பேதமுமில்லை, அறிகிறவன் அறியப்படும் வஸ்து அறிகிற ஞானம் இத்யாதிகளில் பேதம் ஒன்றுமில்லை. கேவல ஞான மாத்திரமாக விருக்கிறான். இது ஜீவன் முக்த நிலையாகும். नद्रष्टेर्द्रष्टारं पश्येः नश्रुते; श्रोतारं शृणुयात्-பிரு. 2. 3-4-1) இங்கு யேற்படும் பார்த்தல் என்பது ஒரு வஸ்துவின் உஷ்ணத்தைப்போல; நெருப்பின் பிரகாசத்தைப்போல—பிரகடனப்படுகிறது. அது போல ஞானமாத்திரமாக—சுத்த சைதன்ய வடிவாக சச்சிதானந்தமயனாக சாக்ஷியாக விருக்கிறான். அது எப்பொழுதும் இருக்கிறது. சாக்ஷியாக விருப்பதாலே அது பார்க்கிறதில்லை என்றே சொல்லலாம்.

ஆத்மா என்பது தேடப்படக்கூடிய அடையவேண்டிய பொருளாகவோ புருஷார்த்தமாகவோ ஆகிறதில்லை. ஆகவே ஆனந்தமயன் பிரும்மம்தான், ஏனெனில் पुच्छं प्रतिष्ठा। வால் ஆதாரமாக விருக்கிறது. இங்கு புச்சம் (வால்) வாலின் ஸ்வரூபத்தைப்போல இருப்பதை குறிக்கிறது. ஆகவே பிரும்மானந்தம எல்லா ஆனந்தங்களுக்கும் பிரதிஷ்டானமாக ஆதாரமாக தங்குமிடமாக வாசஸ்தலமாக விருக்கிறது என்று சொல்லலாம். மயட் பிரத்யயம் பிராசுர்யத்தை (அதிகமாக

விருக்கிற ஸ்வபாவத்தைச்) சொல்லவில்லை அது ஒரு காரியம் என்பதைக்குறிக்கிறது—पुच्छवत् पुच्छं प्रतिष्ठा । परायणमेक नीडं लौकिकस्यानन्द जातस्य ब्रह्मानन्द इत्येतदनेन विवक्ष्यते, नावयवत्वम् சங். 1.1-19) यातु भार्गवी वारुणी विद्या आनन्दो ब्रह्मेति व्यजानात् इति मयट्श्रवणात्—तस्मादन्नमयादिष्विव आनन्दमयेऽपि विकारार्थ एव मयड्विज्ञेयो न प्राचुर्यार्थः—என்பதாம். ஆகவே மனிதனுடைய உடலில் எது—எந்த அவயவம் ஆனந்தம் அடைகிறதோ—உள்ளிருக்கும் நடு ஸ்தானம் தான்—ஆத்மாவிருக்குமிடம் தான். ஆனந்தத்தை அடைந்து தேகத்தின் மற்ற விடங்களை ஆனந்தமடையச்செய் கிறது. ஆத்மா விருக்கிறதாலே அதுதான் பிரும்மமாகச் சொல்லப்படுகிறது.

சாங். உபநிஷத்தில் பூமவித்யையில்-கடைசியில் சொல்லப் படுவது—ஸநத குமாரரால்—நாரதருக்கு பூமா என்பதே சுகம் என்றார். भूमैव भूमा सुखम् । அந்த பூமா என்பது யாது? ஆத்மா அல்லது பிரும்மம் என்பதே பூமா—(அளவில்லாதது மிகப் பெரியது). இதே மாதிரி ஆத்மாவும் பிரும்மமும் ஒன்றுதான் என்று சாந்தோக்யத்தில் சொல்லப்பட்டது போல பிரஹதாரண்யத்தில் (வேறுவிதமாக) ஸ்வரூப ஐக்யம் பிரும்மமும் ஆத்மாவும் ஒன்றுதான என்று விளக்கி யுள்ளது. அது ஒரு தனிப்பட்ட அனுபவம் மாதிரி, ஆத்மாவே பிரும்மம் என்கிறது ஸ்தாபிக்கப்படுகிறது. யாகஞுய வலக்ய மைதரேயி ஸம்வாதத்தில்—आत्मनस्तु कामाय ब्रह्म प्रियं भवति ஆத்மாவின் (பிரும்மத்தின்) பிராமணஜாதி காரணமாகவே பிரும்மம் நேசிக்கப்படுகிறது. ஆத்மாவும் பிரும்மமும் ஒன்று தான் என்று ஸ்தாபிப்பதற்கு இங்கு பதினன்கு உதார ணங்கள் (மனைவி—புதரன—ஐஸ்வர்யம் இத்யாதி) காட்டப் பட்டன. ஆத்மாவில் நிருபாதிகப்ரேமை யிருக்கிறது. மற்ற வஸ்துக்களில ஔபாதிகமாக பிரேமையிருக்கிறது—ஒரு குண நிமித்தத்தினல் யேற்படும பிரேமை அன்பு. ஒருவஸ்து தனக்கு வேண்டியதால் தனக்கு உபயோகப்படுவதால்—அதன் பேரில் நமக்கு பிரியம் உண்டாகிறது. அந்த வஸ்துக்களின் போக் யதையினல் இல்லை. ஆனல் ஆத்மா விஷயத்தில் நிருபாதிக மாக அன்பு யேற்படுகிறது. (கண்ணன பிருபமாவிற்குக் காட்சி அளிக்கும்போது—எலலாக கன்றுகளும் எலலாப் பசுக்

களும்—எல்லாம் கோபாலர்களும் கண்ணனாகவே நான்கு புஜங்கள் சங்கு சக்கர ஆயுதங்களுடன் காட்சி அளித்தார்—கண்ணனாகவே எங்கும் பிரும்மா பார்த்தார்—அதுபோல)

आत्मा वा अरे द्रष्टव्यः श्रोतव्यो मन्तव्यो निदिध्यासितव्यो मैत्रेय्यात्मनो वा अरे दर्शनेन श्रवणेन मत्या विज्ञानेनेदं सर्वं विदितम्-ஸர்வமும் विदितं विज्ञातं भवति இது ரஜ்ஜுதான்—ஸர்ப்பமில்லை என்கிற யதார்த்தமான ஞானத்தையும அடைந்ததும் அவித்யா கல்பிதமான ஜகத்மித்யை விலகுகிறது. ப்ரீதி ஏன உண்டாகிறது ஒரு காரணத்தினலா அல்லது நிருபாதிகமா? ஆத்மாவின் காரணத்தினல் பிரியம் யேற்படுகிறதே ஒழிய வேறு காரணமில்லை என்பதாம். பிரயோஜனத்தினுல இலலை. ஒரு வஸ்து ஒரு சமயம் பிரியமாக விருக்கிறது வேருெரு சமயததில அதனிடம் வெறுப்பு யேற்படுகிறது. அவ்விதமில்லை பிரும்ம ஆத்ம விஷயத்தில் அதனுல் பிரும்மததை ஆச்யுத.—நம்பினவர்களை நழுவவிடாது என்பதாம். ஆகையால் பிரும்மத்தைத்தவிர வேறு ஒரு பொருள் இலலை என்பதும் ஆத்மாவே ஸர்வம் என்பதும் ஸிததம். இதுவே ஸ்ருஷ்டி—ஸ்திதி—லயம் இத்யாதி சமயங்களிலும் ஆத்மமயமாக விருக்கிறது. பரமாத்மாவே எல்லோருக்கும் ஆத்மா அப்பேற்பட்ட ஆத்ம வஸதுவை காணப்படவேண்டும் கேட்கப்படவேண்டும் ஆத்மைவ ஸர்வம் என்று அறியப்படவேண்டும். அந்த பிரும்ம பாவத்தையடையும் தருவாயில் அவனுக்கு உடனேயே தெரிவதில்லை தான பிரும்ம பாவத்தை யடைந்திருக்கிருமென்று யாராவது ஒருவன் சொல்லக்கேட்க 'ஆம் நான பிரும்மமாக விருக்கிறேன என்று தன்னை அனுபவிக்கிருன். இந்த உண்மை அவனுக்கு அவித்யா சமயத்தில் யேற்படுவதில்லை. केनचेत्स्मरि तस्य पुनः तस्यैव विद्यया आस्तिक्यया, तथा श्रुत्युपदिष्टस्य सर्वात्मा ब्रह्मण आत्मत्वदर्शनेन विद्ययायोतदासिद्ध्यपद्यते-இது ஒரு வித்யையை சம்பாதிப்பது போல ஒரு புதியதாக அடைதல் அதாவது நான் இந்த பிரும்ம ஞானததை அடையப்பெற்றேன். என்கிற மாதிரியில்லை ஏனெனில் அந்த நிலையில் அவனுக்கு அறியப்படவேண்டியது என்கிற புதிய வஸ்து பிரும்மத்தில் இல்லை. அவன் எதையும் பார்ப்பதில்லை எதையும் கேட்கிறதில்லை என்கிற வாக்யங்களால் பார்க்கப்படும் அல்லது கேட்கப்படும் வஸ்து என்று

வேறு ஒன்றுமில்லை அந்த பிரும்மத்தைத்தவிர (அவனைத்தவிர) ஆத்மா விஷயமாகாது. அறிகிறவனுககு ஞானத்தைத்தவிர வேறு ஒரு அனுபவமுமிலலை. ஆகவே ஸ்வரூப ஐக்யம் பிரும்மத்துடன் முழுதிலும் யேற்பட்டதாகிறது. அன்யவஸ்து ஒன்றுமில்லை. அதுபோல பிரும்மத்தைத்தவிர வேறு ஒரு வஸ்து ஒன்றுமில்லை. ஆகவே பிரும்மம் ஒன்றை அறிவதாலே உலகில எல்லா வஸ்துக்களும் அறியப்பட்டதாகும். ஆகவே வாக்ய ஜன்ய ஞானம் இவ்விதம் பிரும்ம பாவத்தை யடையும்படி செய்து விடுகிறது.

பிரும்ம ஞானம் அடைந்தவனுக்கு அதாவது ஸ்வரூப ஐக்யம் யேற்பட்டதும் அவனுக்கு எல்லா வஸ்துக்களின் ஞானம் உண்டாகிறது என்பதால் ஸத் த்யத் என்கிற பிரகிருதியின் ஸ்வரூபஸ்வ பாவத்தில் ஸத் என்பது மாருதது நித்யமாயும் பரமார்த்திகமாக வுள்ளது. ஸத்மூர்த்தம் மண், தண்ணீர், தீ, த்யத்—அமூர்த்தம் ஆகாசம் வாயு. ஆனுல் த்யத் என்கிற அமுர்த்தம் (ஆகாசம் வாயு) என்பதாம் இவை விகாரங்களை அடைந்துகொணடு உண்டாயும் அழிந்தும் போகினறன. ஆகவே "பானை இருக்கிறது" (सन् घटः) என்பதால் ஸத் பாவம் அழிகிறதில்லை ஆனுல் பானைதான் அழிந்து போயிருக்கலாம், ஆகவே பாரமார்த்திக தன்மை ஒரு வஸ்து வுக்கு திரவியத்தில் எப்போதுமிருப்பது ஆனுல் அதன் உரு வங்கள் விகாரங்களை யடைவதால் மித்யை யாகும். அதனுல் நாமரூப விகாரங்களை வஸ்துக்கள் அடைந்திருக்கின றன ஆனுல் பானையை உற்பத்தி செய்த களிமண் மாத்திரம் பார மார்த்திகம் ஸத்யம் श्रुपत् सत्यमेववाचारम्भणं विकारं नामधेयं मृत्तिकेत्येव सत्यं अस्तिभाति प्रियं रूपं नामचे त्यंतपञ्चकम् அந்த வஸ்து இருக்கிறது இந்திரியங்களால் அறியப்படும்படி பிரகடனமாகிறது. அது விரும்பப்படுகிறது. அதற்கு நாம்ரூபம் என்கிற உண்டு இதனுல் சொல்லப்படுவ்து ப்ராதி பாஸிகம் ஸத்யம், இரண்டா வதான வ்யவஹாரிகையும் ஸத்யம் மூன்ருவதான பரமார்த்திக தசையில் பிரும்மம் ஒன்றே ஸத்யம் அதைத்தவிர மற்றவை யாவும் பொய்கல்பிதம் முதன் மூன்றும் ஸத்தின் விஷயமாகும். பின்னுல் சொல்லப்பட்ட இரண்டும் (நாமமும் ரூபமும்) அபர

மார்த்தம்; கேவலம் வாசாரம் பணம் அதனுடைய அநித்யமான இருப்பைச்சொல்வதாகும். ஆகவே ஒருவஸ்துவைத் (காரணப் பொருளைத் தெரிந்துக்கொள்வதால் மற்ற எல்லா வஸ்துக்களா கிற (காரியங்களைத்) தெரிந்து கொண்டதாகும் என்பதால் பிரும்மம் எல்லா வஸ்துக்களிலும் வியாபித்திருக்கிறது. அதனுல் பிரும்மம் பரமார்த்தம் ஆனுல் விகாரஸ்பதங்களான வேறு வஸ்துக்கள்—விஷயங்கள்—கேவலம் நாம ரூபமாத்திரமே யிருக்கின்றன. இதனுல் பிரும்மத்தைத் தெரிகிறவனுக்கு உலக அனுபவங்களின் ஸமஷ்டி சேர்க்கையாக விராது. ஆனுல் ஒவ்வொரு வஸ்துவிலும் பிரும்மத்தைப்பார்ப்பதால் அவனுக்கு மற்ற வஸ்துக்கள் அநாவசியம் அழிந்து போகும் தன்மையுள்ளது. உண்மையாகிற பாரமார்த்திகத்தின் மாறு தலோ வெளித்தோற்றமே. எவன் பேதத்தைப் பார்க்கிருனே அவன் மிருத்யுவை யடைகிருன்—नेह नानास्ति किंचन मृत्योः स मृत्युमाप्नोति य इह नानेव पश्यति—கட உப-4 21, பல்வேறு வஸ்துக் களாகத் தோற்றம் அளிக்கிறதே அவை எல்லாம் பிரும்மமே. இதனுல் மூக்தாத்மாவின் அனுபவம் சொல்லப்படுகிறது. பிரும்மம் ஒன்றே ஸத்யமாதலால அந்த அனுபவம் ஆத்மாவாக யேற்படுகிறது. ஆத்மாவும் பிரும்மமும் ஒன்றையொன்று சொல்லும்படி பர்யாய பதமாக ஆகிறது. ஆகையால் யாக்ஞ்ய வல்கியர் மைத்ரேயிக்குச் சொன்னுர் "ஆத்மா அறியப்படவேண்டும் கேட்கப்படவேண்டும் அடிக்கடி நினைத்துப் பார்க்கப்படவேண்டும்" தியானம் செய்யப்படவேண்டும். இவ் விதம் செய்வதால் "இந்த எல்லாம் सर्वमिदं-பிரும்மமே. ஆகவே ஸ்வேத கேதுவே तत्त्वमसि-நீ அந்த பிரும்மமாக விருக்கிருய்"— என்பதாம்—(சா. உப)

அப்பேற்பட்ட ஸத்ய ரூபமான பிரும்மத்தினிடம் ஜகத் எனப்படும் பிரபஞ்சம் ஆஸ்ரயமாக விருக்கிறது. ஜகத் எப்படி மித்யையாகும் என்கிற கேள்விக்கு-பதில் சொல்லப்படுகிறது. ஸ்வப்னத்தில் காணப்படும் பொருள்கள் எல்லாம் கல்பிதம் ஜாக்ரதியில் பிரபஞ்சம் இருக்கத்தானேயிருக்கிறது. இது ஸ்வப்னத்தில் காணப்படும் பொருள்களைப் போல அல்ல, சங்கரரின் அபிப்ராயப்படி ஸ்வப்ன வைலக்ஷண்யம் ஜாக்ரதை

யானலும் இதனல் அது ஸத்யம் என்று சொல்வது ஆகாது. ரஜ்ஜீ ஸர்ப்பம் இவைகளில் யேற்படும் பிரமை இது ரஜ்ஜீதான் என்கிற ஞானம் ஏற்பட்ட பிறகு ஸர்ப்பம் என்கிற பிரமை அழிகிறதல்லவா? ஸ்வப்னம் ஜாக்ரதைகளில் ஸர்வ பதார்த் தங்களுக்கும் ஆத்மாவே அதிஷ்டானம். ரஜ்ஜீ அது அநாத்ம அதிஷ்டானம், அதனல் ஆத்மாவை அதிஷ்டானமாகவுடைய ஸ்வப்ன பிரபஞ்சத்தின் வைலக்ஷண்யமே விவாதமில்லாத விஷயமே.

ஸ்வப்னத்தில் வஸ்துக்கள் அடிக்கடி மாறுகின்றன. ஜாக்ரதையில் ஒருவஸ்து அதே மாதிரி யிருக்கிறது, மாருமல் இருக்கிறது என்று சொல்லுவதற்கில்லை. வஸ்துவின் தன்மை யும் மாறுகிறது ஒரேவஸ்து ஒருசமயம் விரும்பப்பட்டதாயும் இன் ஞெரு சமயம் வெறுப்பை உண்டாக்குவதாகவும் இருககிறது. ஸ்வப்னத்தில் குதிரை பசு ரதம் கற்பிக்கப்படுகின்றன. அதே வஸ்துக்கள் ஜாகரதையில் இல்லாதபடியால்ஸ்வப்ன வஸ்துவை நாம் பொய் என்கிருேம். இதுபோல ஜாக்ரதை வஸ்துக்கள் ஸ்வப்னத்தில் காணப்படாமற்போனல் அதுவும் ஆத்மாவின் அநுபவசம்பந்தமட்டில் பொய்தானே. ஸர்ப்பம் ரஜ்ஜியில் இல்லை இது ரஜ்ஜீ (கயிறு) தான் என்று ஞானம் யேற்பட்டதும் ஸர்ப்ப ஞானம் பின்னல் பாதிதமாகிறது. அதுபோல முத்துசிப்பியும், இது சிப்பிதான் வெள்ளியில்லை என்பதால் பாதிதம் அது போல இப்பிரபஞ்சத்திற்கும் तत्त्वमसि என்கிறதும் अहं ब्रह्मास्मि என்கிற ஞானத்தினல் அழிவு என்பது உண்டாகிறது நிச்சயம், அதற்கு அடையாளமாக திருஸ்யத்வம் என்பதில் பிரபஞ்சம் மித்யை ஏனெனில் ஸ்வப்னத்திலும் எப்பொழுதும் காணப்படு வதில்லை. ஸீஷீப்தியிலும் தோன்றவில்லை. விமதம் (ஜகத்) மித்ய த்ருச்யத்வாத் ஜடத்வாத் பரிச்சின்னவாத் சுக்தி ரௌப்ய வத் என்று அனுமானத்தினல் பிரபஞ்சம் பொய் என்பது நிச்சயம். மேலும் இப்பிரபஞ்சம் அஞ்ஞான கல்பிதம். சுக துக்கங்கள் மோஹம் ஆகியவை மூன்றும் ஸத்வ ரஜஸ்தமஸ் ஸாதிகளால் மூன்று த்ரிகுணத்மிக அக்ஞானத்தினல் யேற்படு கிறது. அக்ஞானம் அழியவேண்டிய வஸ்து, அதனல் கல்பிதம் செய்யப்படுபவை எல்லாம் பொய். ஆகவே பிரபஞ்சமும்

கல்பிதம் பொய், தத்வ ஞானத்தினுல் பந்த ரூபமான பிரபஞ்ச நிவிருத்தி ஏற்படுகிறது. ஒரு ராஜபுத்ரனுக்கு வேடன் என்கிற புத்தியிருக்கும்வரை அவனிடம் ராஜத்வ ஞானம் இல்லாத போது பிரும்மத்துக்கு அவித்யை ஸம்பந்தத்தினுல்தான் பிரும்மம் என்பதை மறந்து ஜீவன் என்கிற பாவம் தடித்து தனக்குக் கர்த்தா—போக்தா ஸம்சாரி என்கிற அனுபவங்கள் யேற்பட ஆத்மாதான் பிரும்மம்; ஆகிலும் தான் பிரும்மம் தான் என்கிற நிச்சயபுத்தி ஒருவருக்கும் யேற்படுவதில்லை. ஆகவே பிரும் மத்திற்கு ஸங்திக்தவம் அதயாஸம் மாதிரி பிரமை யேற்படு கிறது. பந்த நிவிருத்தி ஞானம் உண்டான பிறகு ஸங்திக்த்வம் (அத்யாஸம்) (ஒன்றை இன்னென்றில் தவருக ஆரோபித்தல்) அழிந்ததும் யேற்படுகிறது. அதற்கு பிரும்ம விசாரம் செய்து தத்வ ஞானத்தைப் பெறவேண்டும். வேதாந்த வாக்ய ஜன்ய ஞானத்தினுலும் குருமுகமாகப்பெற்று ஸாதன சதுஷ்டய ஸம்பத்தியை யடைந்தபின்பு பிரும்ம விசாரம் செய்யத்தகுந்தது. அந்த பிரும்மத்திற்கு தடஸ்த லக்ஷணங் களாகிற ஜன்மாதி என்கிற பதத்திற்கு ஜன்மஆதி யஸ்ய ஜன்ம ஸ்திதி பங்கஸ்ய தத் ஜன்மாதி ஆகியவையாம். இங்கு பஹுவ் ரிஹி ஸமாஸத்தினுல் தத் குண ஸம்விக்ஞான பஹுவ்ரிஹியி னுல் ஜன்மாதி என்கிற பதத்திற்கு ஸ்ருஷ்டி ஸதிதி ஸம்ஹாரம் என்கிற அர்த்தம் யேற்படுகிறது. இந்த முத்தொழில்களும் சேதனனுகிற ஜீவனுல் செய்யப்படுகின்றன என்கிற வாதமும் தள்ளப்படுகிறது.

ஜீவர்களில் மிக்க மேலான வ்யஷ்டி ச்ருஷ்டியின் கர்த்தா வான ஹிரண்ய கர்ப்பரும் (பிரும்மாவும்) ஜகத்கர்தா அதுபோல காப்பதல் லயம் இத்யாதிகளுக்கும் கர்த்தா வென்கிறதும் தள்ளப்படுகிறது, ஏனெனில் அவனும் அவன் பலனை அனுபவித்துவிட்டு அழிந்துபோகிறபடியால். சுருதி यो ब्रह्माणं विदधाति पूर्वं என்கிறபடியால் ஹிரண்யகர்ப்பரும் ஸ்ருஷ் டிக்கப்பட்டவரே. ஆகவே ஜீவனுக்கில்லை என்பது ஸித்தம். அனுமானத்தினுல் கிடைக்கிறது. ஜகத்தை ஸ்ருஷ்டிப்பது வெகு கடினமான காரணம். ஸர்வக்ஞத்வம் அதாவது காலம் தேசம் நிமித்த வ்யவஸ்தைகளை ஒருவன் அறிந்திருக்க வேண்டுமானுல்

ஈஸ்வரனே ஆகும். முக்த தசையில் ஜீவனுக்கு இவை இருக்கு மானலும் ஜகத் வ்யாபார வர்ஜம் என்று சூத்ரகாரரே சொல்கிருர். ஜகத் ஸ்ருஷ்டி எதற்காக? ஒரு பிரயோசனமான கார்யமாகவுமில்லை. ஸர்வசக்தியுள்ள பிரும்மத்திற்கு யாது பிரயோசனமிருக்கக்கூடும்? இதுவும் ஜீவனுக்கில்லை. ஆனல் சேதன வஸ்துவனல் ஆக்கப்பட வேண்டியதாகையால் ஒரு முக்தாத்மாவினலோ பிரகிருதி என்று சொல்லப்படும் மாயையினலோ என்ருல், பிரக்ருதி அது அசேதனம், ஸ்ருஷ்டிக்கு முனபு அது ஸங்கல்பிக்கவேண்டும் செய்யவேண்டும், இது அசேதனத்திற்கு முடியாது. இந்த த்ருசய பிரபஞ்சத்திற்கு ஸ்ருஷ்டி ஸ்திதிலயமுண்டு திரிவிதபரிச்சேத சூன்யமாயும் திரிகால பாத்யமாயும் ஸ்வயம் பிரகாசமாயுமிருக்கிற வஸ்து பிரும்மம் அதனல்தான் முடியும், மாயை போன்ற ஜடவஸ்துவினல் கூட முடியாது.

ஜகத்காரணத்வம் பிரும்மம்தான் காரண வஸ்துவில்தான் காரியத்திற்குக் காரண வஸ்துவில்தான் ஜன்ம ஸ்திதி பங்கம் யேற்படும். குடத்திற்கு மண்ணில்தான் பஙகம், ஜன்ம ஸ்திதி பங்கம் காணப்படுகிறது. பிரும்மம் உபாதான காரணமா நிமித்தகாரணமா இல்லை அபினன நிமித்த உபாதான காரணமா? ஒரே வஸ்து அபின்னமாக நிமித்தமாயும் உபாதான காரணமாயும் இருக்கக்கூடியதாக உலகத்தில் காணேம். பிரும்மத்திற்கு லக்ஷணங்கள் சொலலும்போது ஸத்யம் ஞானம் அனந்தம் இதில் ஸத்யம் என்பதற்கு அழியாதென்றும் ஞானம் என்பதற்கு அறிவு என்றும் அனந்தம் என்பதற்கு முடிவற்றது என்றும் வெவ்வேறு அர்த்தங்கள் உள. இமமூன்றும் ஒரு பிரும்மத்தை சொல்லுமா போதிக்கும் சக்தியுள்ளவைகளாக ஆகாது. வெவ்வேறு பிரும்மத்தைச் சொல்லக்கூடுமானல் அத்வைதஹானி யேற்படும், இது பூர்வபக்ஷம்.

சித்தாந்தி—யதோவா இமாநிபூதாநி ஜாயந்தே என்கிற வாக்யத்தினல் ஜகத் காரணத்வம் பிரும்மததிற்கு லக்ஷணமாகச்சொல்லப்படுகிறது. இது கேவல நிமித்தத்வமுமல்ல உபாதானத்வமும் அல்ல. அபின்ன நிமித்தோபாதான த்வருபம் இரண்டும் தான் ரூபம். பிரும்மம் எல்லாமுமாக விருப்பதால்

எங்கும் வ்யாபகமாக விருப்பதால் அதுவே மண்ணுகவும் குயவனுகவும் இருப்பதால் ஒரே வஸ்துதான் உபாதானகாரண மாகவும் நிமித்த காரணமாகவுமிருக்கிறது. காரியமாகிய குடத்தில் சித் ரூபமான பிரும்மத்தின் தர்மங்களாகிற ஸத்வம் சித்வம் பர்யத்வம் என்பவைகள் காணப்படுகின்றன. ம்ருத்வச் சின்னமான சைதன்யத்தை உபாதானமான காரணமாகவும் குலாலனுகிற சின்னத்தை நிமித்த காரணமாகவும் சொல்ல வேண்டும் என்பதே வேதாந்த ஸித்தாந்தம். எங்கும் வியாபக மான பிரும்மம் மண்ணில் சமபந்தப்பட்டும் குயனிடத்தில் சம்பந்தப்பட்டிருப்பதால் ஒரே சித்ரூபமான பிரும்மமே இருந்து வருகிறபடியால் பிரும்மம் அபின்ன நிமித்தோபாதானம் என்று சொல்லுவதால் தோஷம் ஒன்றும் யேற்படாது. ஜகத்பின்ன நிமித்தோபாதனத்வ ஸ்வரூபமான ஜகத் காரணத்வம் பிரும்மத் திற்குத் தடஸ்த லக்ஷணமாக—யதோவா இமானி என்கிற வாக்யத்தினுல் பிரகாசப்படுத்தப்படுகிறது.

இதேபோல ஸ்வரூப லக்ஷணமும் சரியே. நீலம் மஹத் ஸுகந்தி உத்பலம் இதில் உத்பலத்திற்கு (தாமரைக்கு) நீலம் மஹத் ஸுகந்தி ஆக மூன்று பதங்களுக்கு வெவ்வேறு அர்த்த மானுலும் ஒரே ஒரு வ்யக்தியை (இங்கு புஷ்பத்தைக்) குறிக் கும், ஒரே அர்த்தத்தைச்சொல்லும், ஒரே ஸ்வரூபத்தைத்தான் போதிக்கும். அது போல ஸத்யம் ஞானம் அனந்தம் மூன்று பதங்களும் தம் தமக்கு விரோதியான தர்மங்களை பிரும்மத்தி னிடத்தில் இல்லையென்று போதித்து அதன் மூலம் அகண்ட மான பிரும்ம ஸ்வரூபம் ஒன்றைத்தான் போதிக்கின்றன. மித்யா ரூபமான பிரபஞ்சத்தைக்காட்டிலும் பிரும்மம் வேறு பட்டது அது ஒன்றுதான் என்று இம்மூன்று பதங்களும் அர்த்த மாகச் சொல்லுகின்றன. ஸத்யம் என்பதால் மிதயையான பிரபஞ்சத்தைவிட வ்யாவிருத்தி (வேருனது) கிடைப்பதால் திரிகால பாத்யத்வம் பிரும்மத்திற்கு இல்லை. அபாத்யத்வம் தான் அதுமாதிரி ஜடபிரபஞ்சத்தின் வ்யாவிருத்தி (வேறுபட் டது) கிடைப்பதினுல் ஸ்வயம் பிரகாசசித்தேக அகண்டரஸத்வம் என்பது பிரும்மத்திற்கு உண்டு. அநந்தம் தேசத்தினுலும் காலத்தினுலும் வஸ்துவினுலும் பரிச்சேதமில்லை அதனுல் திரி

மித பரிச்சேத சூன்யத்வம் என்பது சித்தம். இவ்விதமாக் ஸ்வரூப லக்ஷணமும் தடஸ்த லக்ஷணவாக்யத்தினுல் ஜகத் காரணத்வமும் பிருமத்தினிடம் போதிக்கப்படுகின்றன.

यतो वा इमानि भूतानि जायन्ते என்கிற வாக்யம் ஜன்மாத்யாதி கரணத்தில் சொல்லப்படுகிறது. இதற்கு பொருள் இப்படி கூற வேண்டும் இதம் பிரத்யக்ஷமான வஸ்துவாகிற பிரபஞ்சம்: अस्य ஜன்மாதி தர்மமுள்ளது यतो என்பது காரணத்தைச்சொல்லும் ஆகவே அநேக நாமரூபங்களுடனும் ஸ்தூலமாக்கப்பட்டதும் அநேக கர்த்தா போக்தா இவற்றுடன் கூடியதும் தனித்தனியுள்ள தேசம், காலம் இவைகளாகிற நிமித்தமுள்ள கிரியா பலனுள்ளதும் மனத்தினுலும் சிந்திக்கப்படமுடியாத இந்த பிரபஞ்சத்திற்கு ஜன்ம ஸ்திதி இருப்பு லயம் (முடிவடைதல்) ஆகியமூன்றும் பங்க மானது. ஸர்வக்ஞமாயும் ஸர்வ சக்தியுமாயிருக்கின்ற பிரும்மம் எந்தக்காரியத்தினின்று உண்டாகின்றதோ அது பிரும்மம் என மேலுள்ள வாக்யத்தையும் சேர்த்துப் பொருள் கொள்ளவேண் டும். तद्विजिज्ञासस्व तद्ब्रह्म என்று तत् இரண்டாவது தடவை பிரயோகம் செய்திருப்பதால் ஸர்வ பிரபஞ்சத்திற்கும் அதிஷ் டான மாத்திரமாயுள்ளது பிரும்மம் என்றும் அந்த அதிஷ்டான மாத்திரத்தின் ஞானம் மட்டுமே புருஷார்த்தஹேது வென்றும் உபதேசிக்கப்பட்டதாக யேற்படுவதை விளக்கவே ஜன்மாத்யதி கரணம் செய்யப்பட்டது. ஆகவே புருஷார்த்த லாபம் பிரும்ம ஞானத்தை அடைய ஆவல் (ஆசை) உண்டாகி பிறகு பிரும்ம ஞான மாத்திரத்தினுலே புருஷார்த்த ஸிததி அதாவது அதிஷ் டானமாக விருக்கும் பிரும்ம ஞானமே புருஷார்த்தம்.

இந்த பிரும்ம ஞானம் சாஸ்திரம் ஒன்றினுல் மட்டுமே அறியக்கூடியது அடையக்கூடியது. குருமுகமாக ஸம்பிரதாய மாக வேதாந்தசாஸ்திர விசாரம் செய்து மநன நிதித்யாஸம் இவைகளால் சங்கைகளைப்போக்கி பிரும்மாத்மைக் யானுபவம் செய்தலே புருஷார்த்த லாபமாகும். சாஸ்திரம் வேதங்கள் பிரும்ம வஸ்துவில் பிரமாணமாகும், சாஸ்திரத்திற்கு வேதங்களுககும் காரணமானது பிரும்மம் என்ற பொருள் கொண்டது—சாஸ்த் திரயோ நித்வாதி கரணம் மூன்ருவது, சாஸ்திர யோனித்வாத் என்பதின் அர்த்தம் இதாகும்.

நான்காவது சூத்ரம் तत्तुसमन्वयात् சாஸ்திரம் காயிகமாகவோ மானஸிகமாகவோ உள்ள கர்மங்களைப்போதிக்கின்றது. அதற்கு நேர்மாருக பிரும்மத்தை சாஸ்திரத்தைக்கொண்டு எப்படிப்பொருந்தும் என்கிற சங்கைக்கு நான்காவது சூத்திரத்திஞல் விளக்கப்படுவது உபக்ரமம் (ஆரம்பம்) உபஸம்ஹாரம் (முடிவு), அப்யாஸம், ஆபூர்வதை, பலன், அர்த்தவாதம் (புகழ்ச்சி சொற்கள்) யுக்தி (தர்க்கம்) ஆகிய இவ்வாறையும் கொண்டு சாஸ்திரத்தின் அர்த்தத்தை நிர்ணயம் செய்து கொள்ளவேண்டும். तत्तु समन्वयात् சாஸ்திர அர்த்தத்தை நிர்ணயம் செய்பவர்க்கு ஸர்வ சாஸ்திரங்களும் தமது முக்கிய நோக்கு பொருளாக முற்கூறிய பிரும்மத்தை உபதேசிப்பது விளங்குமாதலால் அவ்விதம்தான் அதை விசாரித்தறிய வேண்டுவது அவசியம் என்பது இதஞல் சூசிக்கப்படுகிறது. பிரும்மம் ஒன்றே முக்கிய தாத்பரிய விஷயமானதென்றும்; सर्वेवेदा यत्पदमामनन्ति என்பதால் (எல்லா வேதங்களும் எந்த பிரும்ம ஸ்வரூபத்தைச் சொல்லுகின்றனவோ என்பதால் பிரும் மத்தை அறியவேண்டியது என்பது ஸிததம், சதுஸ்ஸூத்ரி இத்துடன் முற்றிற்று. இவை நிர்விசேஷ பிரும்மத்தைக் கூறுகின்றன.

சங்கரரின் கருத்துப்படி ஜீவன், ஈஸ்வரன், சுத்த பிரும்மம், ஜீவ ஈஸ்வர பேதம் அவித்யை அவித்யைக்கும் பிரும்மத்திற்கு முள்ள சம்பந்தம் ஆக ஆறும் அநாதி என்பதாம் (எப்போது வந்தது என்று சொல்லமுடியாது) இதஞல ஜகததும் (பிரபஞ்சமும்) அஞதியாகி விடுகிறது. அவ்விதம் அஞதியாகவிருக்கும் ஜகத்திற்கும் காரஞவஸ்தை எப்படி ஸம்பவிக்கும்? (ஜகத் என்பதற்கு ஜீவன் ஈஸ்வரன் ஜீவ ஈஸ்வரபேதம அவித்யை அவித்யைகக்கும் பிரும்மத்திற்குமுள்ள சம்பந்தம் (அதாவது சுத்த பிரும்மத்தைவிட வேருன இந்த ஐந்து பதார்த்தங்களை அநாதி என்பதால் ஜகத்திற்கு காரஞபேக்ஷை ஏது? எவ்விதம் உண்டாகும் என்கிற சங்கை எழும்? சித்தாந்தி கூறுவது-ஜகத் அஞதியாஞலும் வஸ்துவின் ஸ்வபாவத்தை அபேக்ஷித்து ஜகத்துக்குப் பிரும்மம் காரணமென்று சொல்லப்பட்டது. வஸ்துவின் ஸ்வபாவம் பிறந்து அழிவது அதுபோல ஜகத்தும்

பிறந்தும் அழிகிறதென்பது பிரத்யக்ஷம். ஜகத்திற்கு வியஷ்டி ஸமஷ்டி என இரு ஸ்வரூபங்கள் உண்டு. குடம், வஸ்திரம் என்று தனித்தனியாக பிரித்து வகுப்பப்படும்போது வியஷ்டி, வஸ்துக்களைப் பிரித்துக்காட்டாமல் ஜகத் என்று பொதுவாகச் சொல்லப்படும் பிரபஞ்சம் ஸமஷ்டி (சேர்க்கைக் கூட்டம்) ஸமஷ்டி பிரபஞ்சம் உண்டாகிறதில்லை ஆகையால் அநாதி ஆனால் வ்யஷ்டி ரூபமான ஜகத்திற்கு உற்பத்தியுண்டு. வெவ்வேறு காலத்தில் வெவ்வேறு பொருள்கள் உண்டாகின்றன. ஆகவே ஸகல ஜகத்தும் சேர்ந்து ஒரே காலத்தில் உண்டாகாத படியினால்தான் ஸம்ஷ்டியான ஜகத் அநாதி யென்றும் சொல்லப் படுகிறது. ஆகிலும் வ்யஷ்டி ரூபமான ஜகத்திற்கு உற்பத்தி (லயம்) யேற்படுகிறபடியால் அதை அபேக்ஷித்து ஸர்வ ஜகத் காரணத்வம் பிருமமத்திற்கு தடஸ்த லக்ஷணமாகச் சொல்லப் பட்டது.

இதனால் ஜகத்மித்யை என்பது எப்படி தேறும்? கிளிஞ்சலை வெள்ளியாகக்காணுதல்—இந்த திருஷ்டாந்தத்தைக்கொண்டு பிரபஞ்சத்தை பொய் என்று வாதிக்கிறார்கள். இதம் ஜகத் மித்யாத்ருச்யத்வாத் ஜடத்வாத் பரிச்சின்னவாத சுக்தி வளப்ய வத் என்கிற அனுமானத்தைக்கொண்டு வேதாந்திகள் ஜகத் பொய் என்று சொல்லுவதில் பிரமாணமாகச் சொல்கிறார்கள். எப்படி? ஸ்வப்ன பிரபஞ்சம் எப்படி பொய்யோ (அதாவது ஸ்வப்னத்தில் காணப்படும குதிரை ரதம எப்படி விழித்தும் பொய்யோ) அதுபோல ஜாகரபிரபஞ்சமும் (விழிப்பு அவஸ்தையில் காணப் படும் பிரபஞ்சமும்) பொய்தான். ஸ்வப்னத்தில் கர்த்தாவாகிய புருஷனை அபேக்ஷிக்கிறதல்லவா? அதுபோல பிரபஞ்சம் பொய் யானதால் அக்ஞானமே அவிதநையே இதற்குக் காரணம். அக்ஞானத்திற்கு ஆஸ்ரயத்வம் அளிக்க ஒரு வஸ்து வேண்டும் அந்த ஆஸ்ரயத்தைக்கொண்டுதான் ஒன்றிற்குக்காரணமாகும் ஜடபிரபஞ்சமோ அக்ஞானத்தின் காரியமானதால் அக்ஞானத் திற்குப்பின்பு யேற்பட்டது. அக்ஞானத்திற்குப்பின்பு வந்த இந்த ஜகத்தானது அக்ஞானத்திற்கு ஆஸ்ரயமாகாது ஆக முடியாது. ஆகவே பிரும்மம்தான் ஆஸ்ரயமாக விருக்க வேண்டும். பிரும்ம அதிஷ்டானம் ஸத்யம் ஜகத்மித்யை

என்பதாகும். விவரணச்சார்யார் சொல்கிறார் அக்ஞானத்திற்குப்பின் வந்த ஜடபிரபஞ்சம் அக்ஞானத்திற்கு ஆஸ்ரயமாகாது. அக்ஞானத்திற்கு முன் உள்ள சித்ரூபமான பிரும்மம்தான் ஆஸ்ரயம். அஞ்ஞானத்திற்கு பிரும்மமோ நித்ய சுத்த புத்த பிரும்மமாகும்—நிர்விசேஷமாகும்; அதெப்படி ஆஸ்ரயமாகும் என்கிற சங்கை எழும்?

இதற்குப் பரிஹாரமாக ரஜ்ஜிவில் ஸர்ப்பத்தைப் பார்க்கிறோம். கிளிஞ்சலில் வெள்ளியைப் பார்ப்பதுபோல இது அக்ஞானத்தினால் யேற்படுவது. அந்த அக்ஞானம் தன்னால் உண்டுபண்ணப்பட்டு பிரபஞ்சத்துக்குள் அடங்கிய எல்லா வஸ்துக்களும் கிளிஞ்சல் பழுதை (பாம்பு) முதலான கார்ய பிரபஞ்ச வஸ்துக்களுடன் சம்பந்தப்பட்ட சைதன்யத்தை (அதாவது நித்ய சுத்த புத்தவாகவிருக்கும் சைதன்யத்தை) (அதாவது வெள்ளித்தன்மையான சின்னத்தையும், ரஜ்வ (கயிற்று) வச்சின்னமாயும் இருக்கும் சைதன்யத்தை ஆஸ்ரயித்து ரஜதம் (வெள்ளி), ஸர்ப்பம் என்று பிராதி பாஸிக பிரபஞ்சத்தையும் (தோற்றமாக அளிக்கும்) உண்டுபண்ணுகிறது. நிருபாதிகமான பிரும்ம ஞானத்தைக்காட்டிலும் வேறான சுக்தியின் ஞானம் (வெள்ளியின் நிஜஞானம்) அதுபோல ரஜ்ஜீவின் (கயிற்றின்) ஞானம் என்ற இவைகளாலே ரஜதம் ஸர்ப்பம் பிராதிபாஸிகமாகத்தோன்றும் பிரபஞ்சம் என்று சொல்லப்படுகின்றன. அதாவது விவகாரிக தசையில் பார்க்கும் மாத்திரசமயத்தில் இது ரஜதம் இது ஸர்ப்பம் இவைகளுக்கு உயிரே தவிர மற்ற (பாரமார்த்திக) சமயத்தில் உயிரில்லை என்பது இதன் அர்த்தம். (ஏனெனில் பிரும்மம் ஒன்றுதான் ஸத்யம் என்பதால்)

இதனால் யேற்படுவது யாதெனில் அக்ஞானம் நிரவச்சின்ன (சுத்த) சைதன்யத்தை ஆஸ்ரயித்து கிளிஞ்சல் பழுதை முதலானவைகள் போன்ற மண் நூல் இவைகளை உண்டு பண்ணி மறுபடியும் கிளிஞ்சலுக்கும் பழுதைககும் ஸமானமான மண்ணியும் நூலேயும் ஆஸ்ரயித்து ஸாப்பததிற்கும் வெள்ளிக்கும் சமானமான கடததையும் (பானையையும்) படத்தையும் (வஸ்திரததையும்) சிருஷ்டிக்கிறது. ஆகவே ஸகல பிரபஞ்சமும் அக்ஞானத்தின் விளைவாக கற்பிக்கப்பட்டதாகும். அதில்

பிரும்ம ஞானத்தைக்காட்டிலும் வேருன ஞானத்திஞலேயே அழிகிறதாகிற பிரபஞ்சமாக அவை எல்லாம் பிரபஞ்சத்தைப் போல அழியக்கூடிய தன்மையுள்ளவையாகும். அவைகள் தான் பிராதி பாஸிகம் (வியவஹாரிக தசையில்) என்று சொல்லப்படும். பிரும்மஞானம் அடைவதிஞல் இந்த பிராதி பாஸிக ஞானம் அழியும். சுத்த சைதன்யத்தை ஆஸ்ரயித்த அக்ஞானத்திஞல் உண்டானது எப்படியோ பாரமார்த்திக ஞானத்திஞல் வ்யவஹாரிக பிரபஞ்சம் கற்பிக்கப்பட்டதாலே அழிய வேண்டியதே. பாரமார்தத்திலோ பிரபஞ்சம் என்பதோ இல்லை. பிரும்மம் ஒன்றுதானே ஸத்யம், இவ்விதம் ஸகல பிரபஞ்சமும் (சுத்த) சைதன்யத்தை அவலம்பித்த அக்ஞானத் திஞல் யேற்பட்டது என்பது சித்தம். பாரமார்த்திக ஞானத்தி ஞலே நிர்விசேஷ பிரும்ம ஞானத்திஞலே அஞ்ஞானமும், அக் ஞான கற்பிதமான இப்பிரபஞ்சமும் அழியவேண்டியதே என்பது ஸித்தமாயிற்று.

உபாதான காரணம் இருவகைப்படும். ரஜ்ஜீ ஸர்ப்ப உதா ரணத்தில் ரஜ்ஜீ விவரிததோபாதானமென்றும், ரஜ்ஜீவின் அக் ஞானம் பரிணமியுபாதானமென்றும் ஆக விவர்த்தோபாதானம் பர்ணமியுபாதானம என இரு வகையாம், அதாவது ரஜ்ஜி ஸர்ப்பம் என்று காரியம் போகும் (அழியும்) காலத்தில் அதற்கு முன்னமே ரஜ்ஜீவின் அக்ஞானம் போகிறபடியால், அது பர்ண மியுபாதானம். ரஜ்ஜீ ஸர்ப்பம் போகிறபோது அத்தோடு ரஜ்ஜீ வானது நசிக்காமற்போய் பிறகும் இருந்து வருமாகில் அது விவர்த்தோபாதானம். அதுபோல ஸர்வ பிரபஞ்சத்திலும் அக் ஞானம் பரிணமி யுபாதானம் போல, விவேக முள்ளவர்கள் இதன் தத்வத்தை விசாரித்தால், ஸர்வ விதத்திலும் பிரும்மம் தான் ஜகத் காரணம் எனத்தெரிந்து கொள்வார்கள். ஒரே பிரும்மம்தான் குடத்தின் உதாரணத்திஞல் குலால (குயவன்) சரீர சம்பந்தப்பட்டு நிமித்தகாரணமாகவும், மண்ணின் அக் ஞானத்தில் சம்பந்தப்பட்டு விவர்தோபாதான காரணமாக ஆகின்றது. இப்படியே மற்ற எல்லா இடங்களிலும் விவரம் செய்யவேண்டியது. ஆகையால் ஸர்வ ஜகத்திற்கும் பிரும் மமே அபின்ன நிமித்த உபாதான காரணமாகும். ஆகவே பிரும் மத்துக்கு தடஸ்த லக்ஷணம் என்று சொல்வதால் ஒரு தோஷமு

மில்லை. ஸர்வ ஜகத் காரணத்வேஸதி ஸர்வக் ஞத்வம் என்கிற தடஸ்த லக்ஷணத்தாலும் திரிவித பரிச்சேத சூநயத்வேஸதி திரிகாலா பாத்யத்வேஸதி ஸ்வயம் பிரகாச சிதேக ரஸத்வம் என்கிற ஸ்வரூப லக்ஷணத்தாலும் பிரும்மம் லக்ஷணத்தோடு கூடினதாக விருக்கிறபடியாலும் அதனாலே பிரும்மம் விசாரிக்கப்பட வேண்டியது என்று சித்தாந்திகள் ஸமாதானம் சொன்னார்கள்.

சங்கரரின் கருத்துப்படி-ஸ்வரூப ஐக்யம்தான் பலன். அதை அடைய பிரும்மாத்மைக்ய ஞானத்தை அடைய எல்லா வேதங்களும் ஆரம்பிக்கின்றன ब्रह्मैव भवति என்றார். அவித்யா நிறைந்த ஸம்சாரஜீவன் தனக்குள்ள தர்மங்களை ஆத்மாவிடத்தில் ஆரோபிக்கிறான். நான் ஊமை, நான் செவிடன் நான் அந்தன் என்கிற சரீர (இந்திரியங்களின்) தர்மங்களை ஆத்மாவினிடம் ஆரோபிக்கிறான். இதே மாதிரி காமம் ஆசை சந்தேஹம் இத்யாதி அந்தக் கரண தர்மங்களை ஆத்மாவினிடம் ஆரோபிக்கிறான். இதற்கு அத்யாஸம் என்று பெயர் 'நான்' என்கிற விருத்தியுள்ளதான மனத்தை தன் மனத்தின் எல்லாப் பிரவர்த்திகளுக்கும் சாக்ஷியாகவிருக்கும் பிரத்யக ஆத்மாவை அதற்கு நேர்மாறாக அந்தக் கரணாதிகளிலும் ஆரோபம் செய்து வியவஹரிக்கிறான். இந்த மாதிரியான அத்யாஸம் அனாதியாகவும் பொய்யான வஸ்துக்களின் ரூபத்தை யுடையதாயும் (அதாவது அநிர்வசனீயமாக) விருந்து கொண்டு தானே கர்த்தா தானே போக்தா என்கிற அத்யாஸத்தை அடைகிறான். இந்த அத்யாஸத்தை நிவர்த்தி செய்வது பிரும்ம ஜீவ ஐக்ய-ஸ்வரூப ஐக்ய ஞானமாகும். இது வாக்ய ஜன்யஞானமாக விருக்கிறது. ஆகையால் சரீரமே சாரீரகம் எனப்படும். शारीरकमीमांसायाः शरीरमेव शरीरकम्-तत्र निवासी शारीरको जीवात्मा तस्यत्वं पदाभिधेयस्य तत्पदाऽभिधेयपरमात्मरूपता मीमांसाया तस्याभित्यर्थः அதாவது அந்த சரீரத்திலுள்ள ஜீவாத்மா சாரீரகன எனப்படுவன். த்வம் பத வாச்யன் அவனுக்கு தத் பதவாச்யமான பரமாத்ம ரூபத்தன்மையைப்பற்றிய விசாரம் யாதொன்டோ அதுவே சாரீரக மீமாம்ஸை எனப்படும்.

(ஸ்ரீமத் ராமானுஜரின் அர்த்தப்படி சாரீரகன் என்பவன் பரமாத்மா ஜீவனுகிற சித்தையும் அசேதனத்தையும் தனது சரீரமாகக்கொண்டு தான் ஆத்மாவாக விளங்குகிறுன் என்பார்கள் வைஷ்ணவர்கள்.)

இந்த ஜீவன் ஜாக்ரத ஸ்வப்ன கற்பித ஆகிற நிலைகளில் எல்லா அனுபவங்களையும் அனுபவித்து ஸதா இருந்துகொண்டிருப்பவனுக அறிவு ஒன்றையே லக்ஷணமாகக்கொண்டு பிரும்ம ஐக்யம் கொண்டவனுக ஸத்தை (அவனது இருப்பை)யும் அனுபவங்களையும் பிரும்ம ஐக்யத்தினுல் அனுபவிக்கிறுன். அது பாரமார்த்திக தசையில் வேறுஒன்றையும் கேட்பதில்லை பார்ப்பதில்லை இதுதான் ஆத்மானுபவம் ஸ்வராஜ்ய ஸித்தி என்பார்கள்.

இவ்விதமான பரிபூர்ண ஆத்ம நிலையில் பிரும்மத்தைத் தவிர வேறு ஒன்றுமில்லை. तत्वमसि (சாமவேதம் நீ பிரும்மமாக விருக்கிறுய்); अहं ब्रह्मास्मि (நான் பிரும்மமாக விருக்கிறேன்). (யஜுர் வேதம்) अयमात्मा ब्रह्म இந்த ஆத்மா பிரும்மம் தான் (அதர்வ வேதம்) प्रज्ञानं ब्रह्म (ருக் வேதம் இந்த ஆத்மா அறிவு வடிவமே பிரும்மம் பிரும்மம் அறிவே ஸ்வரூபம் ஆகிய நான்கு வேதங்களின் மஹாவாக்யங்கள் இவைகளை மனனம் செய்து கொண்டு வருவதால் ஆத்மஸித்தி கிடைக்கும். இதில் விதி விசேஷமாக ஒன்றுமில்லை. ஆகவே செய்யப்படவென கர்மம் என்பதில்லை, இது பற்றி கடோபநிஷத்தில் சொல்லுயிருப்பது नायमात्माप्रवचनेनलभ्योनमेधया न ब्रह्मनाश्रुतेन (2.23) ஆகவே பிரும்ம வித்யை பிரும்ம ஞானம் ஆத்ம ஞானம் எனப்படுவது பிரும்ம ஜீவ ஐக்ய ஞானமாகும், பிரும்ம ஸாக்ஷத்தாரம் ஏற்படும் வரை அப்யாஸம் ஆவிருத்தி செய்யப்பட வேண்டும். எந்த வஸ்து எவ்விதமிருக்குமே அந்த வஸ்து விஷயமாக அவ்விதமே உண்டாகும். ஞானம் வஸ்து தந்திரம் எனப்படும். வஸ்து வேறு மாதிரியிருக்க சாஸ்திரத்தைக் கொண்டு அதை வேறு மாதிரி எண்ணுவது புருஷ தந்திரம். பிரும்ம வித்யை ஸம்பது பாஸனுதியாக ஆகமாட்டாது. இக்காரணத்தினுல் பிரும்ம வித்யை புருஷவியாபாரத்தை எதிர் பார்த்து உண்டாக்கக் கூடியதன்று, பிரத்யக்ஷம் முதலான பிரமாணங்

களுக்கு விஷயமான வஸ்துவின் ஞானம் போல வஸ்து தந்திர மாகும். ஆனால் இப்யேற்பட்ட சுத்த பிரத்யகாத்மரூபமாக விருக்கின்ற பிரும்மத்துக்கோ அந்த சுத்த பிரும்ம பரமான ஞானத்திற்க்கோ எந்த யுக்தியினாலும் கர்மஸம் பந்தம் சொல்ல ஒருக்காலும் முடியாது. அதாவது பிரும்மத்தை அறிந்த பிறகு வேதனத்திற்கு பின்பு விதிக்கிரியை செய்யப்பட வேண்டியது ஒன்றுமில்லை. ஏனெனில். அந்த பிரும்மானது விதிக்கிரி யைக்கு கர்மமாக ஆனதைக்காட்டிலும் வேறு அதனால் உபாஸனா ரூபமான மானஸக்கிரியைக்கு பிரும்மம் கர்மம் ஆகாது என்ற நிஷேதம் (மறுப்பு) இருக்கிறது. எது அநிர்வ சனீயமோ வாக்கினால் சொல்லப்படக் கூடியதோ என்றதால் பிரும்மம் வாகாதிகளுக்கு விஷயமாகாது அதையே பிரும்மம் என்று நீ அறிந்து கொள்— எதை இது என ஒன்றுக்கு விஷயமாக்கி உபாஸிக்கின்றனரோ அது பிரும்மகாகாது என்பதால் நிர் விசேஷ பிரும்மம் உபாஸனத்தின் பலனாகாது. பிரும்ம ஞானத்தினால் அவித்யா நிவிருத்தியா? அவித்யா நிவிருத்யினால் நித்ய முக்தாத்மாவுக்கு ஸ்வரூபபிராப்தி ஏற்படு கிறதால் மோக்ஷம் எனப்படும், மோக்ஷம் என்பது புதிதாக அடையப்படும் நிலையாகவோ உண்டு பண்ணக் கூடியதாக வோ இல்லை. ஆகவே மோக்ஷம் பிராபயம் என (கமனம் என) (அடையத் தகுந்ததாக) ஒரு பொழுதும் ஆகாது. பிரும்மம் எங்கும் வியாப்தம். மணியின் அழுக்கு நீங்கினால் ஸ்வரூப பிராப்தி எவ்விதமோ அதுபோல புதிதாக ஒரு குணத்தை உண்டாக்குவதோ ஒரு ஸ்தானத்தை அடைவதோ என்பது மோக்ஷத்தினால் ஏற்படாது. ஸ்வரூபசித்தியே மோக்ஷம். தோஷத்தை விலக்குதல் என்பதும் இல்லை. ஏனெனின் பிரும்மம் நித்ய சுத்த (ஒருவித தோஷமற்ற) பிரும்ம ஸ்வரூபம் அழுக்கைக் கண்ணாடியில் துடைப்பது போல என்றாலும் அவ் விதமே சொல்லுவதற்கில்லை, ஏனெனில் கிரியை ஒன்றும் கூடி யதாக ஆத்மா இல்லாமலிருப்பதே அதற்குக்காரணம். சுத்த ஆத்மா விகார்யன் (மாறுதலை அடையக்கூடியவன்) அல்லன் என்று சுருதி சொல்கிறது. கிரியையினால் ஆத்மா சம்ஸ்கரிக்கப் படுவதில்லை. ஆகவே ஞானம் ஒன்றைத்தவிர கிரியையானது லவலேசத்திற்கும் இங்கு பொருத்தமாகாது, ஞானமே ஒழிய

கிரியையன்று. ஆகவே விதிவாக்யதிற்கு விஷயமாகாது அவ் விதமானுல் உபாஸனேக்கு யாது பிரயோசனம்? விதிக்கு லிங்-லோட்-தவ்ய பிரத்யங்கள் காணப்படுவதைக்கொண்டு ஞான மும் விதிக்கு விதிக்கப்படுகிறதாகவே ஆகிறதே என்று ஏற்ப டாதோ வெனில் ஆம் இவை பயனற்றே விடுகின்றன. ஞான விஷயத்தில் புருஷனே பிரவர்த்திக்கும்படி செய்யும் இந்த விதிகள சக்தியற்றனவாக வாகின்றன விதி விஷயமான உபாஸனேக்கு அங்கமாக பிரும்மத்தை சாஸ்திரம் சொல்கிறதே என்ருல் அது வும் பொருந்தாது. உபநிடதம் ஒன்றினுலே அறியத்தக்கபிரும்மம் எவ்வித திருஸ்ய சம்பந்தமில்லாதது திருக்கேயாகும் ஏனெனில் ஆத்மா சாக்ஷியாக விருப்பதால் அதாவது ஜீவ பிரும்ம ஐக்யம் [illegible] என்பத்தால் கூறப்படினும் உபஹிதரூபம் ஜீவன் என்றும் சுத்த ஸ்வரூபம் அதற்கு சாக்ஷியென்றும் வேறு பிரமா ணங்களினுல் அறியப்படுகிறது என்பதாலே ஆத்மா கூடஸ்த னுகதான் மாறுதலே அடையாதபடி நித்ய சுத்த புத்த முக்த சச்சிதா நந்தமயனுக ஸ்வரூபமுள்ளது. ஆகவே புருஷனுக்கு மேலானது ஒன்றுமில்லே. அதுதான் முடிவு அதுதான் பரம புருஷார்த்த ரூபமாகயுள்ளது என்று சுருதி கூறுகிறது. அப் பேற்பட்ட ஸித்தவஸ்து வானது கிரியையாக ஆகாதன்ருே ?

ஜீவன் முக்தி நிலே என்பது ஜீவிப்பவராயினும் சரீர சம்பந்தம் இல்லாமலிருத்தலே அதாவது அசரீரத்வமானது பிரும்ம ஞானிக்கு யேற்படுகிறது. ஆத்மாவை அவலம்பனம் செய்யச் செய்ய தேக புத்தி அழிந்து தேகத்தைவிட் ஆத்மா வேருனவன் தேகத்தில் ஆத்மா சப்தம் அதன் மூலமாக யேற் படும் அறிவும் மித்யாபூதமாகுக. பாம்பின் சரீரம் கரையான் புற்றில் காணப்படுகிறது. பாம்பின் அபிமானத்தை இழந்ததைக் குறிக்கும். அதுபோல ஜீவன் முக்தனிடம் சரீர அபிமானத்தை இழப்பதைக் குறிக்கும். பிராணன் உள்ளவராயினும் பிராணன் இல்லாதவர் போல ஆகிருர். ஸ்திதப்ரக்ஞனேப் போலவிருக்கும் அவனுக்கு ஸஂசாரித்வம் யேற்படுவதில்லே. மனனம் நிதித் யாஸனம் இரண்டும் பிரும்ம சாக்ஷாத்காரத்திற்கு வேண்டி சாஸ்திரத்தில் கூறப்பட்டிருப்பதே அதன் காரணம். அபரோக்ஷ மாக அனுபவிக்கப்படும் பிரும்மம் உபாஸனுதிகளில் அங்க

மாகச் சேர்க்கையை அடைவிக்கப்படுமானல் அது விதி விசேஷமாகலாம். ஆனல் பிரும்மமோ உபாஸனதிகளில் அங்கமாகச் சேர்க்கப்படக் கூடியதாகவில்லை. பிரும்ம ஞானத்தில் விதி சம்பவிக்காதாகையால் விதிக்கு விஷயமான உபாஸனை விஷயமாகக் கூறியபடி சாஸ்திர பிரமாணமாகச் சொல்ல முடியாது. ஆகவே பிரும்மம் கர்மசேஷமாகவில்லாமலெ ஸ்வதந்திரமாகவே சாஸ்திர பிரமாணத்தினுல் அறியப்படுகிறது. ஆகவே பிரும்மாத்மைக்யம் ஸாக்ஷாத்காரம் யேற்படும் வரை சாஸ்திரிய சகலவிதிகளும் எல்லாப் பிரமாணங்களும் உண்டு என்பது நிச்சயம்.

அபரோக்ஷ ஸாக்ஷாத் காரத்தினுலே பரம புருஷார்த்த பிராப்தி யேற்படுகிறது. இந்த பிரபஞ்சம் பிரும்மத்தை ஆஸ்ரயித்திருக்கிறது. அந்த அதிஷ்டான மாத்திரத்தின் ஞானம் மட்டுமே பரம புருஷார்த்த ஹேதுவென்று இரண்டாவது சூத்ரம் உபதேசிக்கின்றது. சாஸ்திரம் ஒன்றினுலே அறியத் தக்க பிரும்மம் ஜீவ பிரும்மாத்ம ஐக்யானுபவம் செய்தல் வேண்டும். பிரும்மம் ஒன்றே முக்கிய தாத் பரிய விஷயமானதென்று கண்டு கொள்ள வேண்டும் என இந்த நான்காவது சூத்திரத்தால் உபதேசிக்கப்பட்டது (ஸமன்வயாதி கரணத்தினுல்)

ஆகவே சங்கரர் ஜீவனுக்குப் புனித தன்மையை அளித்தார். பிரும்மமே ஜகத் காரணம்·என்ருர். சுத்த பிரும்மம் காரணமாகும் ? மாயாவிசிஷ்ட பிரும்மம்தான் காரணமாகும் கிரியா சக்தி ஞானசக்தி இவை இரண்டும் பிரதானத்திற்கும் உண்டு. ஆகவே சாங்கியன் பிரதானம் காரணம் என்கிருன். ஆனல் அது அசேதனம். சேதனமான பிரும்மமே ஜகத் காரணமாகும். கிரியா சக்தி ஞான சக்தி யிரண்டும் மாயையினுல் ஏற்படலாம். பிரும்மத்திற்கு ஸம்பவிக்கலாம் ஜகத் காரண வஸ்துவினிடத்தில் ஆத்ம சப்தபிரயோகம் செய்திருப்பதால் பிரதானம் ஆகாது. ஆத்மாவுக்கும் (ஜீவனுக்கும்) ஜகத் காரணவஸ்துவுக்கும் தாதாத்மியம் (பிரிதில்லாத சம்பந்தம்) கூறியிருப்பதனுல் இது பிரதானத்திற்கு (ஜகத் காரணத்வம்)

ஓட்டாது. வேதாந்த வாக்யத்தினுலேயே எவ்வித் காரிய ஸம்பந்தமுமின்றி பிரும்மத்திற்கு முடிவு கூறப்பட்டது. ஸர்வக்ஞன் ஸர்வகதம் ஜகத்தின் உற்பத்தி ஸ்திதி நாசம் இவற்றிற்குக் காரணம் சொல்லப்பட்டது. ஆனுல் சாங்கியன் ஸித்த வஸ்துவானது வேறு (அனுமானுதி) பிரமாணக்களுக்கும் விஷயமாகக்கூடியது. வேதாந்த வாக்யங்களால் அனுமான பிரமாணத்தால் காரியத்தைக் கொண்டு காரணத்தை அறிவது பிரதானம் புருஷன் இவர்களின் சேர்க்கை (எப்பொழுதும் அனுமானத்தினுல் அறியக்கூடிய நித்யானுமேயம்) என்கிருர்கள். காணுதர்களோ பரார்த்தமான ரூபங்களான இந்த வேதாந்த வாக்யங்களைக்கொண்டு ஈஸ்வரனை நிமித்த காரணமாகவும் பரமாணுக்களை ஸமவாயி காரணமாகவும் அனுமான பிரமாணத்தினுல் ஸாதிக்கின்றனர். யுக்தியை முக்யமாகக் கொண்டு பௌத்தர்கள் சொல்வதாவது 1. போலி வாக்யம் 2. போலி யுக்தி இவற்றை ஆதாரமாகக்கொண்டு இந்த விஷயத்தில் பூர்வபக்ஷம் சொல்ல முன்வருகின்றனர். இவைகளை வேதாந்த வாக்யங்களைக்கொண்டு பூர்வபக்ஷமாக்கி மறுக்கப் படுகின்றன.

சாங்கியன் சொல்வது எதை எவர்கள் எந்த வாக்யங்கள் பிரும்மத்துக்கு ஆதாரமாகச் சொல்லப்படுகின்றதோ அவர்கள் பிரதானத்தையும் குறிக்கலாம் என வாதிக்கின்றனர் ஸத்வரஜஸ்தமஸ் குணங்கள் கொண்ட பிரதானத்திற்கு ஸர்வக்ஞத்திற்கும் ஸர்வசக்தி த்வத்திற்கும் ஏற்படலாம். ஆனுல் இவைகளை அனுமான பிரமாணத்தினுல் மட்டும் ஸாதிக்கக் கூடியதே ஒழிய அதை ஸாதிக்க சுருதி கிடையாது. மேலும் அசேதனத்திற்கு சங்கல்பம் (நினைக்கிற சக்தி) ஈக்ஷ சப்தம் பிரயோகம் ஆகாது பிரதானம் ஸாவயவம் அதற்கு மாறுதல் பற்றி மண் முதலியவற்றிற்குப்போல அதற்குக் காரணத்வம் சொல்வது பொருத்தமாகலாம்: பிரும்மமோ அவயவமற்றது. அஸங்கம்; ஜகத் காரணத்வம் எப்படி சுத்த பிரும்மத்துக்கு ஏற்படலாம்? என்கிற சங்கை எழலாம் பிரும்மம் அத்வித்யம் ஏகம் இதன் அர்த்தம் ஸஜாதீய விஜாதீய ஸ்வகதபேதமில்லாத ஒரு வஸ்து ஸத்தாகவே ஸத் சப்த வாச்யப் பொருளாக

விருந்தது. அது நினைத்தது பலவாக ஆவேன் என்று அதே தேஜஸ்ஸை ஸ்ருஷ்டி செய்தது. இதம் என்கிற சொல் நாம ரூபங்களுடன் ஸ்தூலமாக்கப்பட்ட பிரபஞ்சம் ஸ்ருஷ்டிக்கு முன்பு ஸத்தாக விருந்தது. அந்த புருஷன் ஆலோசித்தான் ஈக்ஷதே:—என்பதால் சேதன வியாபாரம் அதாவது எது ஸர்வக்ஞமோ ஸர்வவித்தோ அது காரயமான இந்த சூத்ராத்மாவும் அன்னம் (போக்ய வஸ்துவையும்) உண்டாகிறது என்று. இம் மாதிரியான காரணப்பொருளை (ஸர்வக்ஞ-ஈஸ்வர) சொல்லு கின்ற வாக்யங்கள் இந்த விடத்தில் நினைக்கத்தக்கவை. இது பிரதானத்திற்கு ஒட்டாது. சாக்ஷித்வம் சாக்ஷிசைதன்யத்தைப் பிரதானமாகக்கொள்ளாத அந்தக்கரண விருத்தி ஞா (க்ஞா) என்ற தாதுவினால் சொல்லப்படுவதில்லை. அசேதனமான பிரதானத்திற்கு சாக்ஷித்வம் கிடையாது. ஆகவே பிரதானம் ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது. பிரும்மம் நித்யமாகவே ஞான கிரியையுள்ளது என்றால் க்ஞானகிரியைக்கு கர்த்தாவாக பிரும்மம் ஆகாது. तदैक्षत என்பதால் (அது பார்த்தது) பிரும்மத்தினிடமே பொருந்தும் அசேதன பிரதானத்திற்கு பொருந்தாது. ஆகவே 'அந்த தேஜஸ் பார்த்தது'—அந்த ஜலங்கள் பார்த்தன என்கிற உதாரணங்களில் அசேதனங்களான தேஜஸ் ஜலங்கள் இவைகளுக்கு சேதனனிடதிற்போலவே உபசாரமுறையில் ஈக்ஷணம் (ஸங்கல்பம்) சொல்லியிருப்பதைக்காண்கிறோம். ஆகவே ஸத்வஸ்துவின் ஈக்ஷணமும் ஔபாதிகமே முக்கியமல்ல கௌணமே என்கிற ஆட்சேபம்வர ஆறுவது சூத்ரமான கௌண: சேத் ந ஆத்ம சப்தாத் என்று சூத்ரம் சொல்லப்பட்டது. अनेन जीवेनात्मना என்கிறபடி ஈக்ஷண கர்த்தாவாகச் சொல்லிய ஸத் பத வாக்கிய வஸ்துவுககு ஜீவனை ஸ்வரூபமாக आत्मना ஆத்ம சப்தாத் என்கிற பிரயோகத்தினாலே तत्त्वमसि-सदेवसोम्येदमग्र आसीत्-தொடங்கி தத்வமஸி ஸ்வேதகேதோ என்று முடித்திருப்பதால் ஸத் பதத்திற்கு கூறப்பட்ட பொருளை வாங்கிக்கொண்டு त्वमसि நீ இருக்கிறாய் என்றதால் (அதாவது ஸத்பதவாச்யமான பொருளாக த்வம்பத வாசயனான நீ இருக்கிறாய் என்று சொல்லியபடியால் त्वं பதம் ஜீவனுக்கு ஸத் பதத்தின் பொருளை ஸ்வரூபமாகச் சொல்லியிருப்பதாகக் கொண்டு स आत्मा என்ற விடத்தில் स: என்பதால் ஸத்பதத்தின்

பொருளைக்கூறி அந்தப் பொருள்தான் ஆத்மா என ஸத் பதப் பொருளில் ஆத்ம சப்த பிரயோகம் செய்திருப்பதைக்கொண்டும் ஸத்பதப்பொருளிற்கூறிய ஈக்ஷணம் கௌணமாக ஒரு பொழுதும் ஆகாது என்பதாம். சேதனஞன ஸ்வேத கேதுவுக்கு ஸத் (தத்) பத வாச்யமான அதை ஆத்மாவாகவும் உபதேசம் செய்கிறது, ஆக்வே ஸத் பதத்திஞல் சொல்லப்படுவது சேதனமான பொருள் என்றே யேற்படுகிறபடியால் ஜலம் தேஜஸ் இவை இரண்டும் திருக்ரூபமான சேதனமாக ஆகாது. நாம ரூபங்களில் சிருஷ்டி சொல்லிய விடத்தில் அவை சிருஷ்டிக்கப்பட்ட பொருளாகக் கூறப்பட்டிருக்கின்றன. ததைக்ஷத தத்தேஜோ (तत्तेजोऽसृजत): ஜலம் தேஜஸ் இவைகளுககு அதிஷ்டாதாவான ஸத் பதப்பொருளையே ஒட்டி ஈக்ஷணம் சொல்லப்படுவதால் அதிஷ்டான மூலம் முக்கியமானதாக வேதாஞகிறது. ஆகவே ஸத்தில் ஆத்மபத மிருப்பதால் அதன் ஈக்ஷணம் கௌண மில்லை என்பது சரிதான். ஆகவே ஆத்ம சப்தத்தைக்கொண்டு ஈக்ஷணம் கௌணமாகாது என்பதற்கு சூத்ரகாரர் तन्निष्ठस्य मोक्षोपदेशात् என்கிருர் சங்கரர் பதில் கூறுகிருர்.

அந்த தந்நிஷ்டஸ்ய ஸத்பத பொருளில் நிஷ்டையை யடைந்த அபேத ஞானத்தை யடைந்தவர்க்கு மோக்ஷோபதேசத்தை முக்தி கிடைப்பதாகச்சொல்லப்படுகிறபடியால் ஆகவே ஸத் பதத்தின் பொருள் அசேதன்மாஞல் (பிரதானமாஞல்) சேதனஞன ஜீவனும் அசேதனமான பிரதானத்தை ஆதமாவாக உபதேசித்த சாஸ்திரம் மாருன முறையில் விபரீதமாக உபதேசம் செய்வதாக ஆகிவிடும். அதஞல் சாஸ்திரம் அபிரமாண்யமாகிவிடும். ஆகவே பிரதானம் ஜகத் காரணமாகாது ஏனெனில் அசேதனமான பிரதானம் ஸத் சப்தத்தால் சொல்லப்பட்டதாக ஆகாது. இது போல பல காரணங்களும் சொல்லப்படுகின்றன. அதே மாதிரி எல்லா வஸ்துக்களும் சுஷுப்தி திசையில் ஜீவனுக்கு சேதனனிடத்தில் லயம் சொல்லப் பட்டுமிருக்கிறபடியாலும் எல்லா சேதனர்களுக்கும் எதினிடத்தில் அப்யயம் (லயம்) யேற்படுகின்றதோ அந்த சேதனமானது ஸத் சப்தவாச்யமான ஜகத் காரணவஸ்துவாகுமே ஒழிய

அசேதனமான பிரதானம் ஆகாது. அதே மாதிரி க்தி ஸாமான் யாத் என்கிற சூத்ரத்தில் சேதனனே ஜாத்காரணம் என்று கூறிய சேதன ஜகத் காரணத்வ அறிவானது, ஸாமான்யாத் ஒரே மாதிரியாயிருத்தலே அதன் காரணமாகும் என்பது ஒரு காரணமாகும். இதனுல் சுருதியே சேதன வாசகமான சப்த மிருப்பதைக்கொண்டு பிரதானம் ஜகத்காரணமில்லை யென்று ஊர்ஜிதம் செய்யப்படுகிறது. சிருதத்வாச்ச என்பதால் ஸர்வக்ஞுன ஈஸ்வரனே ஜகத்காரணம்—சொல்வதாலே—स कारणं करणाधिपाधियो न चास्य कश्चिज्जनिता न चाधिपः— அவரே ஜகத்காரணமாகவும் கரணுதிபனுன ஜீவனுக்கும் அதி பதியாகவுமிருக்கிருர். இவரை உண்டு பண்ணுகின்றவர் ஒரு வருமில்லை இவருக்கு மேலும் யாருமில்லை என்பதால் ஸர்வக்ஞ ஞன பிரும்மமே ஜகத்காரணம் பிரதானமோ பரமாணுவோ மற்ற புத்த ஜைன அபிப்ராயங்களோ பக்ஷங்களோ சரியில்லை என்று ஸாதிந்து ஜகத் காரணத்வம் பிரும்மத்துக்கு ஸ்தாபிதம் செய்யப்பட்டதாகும்.

அவ்விதமானுல்—பிரும்மம் உபாஸ்யம் (உபாஸிக்கப்பட வேண்டுமா) என்பதற்கு ஏனெனில் உபாஸனையைச் சொல்லும் சில சுருதி வாக்யங்களில் உபாஸ்யம் பிரும்மமன்று என்று சந்தேகம் வருவதால் ஆனந்த மயாதிகரணத்தில் ஆனந்தவல்லி யானது ஜீவபரம் (ஜீவனைச்சொல்லுகிறது) என்கிற சங்கையை மறுத்துப் பிரஹ்மபரம் (பிரும்மத்தையே முக்கியமாக உபதேசிக் கிறது) என ஆனந்த மயாதிகரணத்தில் ஸ்தாபிக்கப்படுகிறது.

இந்த ஆனந்தமய கரணத்தில் ஆனந்தமயனுக்கு ஆதார மான சுத்த பிரும்மத்தைத்தான் பிரதிபாதனம் செய்கிறது ஏனெனில் असन्नेव स भवति असद्ब्रह्मेति என்கிற வாக்கியத்திஞல் பிரும்ம சப்தாப்யாஸம் இருப்பதே அதன் காரணமாகும் என்பது சித்தாந்தம், ஈக்ஷன் சப்தத்திஞல் முந்தின அதிகரணத்தில் சேதன தர்மத்தை ஒட்டி ஸ்தாபிதம் செய்ததுபோல இங்கேயும் புச்ச (வால்) சப்தத்தின் முக்யத்வத்தை ஒட்டி பிரும்மத்தை ஆனந்தமய அவயவமாகத்தான் கொள்ளவேண்டும் என்பது பூர்வபக்ஷம் ஆகவே பூர்வபக்ஷப்படி ஆனந்த மயனுகிற ஜீவ

உபாஸனத்திஞல் சாஸ்திர பிரமாண்யத்தையொட்டி மோக்ஷ ஸித்தியானது பலன். இங்குள்ள புச்ச சப்தம் லக்ஷணேயிஞல் ஆதாரம் என்பதைமட்டும்தான் குறிக்கும், ஆகையால் இந்த வாக்யமானது मोदो दक्षिणः पक्षः । प्रमोदउत्तरः पक्षः । आनन्द आत्मा । ब्रह्मपुच्छंप्रतिष्ठा। தைத். அ. ஸ்வதந்திரமாக ஆனந்த மயனுக்கும் ஆதாரமான சுத்த பிரும்மத்தைத்தான் குறிக்கும். ஆகவே அர்த்தம் செய்துகொள்ளவேண்டியது ஆனந்தமய ஜீவனுக்கும் ஆதாரமாகக்கூடிய சுத்த பிரும்மத்தின் ஞானத்தால் யேற்படும் மோக்ஷஸித்தியானது பலஞகும் என்பதாம். ஆனந்த மயன் ஜீவனில்லை என்று ஸ்தாபிதமாகும். பரமாத்மாதான் रसोवै सः रस ह्येवायं लब्ध्वाऽऽनन्दीभवति ஆனந்தமயன் ரஸரூபமுள்ளவர். இந்த ஜீவன் ரஸரூபமான அவரை யடைந்தன்ருே ஆனந்த முள்ளவஞகிருன் என்பதால் भेदव्यपदेशात् ஜீவன் ஆனந்தமயன் இவர்களே வேருகச்சொல்லுகிறபடியாலே அக்காரணம்பற்றியே அடைகின்றவனே அடையப்படும் பொருளாக ஆக மாட்டான் அல்லவோ? அங்கனமாயின் आत्मान्वेष्टव्यः-விசாரித்து அறியத் தக்கவன் आत्मलाभान्नपरं विद्यते ஆத்ம லாபத்தைக்காட்டிலும் பெரிது ஒன்றுமில்லை என்பதால் அடைகிறவனும் அடையப் படும் பொருளும் ஒன்ருகவாக முடியாதன்ருே! ஆத்ம ஸ்வ பாவத்தை உடையவஞகவே ஆத்மா விருப்பினும் தத்வஞான மில்லாத காரணத்திஞல் தேஹாதியாக விருக்கும் ஆத்மா வுக்கும் பரமாத்மா அறியவேண்டியவஞகவும் மனனம் செய்யப் படவேண்டியவஞகவிருக்கிறபடியால் அவிக்ஞாதஞை ஆத்மா விக்ஞாத வ்யஞக ஆகிருன் என்பதால் ஜீவ பிரும்ம ஜீவன் ஆனந்தமயன். இவர்களே வேருக சாஸ்திரம் உபதேசத்திருப்பதே காரணமாக அவித்யையிஞல் யேற்பட்ட பிரதிபிம்பத்திஞல் கற்பிக்கப்பட்டதும் கர்த்தாவும் போக்தாவும் சாரீரகஞகவுமான விக்ஞாஞத்மாவான ஜீவனேவிட பரமாத்மா வேருகிறதாகும் முதலியவை உபாதிகாரணமாக குறைந்த ஆகாசமுள்ளதாயும் உபாதி நீங்கினதும் மற்றதுமான பிரசித்த ஆகாசம் வேருக விருக்கின்றதோ அதே போல விக்ஞாஞத்மாவுக்கும் பரமாத்மா வுக்கும் உள்ள பேதத்தை அனுஸரித்து नेतरोऽनुपपत्तेः என்றும் भेदव्यपदेशाच्च என்றும் கூறப்பட்டது என்று கொள்ளவேண்டும், ஆகவே ஜீவன் பிரும்ம ஞானம் பெற்றதும் அபயமான பிரும்

மத்தை அடைந்தவனுகிருன். பேதத்திறைல் பயம் உண்டாகிறது (ஸம்சாரத்தில்); பிரும்மத்தினிடத்தில் ஸாக்ஷாத்கார ரூபமான ஞானத்தை பிரும்மவித்து அடையும்போது பேதம் அழியும்போது அவன் சம்சார பயத்தினின்றும் விலகுகிருன். ஆகவே சாஸ்திரம் ஆனந்தமயனைப் பரமாத்மா வாகக்கொண்டாறல் தான் சரியாகும். ஆனந்தமயனை பிரதானமாகவோ ஜீவனுகவோ கொள்வது பொருந்தாது. ஆகவே பரமாத்மாதான் ஆனந்த மயன் என்பது ஸித்தம்.

வேதம்தான் காரணம் என்கிற காரணத்திறைல் பிரும்மத்தி னிடம் ஸர்வக்ஞத்வம் உண்டா இல்லையா என்பதை ஸாதிக்க வந்தது அல்ல. வேதம் அபௌருஷேயம் பிரும்மம் காரணமானுல் பௌருஷேயத்வம் ஒரு (புருஷனுல் உண்டுபண்ணப்பட்டது) என்று வரும் வேதபிரமாணம் தோஷமுள்ளதாகிவிடும். வேதத் தின் நோக்கு இஷ்ட பிராப்தி அநிஷ்ட நிவிருத்தி இவை பிராணி களுக்கு ஸ்வயமாகத்தெரியாது, வேதத்திறைல் போதிக்கப்பட வேண்டும். ஆகவே தன் அர்த்தத்தில் ஸ்வயமாகவே பிரா மாண்யத்தை அடையக்கூடியது என்பது ஸ்வதஃ பிரமாணம் என்பதால் தான் அபௌருஷேயம், உற்பத்தியற்றதே, பிரும்மத் தின் மூச்சுக்காற்று. புருஷனுடைய பிரயத்னத்திற்கு மூச்சுக் காற்று உட்பட்டதில்லை. அதுபோல நான்கு வேதங்களும் பிரும் மத்தின் மூச்சுக்காற்று நிசிவஸிதம் பிரும்மபிரயத்னத்திற்கு உட் பட்டதில்லை என்பது சித்தம். பிரும்மம் மறைந்துகிடந்த வேதங் களை பிரகாசம் செய்தது. ஆகவே வேதங்கள் அநாதி. ஆனுல் ஸ்வரகிரமங்களில் ஒரு வ்யவஸ்தை யேற்பட வேண்டும். இது பரம புருஷனுல் உண்டு பண்ணப்பட்டது இதனுல் ஸ்வத; பிராம்மாண்யம் கொடுக்கப்படவில்லை. முன்கல்பத்தில் எவ்வி தம் உச்சரிப்பு த்வனி, கிரமம் இருந்ததோ அதேபடி பகவான் உச்சரித்து போதித்துப் பிரகாசப்படுத்துகிருர். ஒவ்வொரு கல்பத்திலும் ஆகவே வேதங்கள் ஸ்வதஃ பிராமாண்யம் பிரயத்ன மின்றி அநாயாஸமாக பிரும்ம புருஷனுடைய மூலம் வேதங்கள் பிரகாசமடைந்தன. இந்த விஷயங்கள் மூன்ருவதான அதி கரணத்தில் முதல் வர்ணகத்தால் தீர்மானிக்கப்பட்டன.

இரண்டாவது வர்ணக பிரகாரம் சாஸ்த்ரயோனித்வாதி அதிகரணத்தில் வேதபிரமாணகத்வாதி பிரும்மம் வேதப் பிரமாணம் ஒன்ருல் அறியத்தக்கது மற்ற பிரமாணங்களுக்கு விஷயமாகாது என்றும் வேதாந்தம் ஒன்றிஞலே அர்த்தம் பிரும்மம் வேதாந்தைக வேத்யமானது, (அறியத்தக்கது).

## நிர்குண ஸகுண பிரும்மம்

பிரம்மம் ஸகுணம் நிர்குணம் என்றும் இரண்டு உண்டு. அநேக குணங்களோடு கூடிய பிரும்மம் அசுத்த பிரும்மம். உபாஸனேக்கு உரியதாக சில உபாஸனேகளுக்கு ஞானத்திற்கு உதவி செய்வதைத்தவிர வேறு தனியாகப் பலன் இல்லாதபடியால் அந்த உபாஸஞவிதி பரமான வாக்யங்களும் ஞான காண்டமாகிற ஒரே பிரகரணத்திலே இருக்கவேண்டியது என்பது அவசியம். அதற்காக விதி இல்லாமல் உபாஸஞவிதி பரத்வம் ஸம்பவிக்கும் (ஏற்படும்) என்பது அசாஸ்திரியம் (சாஸ்திரத்திஞல் ஒப்புக்கொள்ளப்படாதது) ஆஞல் சுத்த பிரும்மமோ உபாஸஞவிதிக்கு சேஷமாகாது. சுத்த பிரும்மம் தான் வேத வாக்யங்களுடைய பரமதாத்பர்யத்திற்கு விஷயம். அது உபாஸஞவிதி சேஷமாக ஆகாது. சுத்த பிரும்மத்திற்கு ஞானம் யேற்படுவதற்கு முன் அவஸ்தையில் உபாஸஞ விதி சேஷத்வம் சொல்ல முடியாது. உபாஸனம் த்வைத ஞானத்தை ஆஸ்ரயித்து அல்லவோ சம்பவிக்கும். ஞானமடைந்தது அக்னியிஞல் பொசுக்கப்பட்டதற்கு சமம். த்வைத ஞானமோ அத்வீதீய பிரும்ம ஞானத்திஞல் நாசமாகும். மீண்டும் த்வைத ஞானம் ஸம்பவிக்காது. ஆஸ்ரயமானத்வைத ஞானமும் அழிந்த பிறகு நிராஸ்ரயமாக விருக்க முடியாது உபாஸனேக்கு. ஆகவே உபாஸஞவிதி சேஷத்வம் பிரம்மத்திற்கு இல்லே, உபாஸஞ பரத்வமும் இல்லே, விதிசேஷ பிரும்ம பரத்வமுமில்லே, அர்த்தத்தைப் போதிப்பதே அதஞல்தான் ஸ்வத: பிராமாண்யம் யேற்படும் "தத் த்வ மஸி ஸ்வேதகேதோ" என்று அவரது பிதா ஒன்பது தடவைகள் உத்தாலகர் ஸ்வேதகேதுவுக்கு (புத்ரனுக்கு) சாந்தோக்யஷடகத்தில் உபதேசம் செய்தார். "ஸதேவ ஸெளம்ய இதமக்ரே ஆஸீத்"-உபதேசம் ஆரம்பித்து முடிவிலும் "ஐததாத்ம்யமிதம் ஸர்வம்"—என்பதால் பிரும்மத்தையே உப

தேசித்து முடிவுபெறச்செய்கிறது. அதில் ஏகமேவ அத்வீதீயம் பிரும்ம என்கிற சுருதியினுல் ஸஜாதீய விஜாதீய ஸ்வகதபேத ரஹிதமான பிரும்மத்தை உபக்ரம உபஸம்ஹாரம் அத்வீதீய மான் பிரும்மத்தைச் சொல்லி யிருப்பதாலே ஐகரூப்யம் (ஒரே ரூபம்) பிரும்மலிங்கமாக (அடையாளமாக) கிடைக்கிறபடியால் பிரம்மத்தினிடம்தான் பரம தாத்யர்யம் இருக்கிறது என்று தெரிகிறது. இதனுல் நிர்விசேஷ பிரும்மத்திற்கு உபகாரம் செய்கிறது. அதே பிரகாரம் உத்தாலகர் திருஷ்டாந்த மூல மாக ஸ்வேதகேதுவுக்குச் சொன்னுர், ஒரு ஆலம்பழத்தில் அதி சூக்ஷ்மமாக விருக்கும் ஒரு விதைக்குள் பல விதைகளைப்பார்க்க முடியாமல்போக அது எப்படி பிரத்யக்ஷமாகத் தெரியவில்லையோ அதுபோல இந்த ஜகத்தின் மூலகாரணமான ஸத் ரூபமான பிரும்மம் பிரத்யக்ஷத்தாலே அறியமுடியாது சிரத்தையை முன்னிட்டு சாஸ்திரத்தின் ஆதேச (உபதேச) வார்த்தையை நம்பு. வேதாந்த வேத்யமான பிரும்மம் எனப்படும் அபூர்வதை என்ற மூன்ருவது தாத்பர்ய லிங்கம் பிரகாசப்படுத்தப்பட்டு அதனுல் ஸர்வ வேதாந்தங்களுக்கும் பிரும்மத்தினிடத்தில் தான் தாத்பர்யம் அது நிர்விசேஷ பிரும்மம் எனத்தெரியவரு கிறது. பிராரப்த நாசம் யேற்பட்டதும் விதேஹமுக்தி பலனுகச் சொல்லப்படுவதால் நான்காவது தாத்பர்ய லிங்கமும் ஸர்வ வேத வாக்யங்களும் பிரும்மத்தினிடம்தான் தாத்பர்யமுள்ளன என்று சொல்லப்படுகிறது.

அப்பேற்பட்ட பிரும்மம் ஜீவ பாவத்தை அடைகிறபோது ஐந்தாவது தாத்பர்ய லிங்கம் வெளியாக்கப்படுகிறது. "அநேந ஜீவேந ஆத்மநா அனுபிரவிஸ்ய நாமரூப வ்யாகரவாணி" வாக்யத்தினுல் அர்த்தவாதம் வெளியாக்கப்படுகிறது. இந்த ஜகத்தில் பிரும்மம் ஜீவபாவத்தோடு அனுபிரவேசம் செய்து நாமரூபங்களை ஸ்ருஷ்டித்தது என்பதால் நாமரூப ஸ்ருஷ்டிகர்த் ருத்வம் அனுப்ரவேசம் ஆகிய இவை பிரும்மத்தின் தர்மம் என்கிறது. அதுமாதிரி கார்யம் காரணத்தைக்காட்டிலும் வேறுபட்டதல்ல என்பதை யதோ ஏகேந ம்ருத்பிண்டேந ஸர்வம் ம்ருண்மயம் விகாரம் விக்ஞாதம் ஸ்யாத் என்கிற வாக்யத்தி னுல் காட்டப்பட்டது. காரணமான மண் விக்ஞானத்தினுல்

மண்ணின் காரியமாகிற குடம் என்று அறியப்படுகிறது. அது போல பிரும்ம விக்ஞானத்தினுல் சகல பிரபஞ்ச விக்ஞானமும் யுக்திமூலம் நிச்சயமாக யேற்படும் என்று கூறப்படுகிறது. இந்த உபபத்தி ஆருவது தாத்பர்ய லிங்கத்தாலும் ஸர்வ வேதாந்தங்களும் பிரும்மத்தைத்தான் போதிக்கின்றன என்பது ஸித்தம்.

ஆக இந்தமாதிரி ஷட்வித தாத்பர்யங்களால் ஸர்வ வேதாந்தங்களுக்கும் கர்மாவோ அல்லது உபாஸனமோ அல்லது அசுத்த (ஸகுண) பிரும்மமோ இவைகள் தாத்பர்ய (அர்த்த) மாகா. சுத்தமாயும் ஹேயோபாதேய ரஹிதமாயும், பலவத்தாயும் மநநாந்தரா கம்யமாயும் பரிகிஷ்டதமாயுமிருக்கும் பரபிரும்மம் தான் அர்த்தம் என்று கொள்ளவேண்டும்.

ஆகவே சங்கரரின் அபிப்ராயப்படி அக்ஞானத்தை நிவர்த்தி செய்துகொள்ள அந்த அக்ஞானத்திற்கு விரோதியான ஞானத்தை வேதாந்த விசார மூலமாக அடையவேண்டும். இதைத்தவிர வேறுவித கிரியைகள் ஒன்றும் செய்யவேண்டியதாக மோக்ஷ சாஸ்திரத்தில் இல்லே. ஞானம் வஸ்து தந்திரம் தான், புருஷ தந்திரமில்லே, விதி தந்திரமுமில்லே.

மேலும் பரமார்த்தத்தசையில் ஸ்தூல ஸூக்ஷ்ம காரணம் என்று மூன்று விதமான தேகத்தின் ஸம்பந்தமில்லாதது. ஆகவே விஷய ஸம்பந்தம் கொண்ட சுகதுக்கம் என்பவை இருக்காது. விஷய ஸம்பந்தமான சுக துக்கங்களுக்கு வேறுபட்ட விலக்ஷணமான ஸ்தானமே பாவமே மோக்ஷம் என்பதின் அர்த்தம். ஞானத்தின் காரியம் ஸ்வரூப பூதமான மோக்ஷம் ஸ்வயமாக ப்பிரகாசிக்கிறது. இல்லாத வஸ்துவை உண்டு பண்ணவோ இருக்கும் வஸ்துவை இல்லாமல் செய்வதற்கோ இருக்கிற வஸ்துவை மாற்றி வேருகக்காட்டுவதற்கோ ஞானத்திற்கு சக்தியில்லே. ஞானத்தை மறைத்துக்கொண்டிருப்பது அக்ஞானம். வாக்ய ஜன்ய ஞானத்தினுல் அக்ஞானம் நிவிருத்தியடைகிறது. ஸ்வரூபபூதமான மோக்ஷம் தானுகவே பிரகாசிக்கிறது. மோக்ஷபலன் நித்யம், கர்ம பலமன்று என்று சுருதிகள் கூறுகின்றன. விசார ஜன்யமான ஞானத்திற்கு அவித்யா

நிவ்ருத்தியே பலன். கர்ம பலமில்லை. சம்சாரம் அநாதி. இதில் காரண நியாயத்தினுல் காரிய நாசம் யேற்படும் என்கிற நியாயத்தினுல் மித்யா ஞான நாசத்தினுல் தோஷநாசமும், தோஷ நாசத்தால் தர்மாதர்ம நாசமும், தர்மாதர்ம நாசத்தினுல் தேஹ நாசமும், தேஹ நாசத்தால் துக்கநாசமும் கிரமமாக யேற்படுவதாலும் துக்கநாசமே மோக்ஷம் என்பது கௌதமர் அக்ஷபாதர் சொல்லியிருக்கிருர்கள். तद्धैतत्पश्यन्, त्वंहि नः पिता, योस्माकः अविद्ययापरं पारंतारयसि, श्रुतंह्येवमे भगवद्दृशेभ्यः तरतिशोकं आत्मविदिति तस्मैमृदितकषायायतमसः पारंदर्शयति—என்பதால் மோக்ஷத்திற்குப் பிரதிபந்தகம் அவித்யா அக்ஞான நிவிருத்தி செய்வதில்தான். விசாரஜன்யமான ஞானத்தின் ஸாமர்த்தியம் என்பது ஸ்பஷ்டம். இதில் துக்க ஜன்ம பிரவிருத்தி தோஷ மித்யா ஞானநாம் துக்கம் ஜன்மா தர்மாதர்ம பிரவிருத்திதோஷம் மித்யாஞானம் இவைகளுக்குள் பின்பின் உள்ளனவற்றிற்கு நாசம்யேற்படுவதால் முன்முன் உள்ளனவற்றிற்கு நாசம் ஏற்படுகிறபடியால் அபவர்க்கமாகிற துக்க நிவிருத்தி ரூபமான மோக்ஷம் யேற்படுகிறது, ஆகவே கௌதமர் அக்ஷபாதர் ஆத்மைகத்வ ஞானத்தினுல்தான் மோக்ஷபிராப்தி (நிச்ரேயஸாதிகமம்) என்கிருர்கள். இது எப்படி யெனில் மித்யா ஞானம் அழிவதின்மூலம் தோஷ நிவிருத்தியைச்செய்து அதன்மூலம் தர்மாதர்ம நிவிருத்தியைச் செய்து அதன்மூலம் ஜன்ம நிவிருத்தியைச்செய்து அதன்மூலம் துக்க நிவிருத்தி ரூபமான மோக்ஷம் கிரமமாகக்கொடுக்கப்படுகிறது. ஆகவே மோக்ஷம் கர்ம பலமன்று அதனுல் விதி ஜன்யம் மோக்ஷம் என்று எப்படி சொல்லக்கூடும்? (ஞானத்தினுல் துக்க நிவிருத்தியடையக்கூடுமானுல் ஆனந்தமும் அடைய முடியும் என்பது சித்தாந்தம். அநிஷ்ட நிவிருத்தியினுல் இஷ்ட பிராப்தி கிட்டும்.) உத்கிருஷ்டமான பிரும்மத்தை அபேதமாகத் தியானம் செய்வது ஆனந்தியம் என்று குணம் சொல்லப்படுகிறது. ஸம்பத்ரூபம் என்றும் பெயர். ஜீவனும் சேதனம் பிரும்மமும் சேதனம் சேதனத்வம் என்ற குணம் இரண்டிற்கும் ஸமானம், அந்த அபேக்ஷித்து ஜீவனுகிற அல்ப ஆலம்பனத்தை மறந்து அதில் அதை காட்டிலும் உத்கிருஷ்டமான பிரும்மத்தினுடன் ஸ்வரூப ஐக்யம் अहंब्रह्मास्मि என்கிற அபேதத்தை தியானம் செய்வதுதான் பிரும்மஞானம் என்பது,

இவ்விதமின்றி அத்யாஸரூபம் என்றும் சொல்லக்கூடும். ஆதித்யனிடம் பிரும்ம திருஷ்டி வைத்து உபாஸிப்பது போல ஜீவனிடம் பிரும்ம திருஷ்டி செய்வதுதான் பிரும்ம ஞானம் ஜீவனை ப்ரதீகமாக வைத்து ஜீவஸ்வரூபத்திற்கு திரஸ்காரமில்லாமலே பிராதான்யத்தோடு பிரும்மதிருஷ்டி செய்யக்கூடலாம். வித்யா உபாஸனத்தினுல் ஜீவனுக்கு விசித்திரசக்தி ஏற்படக்கூடும். அதை அனுஸரித்து ஜீவனை பிரும்மம் என்று தியானம் பண்ணலாம். ஆகவே ஞானம் எப்போது விதி ஜன்யமோ அப்போது பலனும் (மோக்ஷமும்) விதி ஜன்யந்தானே. ஜீவனிடம் ஒரு ஸம்ஸ்காரம் யேற்படவேண்டும். ஜீவனைப்பிரும்மம் என்று அறிவதே அவனுக்கு ஸம்ஸ்காரம். அஹம் பிரும்மாஸ்மி என்ற ஞானம் கர்மாங்க ஸம்ஸ்காரம் என்றே சொல்லலாம். இவ்விதமாக மீமாம்ஸகர்கள் பிரும்ம ஞானம் ஸம்பத்ரூபம் அத்யாஸரூபம் கர்மாங்கஸம் ஸ்காரரூபம் என்று சொல்லி வேதாந்தங்கள் விதிபரம் தான் என்கிறுர்கள்.

இதில் பல கருத்துக்கள் உள்ளன. அசுத்த ஜீவனுக்கும் பிரும்மத்திற்கும் அபேதத்தை வேதாந்தம் சொல்லவரவில்லை. சோதித "த்வம்" பதார்த்தம் என்று சுத்த ஜீவனுக்கும் பிரும்மத்திற்கும்தான் அபேதத்தை சொல்லுகின்றன. த்வம் பதத்தின் வாச்யமான அசுத்த ஜீவனுக்கும் தத் பதார்த்தமான அசுத்த பிரும்மத்திற்கும் உள்ள பேதம்தான் பிரத்யக்ஷாதிகளானவற்கு கோசரமாகும். அசுத்த பிரும்மம் அசுத்த ஜீவன் இவர்களின் அபேதத்தை வேதாந்தங்கள் சொல்லவரவில்லையாதலால் மீமாம்ஸகர்களின் பக்ஷம் ஒப்புக்கொள்ளமுடியாதபடி இருக்கிறது. ஆகவே சரியானபடி சொல்வதாவது ஒரே விபக்தியிலிருக்கும் ஜீவ பிரும்ம பதங்களுக்கு ஸமான விபக்திபதகளுக்கு ஸமான அர்த்தம் ஒன்றே சொலலப்படவேண்டும் ஜீவ பிரும்ம ஐக்யமாகிற ஞானத்திறல் भिद्यते हृदयग्रन्थिः-छिद्यन्ते सर्वसंशयाः-என்கிறபடி ராகாதி தோஷங்களுக்கும் அந்தக்கரணத்திற்கு முள்ள தாதாத்மிய அத்யாஸம் என்கிற அஹங்கார கிரந்தியோ ஸர்வமும் நசித்துவிடும். அக்ஞான நாசமே பலன் அதேமாதிரி ஸ்வபிரகாசமான பிரும்மம் வேதபிரமாணம்தான்.

அதாவது பிர்த்யகாத்மாவின் தத்வத்தை வேதம் போதிக்கிறதே தவிர இதுதான் பிரும்மம் என்று சொல்வதற்கில்லை. அவித்யையினுல் அறியத்தகும் தன்மை (வேத்யத்வம்) வேதித்ருத்வம் (அறிகிறவன் தன்மை) வேதநா (அறிவு) என்கிற பேதம் அக்ஞானத்தால் கல்பிக்கப்படுகிறது. மாயையில் சம்பந்தப்பட்ட சித் அறியத்தகுந்த வஸ்து வென்றும் அந்தக்கரணத்தில் ஸம்பந்தப்பட்ட சித் அறிகிறவன் என்றும் விருத்தியில் சம்பந்தப்பட்ட சித்து அறிவு என்றும் இவ்விதம் அறியத்தகுந்தது. அறிகிறவன் அறிவு என்கிற பேதங்கள் நிர்குணமான சுத்த சைதன்யனிடத்திலே அக்ஞானத்தில் கல்பிக்கப்பட்டவை. அதைப்பார்த்து ஸர்வார்த்தபிரகாசனு சக்தியுள்ள வேதமானது வ்ருத்தி அந்தக்கரணம் மாயை எனறு மூன்று உபாதிகளையும் இல்லையென்று தள்ளி சைதன்யத்தை ஒன்றுபடுத்தி சுத்த ஸ்வரூபமான அதன் தன்மையை போதிக்கிறது, சாஸ்திரயோநித்வாத் என்கிற அதிகரணத்தில் சித்தம்—மூன்று விதமான உபாதிகளையும் நிவிருத்தி செய்கிற விஷயத்தில்தான் வேதங்களுக்கு தாத்பர்யம் ஸாக்ஷாத்தாக பிரும்மத்தைச் சொல்வதில் தாத்பர்யமில்லை.

ஜீவன் முக்தி நிலையும் ஒப்புக்கொள்ளபடுகிறது. ஸ்திதப்ரக்ஞஸ்ய காபாஷா என்ற ஸ்மிருதியும் அசரீர பாவமாகிய மோக்ஷம் ஜீவ தசையிலே பிரும்ம ஸாக்ஷாத்காரத்தினுல் யேற்படலாம் என்கிற பிரமாணமுமிருக்கிறது.

ஸர்வ வ்யவஹாரமும் பிரும்ம ஞானம் யேற்படுவதற்கு முன்புதான்; பிரும்ம ஞானம் யேற்பட்டால் ஸர்வ வ்யவஹாரமும் இல்லாமல் போய்விடுகிறது. ஆகவே பிரும்மம் எப்படி விதி சேஷமாக ஆகும்?

இவ்விதம் வேதாந்தங்கள் அஹேயாறுபாதேய நித்ய ஸித்த பிரும்மபரம் என்றது ஸித்தம் என்கிறுர்கள் அத்வைதிகள் (இத்துடன் சங்கரரின் பிரும்ம வித்யையில் சதுஸ்சூத்ரி முற்றும்).

இவ்விதமாக பகவத்பாதாள் ஆத்மாவிற்கு நித்யத்தையும் புனிதத்தையும் வைராக்யம் ஒன்றினுலே அறியத்தக்கதாயும் வேதாந்தங்களின் சுருதிகளையே பிரமாணமாக பிரும்மத்தை

அறிந்தவனுக்கே ஜகத்மித்யையாக விருக்கும். நம்மைப்போல ஸாதாரணசம்சாரிகளுக்கு ஜகத்நித்யமாகவுமிருக்கிறது ஜீவன் முக்தனுக்கும் அவ்விதம் தோன்றுது. மித்யைதான் சதாசிவ பிரும்மேந்திராள், ரமண மஹரிஷி தற்காலத்திய ஜீவன் முக்தர் களுக்குச்சிறந்த உதாரணங்களாகும். ஆத்மாவை எல்லாப் பூதங்களிடத்தும் எல்லாப்பூதங்களை ஆத்மாவினிடத்தும் காண் கின்ற ஆத்மயாஜியே (ஆத்ம ஞானமுள்ளவனே) ஸ்வராஜ் யத்தை (ஸ்வஸ்ரூபாவஸ்தான ரூபமான முக்தியை) அடை கிருன் என்று ஸர்வாத்ம த்வதர்சனத்தைப்புகழ்கின்ற மனுவி னுலும் கபிலரின் ஸர்வாத்ம தர்சனத்தை ஒப்புகிருரில்லை. அவர் ஆத்ம பேதம் கூறியிருப்பதே காரணம். இதிலிருந்து ஆத்ம ஞானிக்கு ஞானநிலையில் ஆத்மைகத்வம் ஸாக்ஷாத்காரமுள்ள வனுக்கு மோஹமில்லை சோகமில்லை. இதனுல் கபிலரின் ஸ்வதந்திரமான பிரகிருதியே ஜகத்காரணம் என்பதைத்தள்ளி இது வேத விருத்தம் என்றும், வேதத்தை அனுஸரித்த மனு வசனமே பிராமாண்யம் என்பதும் சித்திக்கின்றது. ஆயினும் ஸாங்கியன் பிருகிருதிக்குமேலான புருஷன அஸங்கன் நிர் குணன் விசுத்த தத்வம் என்று கூறுகிருன். ஸாங்கியனின் ஆட்சேபமாகிற பிரும்மம் இந்த ஜகத்துககு நிமித்த காரண மாகவும் உபாதான காரணமும் ஆகாது என்பது நவிலக்ஷணத் வாதி கரணத்தில் போக்கப்பட்டது. ஸந்தேகம் காரியகாரண வஸ்துக்கள் ஒரே லக்ஷணம் அமைந்தனவாக (ஸமமாகவிருக்க) வேண்டும். மண் காரணம் குடம் காரியம் இவறறிற்கு ஸலக்ஷணத்வம் ஸமத்துவம் காணப்படினும் தேள் மயிர் நகம் இவற்றிற்கு மாறுன லக்ஷணம் (அசேதனமான சாணம், கம்ப ளம் முதலியவைகளிலிருந்தும் சேதன காரியமான தேள் உண் டாவதும் ஜீவ சரீரத்தில் மயிர் நகம் போன்ற அசேதனம் உண் டாவதும்) இதனுல் காரண வஸ்துவுடன் காரிய வைஷம்யம் யேற்படுவதால் தர்க்க ரீதியாக ஆட்சேபம் சுருதியை மறுத்துக் கூறுவது சித்தாந்தத்திற்கு பாதகமாகாது என்பது சிததாந்தம்.

ஆனல் ஜகத் அசேதனமாகும். பிரும்மத்துக்கு மாறுபட்ட லக்ஷணமுள்ளதாயிருப்பதுபற்றி இந்த ஜகததாளது பிரும்மத் தைக்கொண்டதன்று. இந்த ஆட்சேபத்திற்கு சுருதியின்

ஆதாரத்திஞலே எல்லா ஜகத்தும் அசேனமன்று சேதனமே. உபாதானகாரணத்தின் ரூபமானது காரியத்திலே "தொடர்ந்து காணப்படுவதால் கல் கட்டை இவைகளில் சைதன்யம் தெளி வாகக்காணப்படாததால் இதைக் காரணமாகக்கொண்டு சேத னத்வம் இல்லை" எனச்சொல்லமுடியாது. "ஜலங்கள் பேசின மண் பேசிற்று இவைகளில் மஹாபூதங்களைப்பற்றிய சேதனத்வ சுருதியும் காணப்படுகின்றது. அந்த அந்த அபிமானி தேவதை பேசிற்று எனக்கொண்டு கேவலம் அசேதனமாகிற பூதங்களும் இந்திரியங்களுமன்று, இதனுல் சேதனத்வம் இவைகளுக்கு உண்டாகிறது. இதே மாதிரி நாம் யூகித்துக்கொள்ளவேண்டும் எல்லாத் தேவதைகளும் பிராணனிடம் சண்டை செய்த பிறகு உணர்ந்து கொண்டன, பிராணனிடத்தில் ஸ்ரேஷ்டத்தன்மை யிருப்பதாக இதனுல் இந்த ஜகத்தானது பிரும்மத்துக்கு மாறு பட்ட லக்ஷணமுள்ளதாக ஆகிறது. ஆகவே பிரும்மம் ஜகத் காரணமாகாது என்கிற ஆட்சேபத்தைப்போக்க சூத்ரக்காரர் திருச்யதேது என்கிற பதிலினுல் சேதனத்திடமிருந்து அசேத னம் உண்டாவதும் அசேதனத்திடமிருந்து சேதனன் உண்டா வதும் காணப்படுவதால் ஆட்சேபம் தூஷிக்கப்படுகிறது. சேதனமான பிரும்மமே நிமிதத காரணமாகவும் உபாதான காரணமாகவும் இருக்கிறது என்கிற சாஸ்திர வசனம் உறுதிப் படுகிறது. இந்த விஷயம் ஆகமத்தாலே அறியப்படுவது. இதனுல் கருதி சேதனுசேதன விபாகத்தை (பிரிவை)க்கூறு கிறது. சைதன்யத்திற்கு பிரகாசம், அப்பிரகாசம் இருக்கின்றன ஆனுல் ஸாங்கியனுககு இத்தகைய பிரிவு பொருநதாது மூல காரணப்பொருளுக்கு விக்ஞானமாகவும் அவிக்ஞானமாயும் (சேதனமாயும் அசேதனமாயும) சப்தமே சில பிரிவுக்கு அசேத னத்தன்மையை உபதேசிப்பதால் சேதனத்தைவிட (பிரும்மத்தை விட) ஜகத் விலக்ஷணமாக விருக்கிறது. இந்த மாறுப்பட்ட லக்ஷணத்தை மறுககப்பட்டிருப்பதால் சேதனனுக்கு அசேதனத் வம் எவ்விதம் பொருந்தாதோ அதுபோல அசேதனத்திற்கு சேதனத்தன்மையையும் பொருத்தமற்றது என்பதால் இந்த விலக்ஷணத்வத்தை (மாறுபட்ட லக்ஷணத்தை) சுருதி மறுத் திருப்பதால் சுருதியை ஒட்டியே சேதனனை காரணமாகக் கிரஹிக்க வேண்டியது.

இதனுல் ப்ரதிஷேத மாதிரத்வாத் என்கிற சூத்திரத்தின் ஒரு பாகத்தினுல் ஸத்காரிய வாதம் என்பதற்குக்காரணமான ஸத்ரூப பிரும்மத்தைவிட வேருகக் காரியமான பிரபஞ்ம் முற் காலத்திலோ இக்காலத்திலோ எக்காலத்திலுமே இல்லை (கிடையாது) என்பது மட்டும் பொருளாக ஏற்படுகிறபடியால் பிரும் மத்தை பாரமார்த்திக தசையில் ஒப்புக்கொண்டு ஸத்காரிய வாதிகளாகிரோம் பிரதிஷேதம் மாத்திரமே எக்காலத்திலும் காரணத்தைவிடத் தனியாகக் காரணமானது இல்லை என்று மறுப்புமட்டுமே அதன் பொருளாகவிருப்பது என்கிற காரணத் தினுல் காரியமானது உற்பத்திக்கு முந்தி அஸத் (இல்லாதது) என்றுதான் யேற்படும். இதனுல் தோஷமில்லை. ஆகவே காரியம் எப்போதும் காரண ஸ்வரூபத்தை விட்டு விலகி ஸ்வதந்திரமாக இருக்கவிலலையன்ரே. இதற்கு கருதியே சொல்கிறது எவன் ஆதமாவை விடவேருக எல்லாவற்றையும் அறிவானே அவனே அந்த எல்லாப்பொருளும ஸ்வரூப ஞானத்தைவிட்டு விலகினவனுகச்செய்யும் எனபதால் அது காரணமாகும். காரியத்துக்கு காரண ஸ்வரூபத்துடன இருப்பு (ஸத்தாக) உத்பத்திக்கும் முந்தியும் பொதுவாக விருக்கிறது இது பூர்வபக்ஷம சூத்ரமாகும). இந்த தர்சனம் அஸமஞ்ஜஸம் என்று அபீதெளதத்வத் பிரஸங்காத் அஸமஞ்ஜஸம் இம்மாதிரி காரணமான சுதத பிரும்மத்துக்கு அசுததி வருவதால் இது பொருத்தமாகாது என்று நிரூபிககப்படுகிறது. உதாரணமாக பிரளயத்தில் பிருதிவியின் காரியமான நான்குவித பிராணி களின் சமுஹம பூமியைத்தனது தர்மத்துடன் கூடியனதாகச் செய்வதில்லை. காரியம் காரணம இவை இரண்டுகளும் ஸம மான தர்மம் இருக்குமாகில் பிரளயம் யேறபடாது அதாவது காரியமானது காரணத்தில் தனது தர்மத்துடனே இருக்கு மானுல்) இதனுல் காரணத்துக்குக் காரிய ஸ்வரூபத்வம் இல்லை என்று ஆரம்பண சப்தாதிபய: என்கிற விடத்திலும் சொல்லப் பட்டது. ஆத்மாவே இவையாகுமாகும்; அம்ருதமான பிரும் மமே முன்னும் பின்னுமாகும். இதனுல் பிரும்மத்துக்கு முக்காலத் திலும் காரியத்துக்கு காரணனனியத்வமானது வேறுபட்டது என்பது உபதேசிககப்படுகிறது. காரியத்தில் அதன் தர்மமா கிற அவித்யையினுல் ஆரோபிதமான அத்யா ஸமிருப்பதினுல்

அவற்றுடன் காரணமானது ஸம்பந்தத்தை அடைவதில்லை என்பது பிராயத்திலும் ஒப்புக்கொள்ளவேண்டியதே. அதாவது பரபிரும்மம் ஸம்சார மாயையுடன் சம்பந்தப்படவில்லை ஸ்வப் னத்தில் மாயையினால் உண்டாக்கப்பட்ட ஸ்வப்னம் அதனால் மாயையுடன் சம்பந்தப்படுவதில்லை எவ்விதமோ அதுபோல ஜாக்கிரத ஸுஷீப்தி இவைகளிருக்கும்போது ஸ்வப்னத்துடன் ஆத்மாவிற்கு தொடர்பு இல்லாததிருப்பதே அதன் காரண மாகும். ரதம் வீடு இவைகளை ஸ்வப்னத்தில் மாயை உண்டாக் கிறது. அதுபோல மூன்று அவஸ்தைகளிலும் சாக்ஷியும் தொடர்ந்து வருபவனுன ஒரு ஆத்மா ஒன்றுக்கொன்று மாறு பாடு இயல்புள்ள மூன்று அவஸ்தைகளுடன் கூட சம்பந்தப் படுகிறதில்லை. அதுபோல கயிற்றுகக்கு பாம்பின் ஸ்வரூபம் யிரும்மத்துக்கு இதுமாயை மட்டுமே யன்றோ! அதனால் சுருதி சொல்லிற்று. "அனாதி மாயையினால் தூக்கத்தையடைந்த ஜீவன் எப்போது ப்ரபோதத்தை அடைகின்றானோ (மாயாநித் ரையை விடுகிறானோ) அப்போது அஜம் (ஜனனமற்றதும்) அநித் ரம் (தூக்கமற்றதும்) அஸ்வப்னம் (ஸ்வப்னமற்ற) அத்வை தாத்ம பாவத்தை அனுபவிக்கிறான் என்பதாம். ஆகவே பிரளயத்தில் ஸ்வரூப ஐக்யம் அடைந்து உற்பத்தியில் பிரிவு (விபாகம்) யேற்படுவதால் தோஷமாகாது. சுஷீப்தியிலும் ஸமாதியிலும் ஸ்வபாவ ஐக்யம் இருக்கிறது. மித்யாபூதமான அக்ஞானம விலக்கப்படாமையால் முன்போலே திரும்பவும் விழிபட ஏற்படும் போது விபாகம் ஏற்படுவது எவ்விதமோ அவ்விதமே யேற்படலாம். சுருதியும் அவ்விதமே சொல்கிறது எல்லாப்பிரஜைகளும் ஸத் (ஆத்மாவில்) லயத்தையடைந்து ஸத்தாவில் லயத்தை யடைகிறோம் என்பதை எண்ணுவ தில்லை. ஜாக்கிரதத்தில் புலியாகவோ கொசுவாகவோ எவ்வித மிருந்தனவோ அப்படியே அவ்விதமே ஸுஷீப்தியினின்று எழுந்தபோது ஆகின்றன. வ்யவஹாரிகதசையில் பேதவ்ய வஹாரமானது அக்ஞானத்தினால் யேற்படுகிறது. முக்தியை யடைந்த முக்தர்களுக்கு திரும்பவும் உற்பத்தியானது வரத் தெரியும் என்பது மறுக்கப்பட்டதாகவாகிறது. ஸம்யக்ஞானத் தினால் மித்யாபூதமான அக்ஞானம் போக்கப்பட்டதாக ஆகிறது என்பதே அதன் காரணமாகும். ஆகவே வேதத்தை ஒட்டியே

தர்க்கவாதத்தாலும் சேதனமான பிரும்மம் ஜகத்துக்கு நிமித்த காரணமும் உபாதான காரணமும் ஆகும் என்று உறுதி செய்யப்பட்டதாகும்.

இதே மாதிரி வேத விருத்தமான பரமாண்வாதி காரண வாதங்களும் மனுவ்யாஸர் தேவலர் முதலிய சிஷ்யர்களால் ஒரு சில அம்சத்திலும்கூட பிரமாணமாக ஒப்புக்கொள்ளப்படாத அணுவாதி காரண வாதங்களும் தள்ளப்படவேண்டும் அவை முறண்பட்டனவாக விருப்பதால் உபதேசிக்கப்படுகிறது. இங்கு மற்றைய அபிப்ராயங்கள், அதாவது வைசேஷிகர் நையாயிகன் ஜைனர் புத்தரர்களின் கருத்துக்களையும் நிர்ஸனம் செய்ததாகும். சாங்கியனின் சில அம்சங்களைத்தவிர மறுக்கப்பட்டிருக்கும் போது மனு முதலிய சிஷ்யர்களால் எந்த அம்சத்திலும் வெறுக்கப்பட்ட பரமாணுவாதி காரணவாதத்தைப் பற்றிச்சொல்லவும் வேண்டுமா? பரமாணுவாதி மதத்தால் வேதாந்த ஸமன் வயத்துக்குப்பாதம் இல்லை. விவர்த்த காரணவாதத்திலோ காரியத்தைவிடக் காரணம் குறைந்த பரிமாணமுள்ளதாகவிருக்க வேண்டுமென்கிற நியமம் (கட்டாயம்) இலலை என்பது சித்தாந்தம். (இவர்கள் வேதத்தை) ஒப்புக்கொள்ளாதவர்கள். சிலர் பரமாணுக்கள் என்னும் சிலர் ஞாணுத்மகம் என்றும் சிலர் அர்த்தாத்மகம், சிலர் க்ஷணிகம் என்றும், சிலர் நித்யம் என்றும், பரமாணுவின் ஸ்வரூபத்தில் அபிப்ராய பேதங்களைக்கொண்டவர்கள். சங்கரரின் கருத்துப்படி ஜகத்காரணவஸ்து தர்க்கத்துக்கு விஷயமன்று என்பதும், தர்க்கம் நிலைபெருது என்பதும் (ஏனெனின இன்னெரு பிரபல தர்க்கவாதிதோன்றி அழிக்கக் கூடுமாகையாலும) வேறுவிதமாக அனுமானம் செய்த போதிலும்கூட நிலைபெருத தன்மையினின்றிலும் தர்க்கம் நீங்காது என்றும், ஆகம விரோதம் வரும், என்கிற காரணங்களால் நிரஸனம் செய்யப்பட்டு மனுமுதலியவர்களின் கருத்துக்கள் ஒப்புக்கொள்ளப்படுகின்றன)

அவ்விதமாயினும் பிரும்ம காரியமான ஜகத்தானது பிரும்மத்தைவிட வேறுபட்டது என்ற விஷயத்தில் போக்யமான பிரபஞ்சத்துக்குப் போக்தாவாக விருத்தல் இதனல் யேற்படும்

பேத வியவஹாரத்துக்குப்போக்தாவென்றும் போக்கியமென்றும் விவஹாரத்துக்கு அபாவமானது வரத்தெரியும் என்றுலோ இங்கும் உலகில் காணப்படுவதுபோல இருக்கலாம். உலகில் சமுத்திரத்துடன் ஒன்றுயிருத்தலே (அபேதத்தை)த் தர்க்க பலத்திஞல் சொல்லக்கூடுமாயினும் தனியாக அலை குமிழி என்றும் பேதவியவஹாரம் எவ்விதம் காணப்படுகின்றதோ, அதுபோல போக்கியமான பிரும்மத்துடன் அபேதம் வந்தபோதிலும் தனித்தும் போக்தாவென்றும் போக்கியமென்றும் பேதவியவஹாரம் இருக்கலாம் ஒரு தடையுமில்லை என்பது போக்த்ராபத்தே அவிபாகஸ் சேத் ஸ்யாத் லோகவத் என்பதில் சொல்லப்பட்டது. (இதெல்லாம் வியவஹாரிக தசையில்). இதையும் ஔபநிஷத் சித்தாந்த பக்ஷத்திலும் பொருத்தமாகத்தானிருக்கிறது. பரஸ்பரபேதமும் ஒன்றையொன்று ஒட்டினதாயுள்ள வியவஹாரமும் காணப்படுகிறது. ஜீவ பிரும்மங்களுக்கு ஸ்வரூப ஐக்யம் ஒப்பப்படினும் உபாதி நிமித்தமான பேதத்தை அங்கீகரித்தலால் ஜகத்ரூபத்தில் அனுப்ரவேசமடைந்த பிரும்ம ரூபியான தர்மியைக்கொண்டு அபேதம் பொருத்தமாகிறது. அஸ்தி பாதி பிர்யம் என்பவை பிரும்மத்தின் ஸ்வரூபமாகும். ரூபம் நாமம் ஜகத்தின் ஸ்வரூபமாகும். ஜகத்ரூபத்தில் அனுப்ரவேசத்தை அடைந்த பிரும்ம ரூபமான தர்மியைக்கொண்டு அபேதம் சரியாகிறது. ஆகவே புத்தி முதலிய உபாதி மூலம் ஜீவபிரும்மங்களுக்குப்பேதம் இருப்பினும் இந்த உபாதிகள் ஸத்தியமாக எப்போதும் இருக்கின்றனவா அதஞல் பேதமும் ஸத்தியமா என்கிற மயக்கத்தைப்போக்க ஆரம்பணுதி கரணம் விளக்கப்படுகிறது. அதாவது பிரும்ம ஞானம் யேற்படும்வரை பேதம் பின்பு அபேதம்;

சமுத்திரம் அலை இவற்றுக்குள் பேதாபேதத்திற்கு பாதம் மறுப்பு இல்லாதபடியால் அவை உண்மையேயாகும் என்பதைப் பூர்வபக்ஷமாக்கி வாசாரமபணம் விகாரோ நாமதேயம் ம்ருத்திகேத்யேவ ஸத்யம் என்று சுருதியிஞலும் யுக்தியிஞலும் பாதிக்கப்படும் இந்த பேதாபேதஙகள் வியவஹாரிகதசையில் (பிரும்ம ஞானம் யேற்படுவரை) இருப்பனவையாகும். காரியத்துக்கும் காரணத்துடன் பேதமின்மையானது ஏற்படுவதி

லிருந்து பிரும்மம் அத்வைதம் என்பது உண்மை இதுதான் ஸித்தாந்தம். (இங்கு சொல்லப்படுவது மண் காரணம் குடம் கார்யம் என்று தோற்றம் யேற்படுகிறது. அதாவது உருண்டை நிலையை அடைந்த மண்ணுக்கு காரணத்வம் ஏற்படுகிறது. மண்ணைமாத்திரம் நினைத்துப்பார்த்தால் அதற்குக்காரணத தன்மையோ கார்யத்தன்மையோ ஏதும் இல்லை. அதுபோல மாயையுடன் கூடின சைதன்யத்தையும் பிரபஞ்சத்தையும் மனத்தால் ஆலோசிப்பவர்க்கு மாயாவிசிஷ்ட பிரும்மம் காரணம் என்றும் பிரபஞ்சம் காரியம் என்றுமான தோற்றம் ஏற்படுமே ஒழிய அதிஷ்டானமானதும் சின்மாத்திரமானதுமான (சுத்த பிரும்மத்தை) அதைவிடத் தனியாகக்காரணகாரிய தோற்றம் யேற்படுவதற்கு இடமில்லை என்கிற விஷயம் ஏகே நம்ருத்பிண்டேந ஸர்வம் மிருண்மயம் விக்ஞாதம் ஸ்யாத் வாசாரம்பணம் விகாரோ நாமதேயம் ம்ருத்திகேத்யேவ ஸத்யம், ஏவம் ஸௌம்ய ஸ ஆதேசோபவத் என்கிற திருஷ்டாந்தத்தினால் உபதேசிக்கப்பட்டதாகும். மேலும் வாசாரம்பணம் என்ற விடத்தில் வாசயா ஆரப்யதே ஆலப்யதே வ்யவஹ்ரியதே என்று வ்யுத்பத்தியினால் கேவலம் வாக்கினால் மட்டும் 'இருக்கு' என்று சொல்லப்படுகிறதே ஒழிய, காரணத்தைவிட வேருகக் காரியமானது தனித்த உருவம் உள்ளதல்ல என்று பொருள் கொள்ளவேண்டும். ஆகவே வாசாரம்பணம் என்பது ஒரே பதமாகும். அதாவது வாகாலம்பனம் வாக்வ்யவஹாரமாத்ர விஷய பூதம் விகாரம் என்று யேற்பட்டதாகும்.) வாக்கினால் வ்யவஹரிக்கப்படும் விகாரம் (காரியம்) பெயர்மட்டுமேயாகும். "பிரும்மமே இவையாவும் ஆத்மாவே இவையாவுமாகும், இதனிடத்து வேறுபடுத்துவதற்குரியது ஒன்றும் உண்மையில் இல்லை என்கிற வேத வசனங்களால் ஆத்மைகத்துவத்தை விளக்கமாகக்கூறுகின்றபடியால் இவ்விதமில்லாத போனால் (அதாவது ஜீவன் ஜகத் இரண்டும் பிரும்மத்தைவிட வேருக விருந்தால்) ஒன்றின் ஞானத்தினால் ஸர்வ ஞானமும் ஸித்திக்காது. ஆகவே குடம் தட்டு (போன்ற காரியங்கள்) இவற்றிலுள்ள ஆகாசங்கள் பெரியபூத ஆகாசத்தைவிட அன்னியமாக இல்லாதது எவ்விதமோ அவ்விதமே இந்த போக்ய போக்த்ராதி பிரபஞ்ச ஸமூக

மும் பிரும்மத்தைவிட வேருகவில்லை என்பதாம். (ஏகத்வமும் நானுத்வமும் ஸத்யமே; மரம் என்பதால் ஏகத்வமும் கிளைகள் நானுத்வமும் ஸமுத்திரம் அலை நுரை என்கிற உதாரணத்திஞலும் அதுபோல மண் உருவத்தால் ஏகத்வமும் குடம் மடக்கு முதலிய உருவத்தால் நானுத்வமும் ஸித்திக்கும். பேதமாகப் பார்ப்பவனுக்கு மோக்ஷம் ஸித்திப்பதில்லை. ஏகத்வமாகப் பார்ப்பவனுக்கு மோக்ஷம் ஸித்திக்கிறது.

அதாவது ம்ருத்திகை என்பதே ஸத்யம் என்பதால் பிரகிருதிக்கு மட்டும் திருஷ்டாந்தத்தில் ஸத்தியத்வம் உறுதிபடுத்தப்படுகிறதே அதன் காரணமாகும். வாசாரம் பண சப்தத்தாலும் காரியசேர்க்கையினுலும் அநிருதத்வம் (பொய்) (மித்யை) சொல்லப்படுகின்றது, இவையாவும் இந்த ஆத்மாவின் (பிரும்மத்தின்) ஸ்வரூபமானதே அது ஸத்யமாகும் என்பதாய் பரம காரணமான ஒன்றுக்கே ஸத்தியத்வம் உறுதியடுத்தப்படுகிறது. பரமகாரணமான ஒன்றுக்கே ஸத்யத்வம் உறுதிப்படுத்தப்படுவதால் அது ஆத்மாவாகும். தத்வமஸி ஸ்வேதகேதுவே நீ *பிரும்மமாக* விருக்கிருய் என்பதால் சாரீரனுக்கு (ஜீவனுக்கு) பிரும்மபாவம் உபதேசிக்கப்படுகிறது. தத்வமஸி என்பதில் அஸி என்பதால் சாரீரனுக்கு இயற்கையிலமைந்துள்ள இந்த பிரும்மாத்மத்வம் உபதேசிக்கப்படுகிறதே ஒழிய வேறு முயற்சியினுல் (உபாஸநாதிகளால் பின்னுல் யேற்படக்கூடிய பிரும்மத்தன்மை உபதேசிக்கப்படவில்லை இது அவித்யா நிவிருத்தியினுலே வாக்ய ஜன்ய ஞானத்திஞலே யேற்படுகிறது. அவித்யா கர்மாதிகளால் (பிரும்மத்துக்கு) யேற்படும் சரீர ஆத்மபாவத்துக்கு கயிறு சர்ப்பம் முதலிய தோற்றங்களுக்குப்போல பாதகமாகி விடுகிறது. சாரீர ஆத்மத்வமுமானது பாதிக்கப்பட்டதும் அதை ஆஸ்ரயித்ததும், ஸ்வாபாவிகமும் (அவித்யாமூலம்யேற்பட்டது) மான எல்லா வியவஹாரங்களும் பாதிக்கப்பட்டதாக ஆகிறது. எந்த வியவஹாரத்துக்காக பிரும்மத்துக்கு நானுத்வம் கற்பிக்க வேண்டுமோ அதற்கு இடமில்லை யென்பதாகிறது. "இந்த அதிகாரிக்கு எந்த நிலையில் எல்லாம் ஆத்மாவாகவே ஆயிற்ரோ அந்த நிலையில் அவன் (கிரியை காரகம் முதலிய வியவஹாரங்களும் இல்லாமலிருக்கும்போது) எது கொண்டு எதைப்பார்ப்

பான் ?'' (இதனால் எல்லா வியவஹாரத்தினுடைய அபாவம் சுருதியில் சொல்லப்படுகிறது). தத்வமஸி என்பதால் பிரும்மாத்ம பாவமானது ஒரு அவஸ்தா விசேஷமன்று. தஸ்கர (திருடன்) என்கிற உதாரணத்தினால் பொய்யில் பற்றுள்ளவனுக்கு பந்தனமும் ஸத்தியமான பாரமார்த்திக தசையில் நம்பிக்கையுள்ளவனுக்கு (பந்த நிவிருத்தியாகிற) மோக்ஷம் எனப்படும் ஏகத்வம் ஒன்றையே உபதேசிப்பதால் அந்த பாரமார்த்திக தசையில் ஏகத்வமே உண்மையென்றும் நானாத்வம் மித்யை அக்ஞான விளைவாகும். இரண்டும் ஸத்யமாகில் வ்யவஹாரத்தில் பற்றுதல் உள்ள ஜந்துகூட மித்யையில் பற்றுள்ளவனாவான். ''எவன் பேதத்தை ஆத்ம விஷயத்தில் பார்க்கிறானோ—அவன் மரணத்தை அடைகிறான்—எனகிற பேத தர்சனத்தின் மறுப்பதாலே இதையே அபேத சுருதி காண்பிப்பதால் பேதாபேதமதத்தில் ஸம்யக்ஞானத்தால் மோக்ஷம் வரும் என்பது பொருந்தாது. ஸம்யக்ஞானத்தால் போக்கக் கூடிய மித்யாபூதமான ஒரு அக்ஞானத்தை ஸம்சாரகாரணமாக ஒப்பாதிருப்பதே அதன் காரணமாகும். இரண்டும் (பேதமும் அபேதமும்) ஸத்தியமானால் ஏகத்வ ஞானத்தால் நானாத்வக் ஞானம் நிவர்த்தியாகிறது என்று எப்படி சொல்லக்கூடும்?

மேலும் குரு சிஷ்யன் கணவன் மனைவி இத்யாதி பேதங்கள் வீணாகிவிடுமே என்கிற ஆட்சேபத்திற்கு பதில் சொல்லப்படுகிறது, இவ்விதம் சொல்வதாலும் தோஷம் இல்லை. எல்லா வியவஹாரங்களுக்குமே பிரும்மாத்மைகத்வ ஞானம் வரும்வரை எதுபோல ஸ்வப்ன வ்யவஹாரத்துக்கு ஜாக்ரதை (விழிப்பு) வரும் வரை போல ஸத்யத்வம் (அந்த அவஸ்தையில்) பொருத்தமாகிறது. அதனால் இக்காரியங்களில் பொய் என்கிற ஞானம் உண்டாவதில்லை. இது அவித்யா கல்பிதம் எனத் தெளிய வேண்டும். பிரும்மாத்மத்வ ஞானம் யேற்படும்வரை எல்லா வியவஹாரங்களும் ஸ்வப்னம் போல ஸத்யம். விழிப்பு யேற்பட்டதும் ரதமில்லை, அசுவமில்லை, எல்லாம் தோற்றமேதான் என்பது எவ்விதமோ, அவ்விதமே இங்கும் காணவேண்டும்.

அப்படியானால் வேதாந்த வாக்யங்கள் வ்யவஹாரிக ஸத்யமானால் அஸத்யமான வேதவாக்யத்தால் ஸத்தியமான பிரும்மாத்மத்துவத்தின் பிராப்தி கூறுவது எப்படி சரியாகும்? ரஜ்ஜீ ஸர்ப்ப உதாரணத்தில் பழுதையில் தோன்றும் பாம்பினால் கடிக்கப்பட்டவன் மரணத்தை அடைவதில்லையோ? கானலின் ஜலம் பிரயோசனமில்லை என்று சொல்லக்கூடுவதால் அதற்குப் பரிகாரமாக தோஷமில்லை என்று பதில் கூறப்படுகிறது. விஷம் சாப்பிட்டவன் மரிக்கிறான். ஸ்வப்ன நிலையுள்ளவனுக்கும் பாம்பு கடித்தல் ஜலத்தில் மூழ்குதல் முதலிய காரியங்கள் நடக்கின்றனவே. அது எப்படி பொய்யாகும்? என்கிற ஆட்சேபத்திற்குப்பதில் கூறப்படுகிறது. ஸ்வப்னத்தில் பாம்பினால் யேற்பட்ட பயம் ஸத்யம் தான். காரியம் பொய்யானாலும் ஞானம் நிஜமானதுதானே. ஸ்வப்னத்தில் ஸ்திரியைப்பார்ப்பவனுக்கு மங்களங்கள் யேற்படுகின்றன. ஸ்வப்னத்தின் சில அசுபக்குறிகளால் ஸத்தியமான மரணம் சூசிக்கப்படுகிறது. ஆகவே நன்மை தீமைகள் ஸ்வப்னத்தினால் ஏற்படுகின்றன. ஆனால் ஆத்ம ஞானத்தை அடைந்தவனுக்கு எல்லாவற்றுக்கும் முடிவில் உள்ளவனுக்கும் அவனால் யாது எதிர்பார்க்கக்கூடும்? தத்வமஸி அஹம் பிரும்மாஸ்மி என்பதால் ஸர்வாத்மத்திற்கு ஏகத்வமானது அறிவிக்கப்பட்டு அறிவு உண்டாவதால் இதற்குப்பிறகு எதிர்பார்க்கவேண்டிய ஆகாங்க்ஷை ஒன்றுமில்லையே! ஏனெனில் ஆத்மைகத்வத்தைவிட (பிரும்மாத்ம பாவத்தைவிட) வேறொரு பொருள் அபேக்ஷிக்கவேண்டியது இல்லையன்றோ? இத்தகைய ஆத்மைகத்வக்ஞானமே இல்லையென்று சொல்லிவிட முடியாது. சுவேதகேது இத்தகைய ஏகத்வ ஆத்மஞானத்தையடைந்து உபதேசத்தினால் (விஜக்ஞெள) ஏகத்வஞானத்தையும் அறிந்தார் என்கிற சுருதியிருப்பதே காரணமாகும். இந்த ஏகத்வ ஞானத்திற்குப்பின்பு ஸாதனங்களாகிற சிரவணம் வேதானுவசனங்கள் விதிகள் தேவையில்லை ஆத்ம ஸாக்ஷாத்காரம் அடையப்பட்டதும் அவை பிரயோசனமில்லை இதனால் வ்யவஹாரிகையில் உள்ள பேதவியாஹாரமும் பாதிக்கப்படுவதிலிருந்து பிரும்மமானது அநேகாத்மகம் (பற்பல உருவமுள்ளது) என்ற கற்பனைக்கு அவகாசமில்லாமல் (இடம் இல்லாமல்) ஆகிறது. பரிணாமவாதிகளும் இதனால் அடிபடுகின்றனர். ஆத்மானைவச்

சொல்லும்போது இரண்டாவது பொருளற்ற இந்த ஆத்மாவே பிரும்மமாகும். "இது இல்லாமல் இல்லை சேஷித்த பொருள் அந்த இந்த ஆத்மாவாகும்" "ஸ்தூலமாயுமில்லை அணுவாயு மில்லாதது" என்கிற வசனங்களால் விகாரங்களையும் மறுத் துக்கூறும் சுருதிகள் மூலம் பிரும்மம் கூடஸ்தம் தான் மாறாதது என்பது அறியப்படுகிறது. ஒரே பிரும்மம் பரிணாமரூபதர்மமுள்ள தென்றும் அது இல்லையென்றும் கொள்ளமுடியாதல்லவோ?

"கூடஸ்தன்" ஆத்மாவாதலால் எல்லா விகாரங்களும் மறுக்கப்பட்டு அது நித்யமாகவுமிருக்கும். கூடஸ்தமான பிரும் மாத்மா ஏகத்வ ஸாக்ஷாத்காரத்திலிருந்தே மோக்ஷரூபபலனைச் சாஸ்திரம் தெரிவிக்கிறது. தன்னிடம் ஆஸ்ரயித்த எந்த வஸ்து வுக்குப் பல மாறுதல்களை உண்டு பண்ணுவதால்தான் எவ்வித மாறுதலை தான் அடையாமலிருப்பதுபற்றி அதாவது தன்னிடம் அத்யஸ்தமான வஸ்துக்களின் விகாரத்திற்கு அதிஷ்டானமாக விருப்பதால்கூட ஸ்தமாயும் தான்மாறாமலிருப்பதால் கூடஸ்த நித்யம் எனப்படுகிறது. பொய்யான மாயையிலிருந்து அந்த மாயையும் தன்னையும் பிரகாசப்படுத்திக்கொண்டிருப்பது பற்றி கூடஸ்தமாகும். நித்யம் என்பது பரிணாமிநித்யம்; கூடஸ்த நித்யம் என இருவகைப்படும். அவற்றுள் எது பல மாறுதல்களை யடைந்தபோதிலும் "அதே தான் இது" என்ற தோற்றம் எதில் மாறுவதில்லையோ அந்த வஸ்து பரிணாமி நித்யம் எனப்படும். அதாவது ஜகத்தை நித்யம் என்று சொல்பவர்கள் பூமி முதலி யன எவ்விதம் மாறுதலையடைந்தபோதிலும் அவற்றை நித்ய மென்று கூறுகின்றனர். ஸாங்கியர்கள் ஸத்வரஜஸ்தமஸ் ஆகிற குணங்கள் எவ்விதம் மாறுபாட்டை அடைந்த போதிலும் அவற்றை நித்ய மென்கிறார்கள். இந்த கூடஸ்த நித்ய ஆத்மா ஆகாசம் போல எங்கும் பரவியுள்ளதாயும், விகார மற்றதாயும், ஸ்வயம் ஜோதிஸ் ஸ்வரூபமுள்ளதாயுமுள்ளது. அதில் தர்மா தர்மங்கள், அதன் பலன்கள் முக்காலத்திலும் சம்பந்தத்தை அடைவதில்லையோ அந்த இதுவே மோக்ஷம் எனப்பெயரிய அசரீரத்துவமாகும். அந்த பிரும்மமே அசரீரத்துவமாகும். மோக்ஷமானது கூடஸ்த நித்தியமாக விருப்பதனால் அது ஸாதன மாகாது. உபாதியினால குறைவையடைந்த பிரும்மத்துக்கு

ஈஸ்வரத்தன்மை ஸர்வக்ஞத்வம் ஸர்வ சக்தியாகவிருக்கும் தன்மையுமே ஒழிய உண்மை நிலேயில் ஐக்கிய ஞானத்தினுல் போக்கப்பட்ட எல்லா உபாதி ஸ்வரூபத்தையுமுடைய ஆத்மாவினிடத்தில் நியந்திருத்வம் நியாம்யத்வம் ஸர்வக்ஞத்வம் முதலிய வ்யவஹாரம் பொறுத்தமாகாது. சுருதி சொல்கிறது"அன்னியமாக விருந்துகொண்டு அன்னியத்தைப் பார்ப்பதென்பது எதிலில்லேயோ, அன்னியமாக விருந்துகொண்டு அன்னியத்தை அறிவதென்பது எதில் இல்லேயோ அது பூம சப்தத்தால் அறியப்படும் பரமாத்மாவாகும்" ஆகவே பரமார்த்த தசையில் (உண்மை நிலேயில்) எல்லா வியவஹார நிலேயில் "இவர் ஸர்வேஸ்வரன் ஆவர். பூதங்களுக்கு அதிபதி இவ்ரே ஸேது". இதனுல் ஈஸ்வராதி வ்யவஹாரம் சொல்லப்பட்டிருக்கிறது. அதனுல் சூத்ரக்காரரும் ததனன்னியத்வம் என்று உண்மைநிலேயைக் கருத்தில்கொண்டு உபதேசித்தார். காரியமான பிரபஞ்சத்தை மறுக்காமலே ஸகுணமான உபாஸனங்களில் உபயோகப்படக் கூடும், எனக்கருதி பரிணும ப்ரகிரியையும் ஆஸ்ரயித்திருக்கிருர். ஆகவே எல்லா ஜகத்தும் பிரும்மத்தின் காரியம். பிரும்மத்தைவிட வேருக இல்லாதிருப்பதாலும் அதனுல் கேழ்க்கப்படாததும் கேழ்க்கப்பட்டதாக ஆகுமோ, எண்ணப்படாததும் எண்ணப்பட்டதாகுமோ, அறியப்படாததும் அறியப்பட்டதாக ஆகுமோ என்று சுருதியில் சொன்ன பிரதிக்ஞை (ஏகவிக்ஞானத்தினுல் ஸர்வ விக்ஞானம் உண்டாகும்) என்பது ஸ்தாபிதமாகும்.

இதர வ்யபதேசாதி கரணத்தில் ஜீவனேக்காட்டிலும் பிரும்மம் வேறல்ல என்பதை ஆஸ்ரயித்து ஜீவனிடமுள்ள தோஷங்கள் பிரும்மத்தினிடம் வருமா என்கிற சந்தேகத்திற்குப் பதில் அளிக்கப்படுகிறது. "இந்த ஜீவனுகிற ஆத்மாவினுல் அனுபிர்வேசம் செய்து நாமரூபங்களே ஸ்தூலமாக்குகிறேன்." என்கிற வசனத்தில் பரதேவதையானது ஜீவனே ஆத்ம சப்தத்தாற் சொல்லுகிறதாய் சாரீரன் துக்கத்தைத்தரும் சம்சாரத்தை விலக்கிக்கொள்வான், தனக்கு எது ஹிதமோ

அிந்தச்செய்வான். இதனுல் சேதனனிடமிருந்து ஜகத்தின் ஸ்ருஷ்டி சொல்லுவது அன்னியாயமானது என்று (யுக்திக்குப் பொருந்தாது) என்று அறியப்படுகின்றது—என்பது பூர்வபக்ஷம் இதற்குப்பதில் பிரும்மம் நித்ய சுத்த முக்த ஸ்வருபமாதலால் அதற்கு ஹிதமோ அஹிதமோ இந்த தோஷங்கள் பிரஸக்தங் களாக வாவதில்லை. சாக்ஷியான பரமேஸ்வரனுக்கு எவ்வித தோஷமும் பிரஸக்தியில்லை. ஜீவனின் தோஷம் பிரும்மத்துக்கு யேற்படாது. பால் தயிராவது போல பிரும்மமும் தன்னைவிட வேருன ஸாதனத்தை எதிர்பாராது ஜகத்திற்குக் காரணமாக லாம். ஸ்வபாவ விசேஷத்திருல் இயற்கையாலமைந்தகாரண விசேஷத்தாலே மாறுதல் இங்கும் ஸம்பவிக்கலாம். ஜலம் பனிக் கட்டி ஆவது போல. ஆகவே பிரும்மம் ஒன்ருயினும் அதற்கு விசித்திர சக்தியின் சேர்க்கையால் க்ஷீரம்போல விசித்திர மாறுதல் பொருத்தமாகும். ஆனுலும் பிரும்மம் நிரவயவம். அதற்கு பரிணமமானது எப்படி பொருந்தும் என்கிற ஆட்சேபத் திற்கு பூர்வபக்ஷத்திற்கு பதில் அளிக்கப்படுகிறது. மாயாகார்யங் களால் பிரும்மத்துக்கு வெகு உருவமுள்ள தாயிருத்தல் யேற்படு கிறதேயன்றி அதன் முழுஉருவம் மூலமும் அதன் அவயவ மூல மும் அது யேற்படுவதில்லை நிரவயவம் என்தாம்.

அதற்கு பரிணமமானது எப்படி பொருந்தும் என்கிற ஆட்சேபத்திற்கு பூர்வபக்ஷத்திற்கு பதில் அளிக்கப்படுகிறது மாயாகார்யங்களால் பிரும்மத்துக்கு வெகு உருவமுள்ளதா யிருத்தல் யேற்படுகிறதேயன்றி அதன் முழு உருவம் மூலமும் அதன் அவயவமூலமும் அது யேற்படுவதில்லை. நிரவயவமான பிரும்மத்துக்கும் மாயிகமான பரிணமம் சம்பவிக்கலாம் என்பது ஸித்தாந்தம். நிரவயவம் என்பது நிஷ்களம் (அவயவமற்றது) நிஷ்கிரியம் சாந்தம் நிரவத்யம் நிரஞ்சனம் (ராகாதிகளற்றது) இது மாதிரி சுருதிகள். பரிணம பக்ஷத்தில் (பிரும்மமே ஜகத் ஆகிறது என்ற பக்ஷத்தில்) முற்கூறிய தோஷம் ஸம்பவித்த

போதிலும், விவர்த்த பக்ஷத்தில் (ஸ்ருஷ்டியாதி கற்பனைக்கு பிரும்மம் அதிஷ்டானமாயுள்ளது என்கிற பக்ஷத்தில்) எவ்வித தோஷமும் ஸம்பவிப்பதில்லை என சுருதேஸ்து சப்த மூலத்வாத் என்பதால் பதில் சொல்லப்படுகிறது. அதாவது பிரும்மம் ஜகத் காரணம் காரியமான பிரபஞ்சத்தை விடத்தனியாகப் பிரும்மிப்பது, சுருதி ஒன்றினாலே அறியத் தக்கது. யுக்தி மூலம் யேற்படும் தோஷத்துக்கு இடமில்லா மையாலும்; பிரும்மம் நிரவயவமாயினும் அது ஜகத்திற்கு உபாதான காரணம் எனக்கூறி சுருதி சொல்லியிருப்ப தால் அதனால் விவர்த்தோபாதானபக்ஷத்தை ஆஸ்ரயித்து முற் கூறிய நிரவயவத்வம் பரிணாமம் உள்ளதாக எவ்வித் என்கிற ஆட்சேபத்திற்கு உள்ள தோஷத்தைப் போக்கிக்கொள்ளவேண் டும் மென்பதாம். அதாவது முழு பிரும்மமும் காரியமாக வாகட்டும் என்கிற ஆசங்கைக்கு இடமில்லாமலாகிவிட்டது. சப்த மூலமாக பிரும்மத்தை அறியமுடியுமாதலால் அவித்யா மூலம் கற்பிக்கப்பட்ட ரூபபேதங்களினால் வஸ்துவானது ஸாவ யவமாக வில்லாதபோது அவயவத்துடன் கூடினதாக ஆகா தல்லவா? வ்யவஹாரிகதசையில் ஸ்தூல சூக்ஷம வடிவமானது ரூப பேதத்தால் பிரும்மம் பரிணாமம் முதலிய ஸகல வ்யவஹா ரங்களுக்கும் ஆஸ்பதமாக இருத்தலை யடைகிறது. இதனால் பிரும்மத்திற்கு தோஷமில்லை. பிரும்மம் நிரவயவமாக விருப்ப தற்கு தோஷம் வருவதில்லை. பரிணாம சுருதியோ ஸர்வ வ்யவஹாரமும் அற்ற பிரும்மத்தினது உபதேசத்தைப் பயனாக வுடையது. அவ்விதமாக அறிவதில் பயனும் ஏற்படுகிறது. "பயஹேதுவான இரண்டாவது பொருள் அற்ற பிரும்மத்தை அடைந்தவனாக விருக்கிறாய்" என்று யாக்ஞ்ய வல்கியர் ஜனகருக்கு உபதேசித்தார். ஆகவே தோஷமில்லை என்பதாம் ஸ்வப்னத்தில் ஸ்வரூபமாறுதல் இன்றி எப்படிபல வஸ்துக்கள் உண்டாகின்றனவோ அதுபோல் ஒரு பிரும்மத்தினின்றும் ஸ்வரூப மாறுபாடின்றி அநேக ஸ்ருஷ்டியேற்படலாம். பரமாணு

காரணவாதிகளுக்கும் இந்த தோஷம் நிரவயவமான பிரும்மம் எப்படி காரியத்திற்குக்காரணமாகிறது என்பது ஸமானமாக விருக்கிறது. பரமாணுவை ஜகத்காரணமாகச்சொல்லும் வாதிகளும் பரமாணு நிரவயவமானதுபற்றி ஒருஅணு மற்றொரு அணுவுடன் சேரத்தொடங்கி முழுதும் (மற்றொன்றுடன்) சேருமானால் அப்போது விருத்தியேற்படாமல் போவதிலிருந்து (காரணமான அணுவுக்கு) அணுமாத்திரமாக விருத்தல் வரத் தெரியும். இதற்குவேண்டி (மற்றொரு அணுவின்) ஏகதேசத் துடன் (சில அவயவத்துடன்) சேர்க்கை யேற்படுவதாகச் சொல்லக்கூடுமானால் அப்போதும் பரமாணுவானது எவ்வித அவயவமுமற்றது என்ற கொள்கை வீணாகிவிடும் என்பதினா லும் பரமாணு காரணவாதிக்கும் இந்த தோஷம் ஸமானமாகவே ஆகிறது. சாங்கியன் பக்ஷத்திலும் உண்டு. ஆனால் பிரும்ம வாதியினாலோ தன்பக்ஷத்தில்வரும் தோஷம் பரிஹரிக்கப் பட்டிருக்கின்றது.

பிரும்மம் நிரவயவம் அதற்கு மாயை என்கிற விசித்திர சக்தியுண்டா அல்லது இல்லையா என்கிற சந்தேகம் ஸர்வோ பேதாசதத்தர்சனாத் என்கிற அதிகரணத்தில் சொல்லப்படுகிறது பூர்வபக்ஷம் பிரும்மத்துக்கு மாயை கிடையாது. சித்தாந்தம் மாயை தேகமில்லாவிடினும்கூட சுருதி பிரமாணத்தையொட்டி பிரும்மத்தினிடத்தில் இருக்கிறது, இதில் யாதொரு விரோத மில்லை. வெளிப்படையான காரணமில்லாமல் மாயையினால் காரிய காரித்துவமானது ஏற்படுகிறது எவ்விதமோ அதுபோல சர்வசக்தியுடன் கூடினதாக பிரும்மம் இருக்கிறபடியால் சுருதி பிரகாரம் தத்தர்சனாத் என்பதால் பரதேவதைக்கு ஸர்வசக்தி யின் யோகத்தைக்காண்பிக்கிறது. ஸர்வகர்மா, ஸர்வகாம: ஸர்வகந்த: ஸர்வரஸ: எல்லாம் பிரும்மத்தின் ரஸமாகும் ஆசை யாகும். ஸர்வமிதமப்யாத்த: இவற்றை அடைந்தவர். அவாகி ஆனாதரர் (பற்றில்லாதவர்) ஸர்வக்ஞ ஸத்ய ஸங்கல்பர்.

"கார்க்கி, இந்த அக்ஷரத்தினுடைய வீரியத்தினுல் சூர்ய சந்திரர்கள் நடைபெறுகின்றனர்". இதே மாதிரி பரமாத்மா அசரீரமாயினும் அவித்யாசக்தி யோகத்தால் அந்தர்யாமித்வம் சம்பவிக்கலாம் என்று தத்தர்ம வ்யபதேசாத் என்பதில் சொல்லப்பட்டது. அது மாதிரி பிரும்மத்துக்கு அவித்யா சக்தியே இல்லையென்று சொல்லப்பட்டதை இங்கு சுருதியினுல் மறுத்தது உண்டு என்கிறது. ஏற்கனவே ததுக்தம் என்று சூத்திரத்தால் விசித்திரசக்தியுண்டு என்றும் நிரவயவம் அதனுல் எப்படி யேற்படுகிறது என்கிற சந்தேகத்தைப்போக்க இதில் சொல்லப்படுகிறது. தேவர்கள் சரீரமுள்ளவர்களாகவும் சக்தர்களாகவும் சொல்லப்படுவதுபோல கண் இல்லாமல் பார்க்கிறுர். காதில்லாமல் கேட்கிறுர் என்பதால் கரணமற்றவராயினும் பிரும்மத்துக்கு இந்த சாமர்த்தியம் சுருதி மூலமாக உண்டு என்று தெரிகிறது.

ஸ்ருஷ்டியினுல் யாது பிரயோசனம் பரமாத்மாவுக்கு—அவாப்த ஸ்மஸ்த காமனுக்கு யாது பிரயோசனம் இருக்கக் கூடும்? லீலை (விளையாடுதல்) மூச்சு விடுதல் வீண்சேஷ்டை யாதொரு பயனையும் உத்தேசிக்காமலே செய்கிறுர், பல அபேக்ஷையில்லை. இருப்பினும் ஸ்ரஷ்டாவாக விருக்கிறபடியால் அவரால் (மட்டுமே) கூடும் என்பதாம்.

அதேமாதிரி பகவானுக்கு பக்ஷபாதித்வமில்லை. இது வைஷம்ய நைர்க்கிருண்யாதி கரணத்தில் சொல்லப்படுகிறது ஸம்சாரமே அநாதி, ஜீவன் கர்மாக்களின் பலனை யனுபவிக்கிறுன். ஒருவனுக்கு நஷ்டம் லாபம் கர்மத்துக்கு ஏற்றுப்போல பலன் (ஜீவனுக்கு) யேற்படுகிறது. இதற்குக்காரணம் ஈஸ்வரன் ஒன்றையும் அபேக்ஷிப்பதில்லை. ஈஸ்வரன் பிராணிகளின் தர்மா தர்மங்களை அபேக்ஷிக்கிறுர் என்றுல், படைக்கப்பட்ட பிராணிகளின் கர்மங்களைப் பார்க்கிறுர் என்றுல், இது தோஷமாகாது.

ஈஸ்வரன் படைப்பிற்கும் ஸாதாரண (பொதுப்பட்ட) காரணமா கிறார். தேவமனுஷ்யாதி ஜன்மங்கள் அந்தந்த ஜீவர்களின் கர்மங் களே காரணமாகின்றன. சுருதி—"எவனை இவ்வுலகங்களினின் றும் மேலுலகுக்கு அழைத்துச்செல்ல விரும்புகிறாரோ அவனை இவரே யன்றோ நற்கருமத்தைச் செய்யச்செய்கிறார். எவனைக் கீழேதள்ள விரும்புகிறாரோ அவனை நீசமான கெட்ட செய்கை யைச்செய்யும்படி செய்கிறார்" இதனால் பிராணி கர்மா பேக்ஷ மாகவே ஈஸ்வரனுடைய அனுக்ரஹிக்கும் தன்மையையும் நிக்ர ஹிக்கும் தன்மையையும் தெரிவிக்கிறது. இதனால் வைஷம்ய நைர்க்கிருண்யங்கள் ஈஸ்வரனுக்கு பிரஸக்தமாகவாவதில்லை.

கர்மம் எவ்விதம் யேற்படும் என்றால் அது அநாதி. ஸம் சாரம் அநாதி, சுருதி ஸ்மிருதிகளின் காணப்படுகிறது. கர்மங் களை அபேக்ஷித்த அவித்யையே வைஷம்யத்தைச்செய்வதாகவா கிறது. கர்மமில்லாமல் சரீரம் உண்டாவதில்லை, சரீரமின்றி கர்மம் யேற்படுவதில்லை. சுருதியில் "இந்த ஜீவாத்மாவினால்" என்று சிருஷ்டி ஆரம்பத்தில் சாரீரனான ஆத்மாவைப்பிராண தாரணத்தை நிமித்தமாகக்கொண்ட ஜீவ சப்தத்தால் சொல்லு வதால் ஸம்சாரம் அநாதியென்று தெரிகிறது. ஸ்மிருதியிலும் அவ்விதமே சொல்லப்பட்டிருக்கிறது.

ஸகுண பிரும்மத்துக்குச்சரி—நிர்குண பிரும்மத்துக்கு பிரகிருதித்வம் எப்படி பொருந்தும் அது கிடையாது என்று பூர்வபக்ஷம். சித்தாந்தம் நிர்குணமாயினும் பிரும்மம் பிரக்ருதி யாக ஆகலாம் என்று பிரும்மத்துக்கு அதிஷ்டானமாக (ஆதார மாக) ஆகுதலே—பிரகிருதித்வம் என அத்வைதிகளால் ஒப்பப் படுகிறது. பிரும்மம் ஸர்வக்ஞமும் ஸர்வ சக்தியுள்ளதாயும் மாயை யுள்ளதுமாகும் என்றதால் எல்லாக்காரண தர்மங்களும் உண்டு. எக்காரணம் கொண்டு அவை இருக்கின்றனவோ அக்காரணத்தினால் உபநிஷதங்களில் கூறப்பட்டது.

தர்க்க பாதத்தில் (இரண்டாம் அத்யாயம்—2ம் பாதம்) மீண்டும் ஸாங்கியன் வைசேஷிகன் பௌத்தர்—ஜைனர்—பாசுபதர்–பாஞ்சராத்ரம் (ஒரு அம்சம்) இவர்களின் பக்ஷங்களை மறுக்கிறார் சங்கரர். அவருடைய முக்கியநோக்கு வேதம் உண்மை. எல்லாபதார்த்தங்களையும் அது விளக்குவது சரி. கர்ம பிரும்ம மீமாம்ஸைகள் இரண்டும்சூரியனுடைய ஒளி போன்றது, அவசியமானது. ஸாங்கியவைசேஷிகாதி நூல்களோ தர்க்கத்தையே முக்கிய பிரமாணமாகக்கொண்டு, அதற்கு ஒத்துவரும் வேதபாகத்தை ஆதரிக்கிறார்கள். ஒவ்வாத பாதத்தை அதற்குத் தகுந்தாற்போல திரித்துப்பொருள் கொள்கிறார்கள். பௌத்தர் ஜைனர் எவ்வழியாலும் வேதத்தை ஒப்புக்கொள்ளாதவர்கள், தங்கள் பக்ஷத்தை யுக்தியினால் சாதிக்கிறார்கள்.

கபிலரின் ஸாங்கியம்—வைதிகமார்க்கத்துக்கு நேர் விரோதியான இவரது ஸ்மிருதி மூலமும் அவர்கூறும் தர்க்க மூலமும் யேற்படுகிறது. வைதிக சித்தாந்தத்திற்கு வரும் விரோதத்தை மனு முதலிய சிஷ்டர்களால் ஒப்புக்கொள்ளப் பட்டதை ஆதாரமாகக்கொண்டு சங்கரர் மறுத்தார். முந்தின பாதம் 12 அதிகரணங்களில் ஸகல தர்மோபபத்தி–என்பதால் பிரும்மத்தனிடம் எல்லா தர்மங்களும் வேதங்களில் சொல்லிய படி பொருந்தும் என்றார்.

இரண்டாவது பாதத்தில் (இரண்டாம் அத்யாயம்) பரபக்ஷ நிராகரணம் செய்கிறார். பிரும்மத்தினிடம் ஸர்வ தர்மமும் பொருத்தமாவதுபோல பிரதானத்தினிடமும் அவை ஏன் பொருத்தமாகக்கூடாது என்கிற சந்தேகத்திற்குப்பதில் சொல் லப்படுகிறது. முக்கியமாக கேவல தர்க்கத்தினால் ஒரு ஸித்தாந் தத்தை சாதிக்கவோ மறுக்கவோ வந்ததல்ல. தர்க்கம் அர்த்த நிர்ணயத்திற்கு உபயோகப்படக்கூடும்; அதனால் ஞானத்தை நிர்ணயம் செய்வதால் ஸ்வபக்ஷ ஸ்தாபனமும் யேற்படும். அது மாத்திரமல்ல ஸ்திரமாக்கப்படும். (ஊர்ஜிதம் செய்யப்படும்).

ரசனுனுபபத்தே:ச நாநுமானம் என்பதில் பிரதானம் ஜகத்காரணமாகலாம் ஏனெனில் மூன்று குணங்களின் காரியங் களாகும். சுகதுக்க மோஹம் இத்யாதி இவைகளைத்தரும் உலகம் பிரதானத்தின் காரியமாயும் பிரதானம் ஜகத் காரண மாகவுமாகும் என்பதாம். இது பூர்வபக்ஷியின் கருத்து இதற்குப் பதில் பிரகிருதி அசேதனம். அது புருஷனுக்கு ஸ்வதந்திரமாக காரியங்களைச்செய்ய முடியாது. வீடு மாடி இவைகள் சிற்பி களால் கட்டப்படுகின்றன. அது போல பிரகிருதியின் காரியங்கள் சேதன அதீனம். சாங்கியன் பிரதானத்தை மூல காரணம், எல்லாப்பொருள்களுக்கும் முதலில் எது காரணமாக வாகின்றதோ அது மூலகாரணம் என்கிறார்கள். அது பிரதானம் என்கிறார்கள். அந்தக்காரணம் எல்லாவற்றிலும் ஊடுருவி தொடர்ந்து வருவதால் உதாரணமாக மண்ணில் (உபாதான காரணமான மண்ணில்) மூலகாரணமாகிற பிரக்ருதி தொடர் வதால் எது உபாதானம் என்பதை நிமித்தம் இவைகளைக் கொண்டோ மண் முதலிய வஸ்துவைக்கொண்டோ நிர்ணயம் செய்வது தகாது என்பதாம். இதன் பிரகாரம் அசேதனமான பிரதானம் ஜகத் காரணமாகாது. சுருதி சேதனனைக்காரண மாகக்கூறுகிறது. முக்குணங்களிடம் பரிமிதத்துவம் (அளவி லடங்கியிருத்தல்) காணப்படுவதின் மூலம் இவைகளுடன் பலவற் றின்சேர்க்கையை முன்னிட்டு உண்டாகவேண்டியிருத்தல் தெரி யும். மண் தேர் இவைகளுக்கு சேதன ஸம்பந்தமின்றி பிரவிருத்தி காணப்படுகிறதில்லை. சலனம் ஏற்படுகிறதேயென்றால் சேதன ஸம்பந்தத்தால் அனுமான ரீதியாக ஏற்படுகிறது. சித்தாந்தத் தில் பிரும்மத்தைத்தவிர வேறு ஒரு பொருள் இல்லையே என்று கூறினால் அவித்யையினால் கற்பிக்கப்பட்ட நாமரூப பிரபஞ்சத் தில் அதே அவித்யை மாயையினால் கற்பிதமான சித்ரூப பரமாத்ம வஸ்துவினது சம்பந்தம் யாது உண்டோ அது அந்தர் யாமி யாதலால் அதனால் சம்பவிக்கலாம். ஸர்வக்ஞனைக் காரணமாகக்கூறினால் பிரவிருத்தி (சலனம் இத்யாதி) யேற் படுமே ஒழிய, அசேதனத்தினால் விளையாது என்று சித்தாந்தம்.

# பிரும்மவித்யா - முதற்பாகம்

(தொடர்ச்சி)

ஹேகாரக்கி, அக்ஷரத்தின் ஆணையினலேயே நதிகள் கிழக்கு நோக்கி ஓடுகின்றன. இதில் - ஈஸ்வரனே ப்ரேரகனக (அதிஷ்டாதாவாக) விருக்கிறர். அசேதனமானபால் ஜலம் முதலியவைகூட ஈஸ்வரபிரேரணையை அனுஸரித்தே — பசு பாலைத் தன் கன்றுக்காகவும் பெருக்குகிறது. ஜலம் தாழ்ந்த பூமியில் பாய்கிறது. அனுமானத்தினல் - சாஸ்திரம் இவற்கைக் கொண்டு அபேக்ஷையிருக்கிறது எனத் தெளியவும். இதற்கு ஆட்சேபமாக - ஒருவித வேறு நிமித்தத்தை அபேக்ஷிக்காது — பிரதானம் ஜகதா காரமாகப் பரிணமித்தை அடைகின்றது. புல் பசுவிற்கு பாலாகிறது: அதே புல் காளைக்கு ஆகிற தில்லையே - இதே காரணத்தினல் - பிரதானமும் மஹத்தத்வாதி ரூபமாக மாறுதலையடையலாம் என்கிறர்கள் ஆனல் சில காரிய மானது மனிதனல் சம்பாதிக்கக்கூடியதாயும் — சிலவை தெய்வத்தால் யேற்படுவதாக விருக்கின்றதே. வேறு விடங்களில் புல் பாலாகமாறுவதில்லையே — ஆதலால் இயற்கையாகவே பிரதானத்துக்குப் பரிணமம் யேற்படுகிறதென்பது ஸித்திப்ப தில்லை. இவ்விதமாக பிரதான காரணவாதம் நிராகரிக்கப் பட்டது.

இதே மாதிரியாக பரமாணுக்களை ஜகத்காரணமாகச் சொல்லும் வாதமும் தள்ளப்படுகின்றது. மஹத்தீர்க்காதி கரணம் - ததாபாவாதி கரணங்களில் பிரதானத்தின் தர்மங்கள் - சுகதுக்கமோஹம் — ஜகத்தில் தொடர்ந்து காணப்படாமை யினல் (அனுவிருத்தியினல்) பிரதானம் ஜகத்காரணமாகாது என உபதேசிக்கப்பட்டது. அப்படியாயின் பிரும்மத்தின் குண மான சைதன்யத்துக்கு ஜகத்தில் தொடர்பு (அனுவிருத்தி) காணப்படாமையினல் — பிரும்மமும் ஜகத்துக்கு உபாதான காரணமாக ஆவதற்கு இடமில்லை - என்கிற சந்தேகம் எழ - அதைப் போக்க - வைசேஷிகன் முதலில் வருகிறன்.

பிரும்மம் ஜகத்காரணமானல் - ஜகத் விசேஷ குணமான சைதன்யத்துடன் கூடியதாகக் காணப்படல் வேண்டும். அவ்விதம் காணப்படவில்லை. ஆதலால் பிரும்மம் ஜகத்திற்கு

உபாதான காரணமாகாது. அத்தகைய குணங்கள் கொண்ட (ஸ்பர்சம் முதலிய குணங்களுடன் கூடிய காரியமான பூமி என்கிறதற்கு — குணங்கள் வாய்ந்த) பரமாணுக்களேதான் மூலகாரணமாகக்கூடும். வாயுவுடன் கூடின பரமாணுக்களுக்கு ஸ்பர்சம் என்கிற குணத்துடன் கூடியன. தேஜஸ்ஸன் பரமாணுக்கள் ஸ்பர்சம்ரூபம்-இரண்டு குணங்களைக் கொண்டன. ஜலத்திற்கு ஸ்பர்சம் ரூபம - ரஸம் என்கிற மூன்றும்; பூமிக்கு இவற்றுடன் கந்தம் என்கிற நான்காவது இருக்கின்றன. இவைகளுள் வாயு தேஜஸ் ஜலம் என்கிற மூன்று பூதங்களின் பரமாணுக்களிலுள்ள ஸ்பர்சம் ரூபம் ரஸம் என்கிற குணங்கள் நித்யமாகும். கந்தம் என்கிற பிருத்விகுணம் அநித்யமாகவும் - பாசத்தாலுண்டாகக் கூடியதாகவும் ஆகும், சப்தம் என்கிற குணம் காரியமானதிரவியத்துடன் இருக்கக்கூடியதல்ல. ஆகாசத்தில் மட்டுமிருப்பதே அதன் காரணமாகும் - ஆகாசம் நித்யம், நிரவ்யயமும் ஆகும்.

பொதுவாக காரியத்திரவியத்திற்கு ஸமவாயி என்றும் அஸமவாயியென்றும் இரண்டு காரணங்களுண்டு. துணிக்கு நூல் ஸம்வாயிகார்ணம் - நூல்களின் சேர்க்கை - (ஸமயோகம்) அஸம வாயி காரணமாகவும் ஆகும். இந்த ஸமவாயி நாசமூலமோ - அஸ்மவாயிகாரண் நாசமூலமோ - திரவியங்களுக்கு நாசமுண்டா கிறது. பூமி முதலிய திரவியங்களின் அவயவங்களுக்கோ - அல்லது அவயவங்களின் ஸம்யோகத்துக்கோ நாசமேற்பட்டு - முறையே - பரமாணுவாத ஆகும் வரை நாசம் யேற்பட்டுக் கொண்டே போகிறது. பரமாணுக்களோ நித்யம். பிரளயம் வரை அவை காரியமான திரவியங்களாக விருக்கின்றன. பிரளய முடிவில்-ஜிவனுடைய புண்ணிய பாபத்தை முன்னிட்டு - அந்த பரமாணுக்களில் கிரியை உண்டாகிறது. அந்தக்கிரியை காரணமாய் இரண்டு பரமாணுக்களின் சேர்க்கை - ஸம்யோகம் ஏற்படுகிறது. இரண்டு பரமாணுக்களின் ஸம்யோகம் த்விய ணுகம் - உண்டாகிறது. அந்த த்வியணுகத்துக்கு பரமாணுத் வயம் ஸமவாயி காரணமாயும் - பரமாணுத்வய ஸம்யோகம் அஸம்வாயிகாரணமாகவும் ஆகின்றன. இவவிதம் மூன்று த்விய ணுகங்கள் ஸமவாயி கார்ணமாகவும் அவற்றின் ஸம்யோகம் அஸம்வாயிகாரணமாகவும் ஆகின்றன. இவ்விதம் பூதபௌதிக

திரவியங்கள் உண்டாகின்றன. பிரளயத்தில் அவை தனித் தனியாகப்பிரிந்து போகின்றன - அப்போது பரமாணுக்களின் பரிமாணம் பாரிமண்டல்யம் எனப்படும். காரணதிரவியத்தில் ஸாதாரண குணங்கள் என்றும் விசேஷ குணங்கள் என்றும் இரண்டு குணங்களுண்டு. அவற்றுள் இந்த பாரிமண்டலய பரி மாணமானது (அளவானது) ஸாதாரண குணமானது பற்றி இரண்டு பரமாணுக்கள் சேர்ந்துண்டாகும் த்வியணுகத்தில் அது வருவதில்லை. பின்னையோ வென்னில் அந்த த்வியணு கத்தில் அணுத்வம் என்ற புதிதான ஒரு விசேஷ பரிமாணத்தை உண்டாக்குகின்றது. இவ்விதமே காரணதிரவியமான த்வியணுக த்திலுள்ள அணுத்வம் என்ற குணம் (விசேஷ குணமாயினும் கூட) மூன்று த்வியணுகங்களின் சேர்க்கையாலுண்டாகும் திரியணுகத்தில் வருவதில்லை. அந்த திரியணுகத்தில் அணுத்வம் என்ற குணத்துக்கு நேர்மாறான மஹத்வம் என்ற குணம் உண்டாவதே அதன் காரணமாகும் என்கின்றனர்.

இவ்விதம் சொல்லியிருப்பினும் - நிர்விசேஷ பிரும்மம் எனப்படும் சித்தாந்தத்தில் நித்யமான ஞானமானது பிரும்ம ஸ்வரூபமே ஒழிய — அது குணமாகச் சொல்லப்படுவதில்லை — சாதாரணகுணமாகவோ, விசேஷ குணமாகவோ. அந்தக் கரணத்தில் புத்திபோன்ற உபாதிகளால் யேற்படும் ஞானமோ அவஸ்தா விசேஷமேதவிர — ஆத்ம குணமல்ல. ஆகவே பிரும்மம் உபாதான காரணம் என்கிற விஷயத்தில் ஒருவித தோஷமுமில்லை - பிரபஞ்சத்தில் ஒரு அனுவிருத்தி (தொடர்பு) வரட்டும் என்ற தோஷத்திற்கு இடமில்லை.

அடுத்தாற்போல காணாதன் வருகிறான் - காரணத்தைவிட விலக்ஷணமான காரியத்தின் உற்பத்தி விஷயத்தில் காணாதற்கு திருஷ்டாந்தம் இல்லை - ஏனெனில் வெண்ணிறமான நூலினின்றும் வெண்மையான துணி உண்டாகின்றது. அணுவாக வில்லாத பரிமண்டலத்திலிருந்து அணுபரிமாணமுள்ள த்வியணுக முண்டா வதும் - தீர்க்கமான பரிணமற்ற த்வியணுகத்திலிருந்து தீர்க்கமாக பரிமாணமுள்ள திரியணுக முண்டாவது காணாதற்கு திருஷ்டாந் தம் என்பது ஸித்தாந்தம்.

(இதனால் பரமாணு காரணவாதம் மறுக்கப்படுகிறது. விசேஷிகளின் பக்ஷம் - காரண த்ரவியத்தில் ஸமவாயசம்பந்தம் யேற்படும் குணங்கள் காரியதிரவியத்தில் தன் வகுப்பிற் சேர்ந்த வேறு குணங்களை உண்டாக்குகின்றன. வெண்நூலிலிருந்து வெண்நிறமுள்ள வஸ்திரம் உண்டாகிறது — வேறாகவில்லை. ஆகவே சேதனமான பிரும்மத்துக்கு ஜகத்காரணத்வம் ஒப்பப் படுமானால் காரியமான ஜகத்திலும் சைதன்யமானது (ஸமவாய சம்பந்தத்தை முன்னிட்டு) இணைபிரியாது காணப்படும். அது காணப்படாததிலிருந்து சேதனமான பிரும்மம் ஜகத்துக்குக் காரணமாவதற்கில்லை. இது மறுக்கப்படுகிறது.)

காணாதர்கள் கூறுவது - பரமாணுக்கள் சிருஷ்டி காலத்தில் காரிய ஆரம்பத்தைச் செய்யாமல் அதற்கு யேற்ப ரூபத்தை அடைந்து பாரிமாண்டல்யம் என்கிற அளவுடனிருக்கின்றன. பின்னர் அதிருஷ்டாதிகளை (ஜீவனின் பாப புண்யங்களை) ஒட்டி - ஸமயோகத்தால் - திவியணுகாதிக் கிரமத்தை யடைந்து காரியம் விரிவடைகிறது. காரியத்தில் வேறு குணங்களை ஆரம்பிக்கின்றன. அணுத்வம், ஹ்ரஸ்வத்வம் என்பவைத் த்வியணுகத்திலிருக்கும் பரிமாணங்களாக வர்ணிக்கின்றன. நான்கு பரமாணுக்கள் சேர்ந்த சதுரணுகத்துக்கு மஹத்வம் — தீர்க்கத்வம் உண்டாகிறது. இவ்விதம் அணுத்வம் - ஹ்ரஸ்வத்வ மாக விருக்கும் திவியணுகத்திலிருந்து மஹத்தும் - தீர்க்கமான திரியணுகம் உண்டாகிறது — அணுவும் உண்டாவதில்லை — ஹ்ரஸ்வமும் உண்டாவதில்லை என்பது எவ்விதமோ - அதுபோல சேதனமான பிம்மத்தினிடமிருந்து அசேதனமான ஜகத் உண்டா கின்றது என்று சொல்லாமே.

சரீரம் ஒருத்ரவியம் பஞ்சபூதகுணச் சேர்க்கையன்று. ஸம்யோகமானது குணமென்றும் - திருஸ்யதேது - (காணப்படு கிறதன்றோ) என்பதில் விலக்ஷணமான காரியத்தின் உற்பத்தி சொல்லப்பட்டதாகும். முந்தி ஸாங்கியனைக் குறித்தும் இப்போது வைசேஷிகனைக் குறித்தும் சொல்லப்பட்டதாகும்.

சாங்கியன் அதிஷ்டானமின்றிப் பிரபஞ்சரசனை யேற்படுவது பற்றி - அதை மறுப்பது ஒருவாறு ஒப்புக்கொள்ளக் கூடியது

தான். ஆனால் தார்க்கங்கள் ஈஸ்வரனை நிமித்த காரணமாக (அதிஷ்டாதாவாக) உடைய பரமாணுக்களுக்கே ஸமவாயி காரணத் தன்மையை ஒப்புவதால் — எவ்விதம் பொருந்தும் என — பரமாணுக்களுக்கு ஸமவாயி காரணத்வம் கூறுவதன் மூலம் இதில் யேற்படும் தோஷங்களைக் கூறுகிறார். அதாவது பரமாணுக்கள் ஒன்றோடு ஒன்று சேர்ந்து — ஜகத்தை உண்டு பண்ணுகிறதா-அல்லது இல்லையா என்பது சந்தேகம்.

பூர்வபக்ஷம்-முதலிலுள்ள கிரியையாலுண்டான ஸம்யோகத்தால் த்வியணுகாதிக்கிரமமாக ஜகத்தில் உற்பத்தி யேற்படுகிறது. முதல் கிரியை நிமித்தத்துடன் கூடியதா - அல்லது நிமித்தமின்றி யேற்படுகிறதா? எப்படியானாலும் முதலிலுள்ள கிரியையானது ஸம்பவிக்க முடியாதிலிருப்பதிலிருந்து பரமாணுக்களின் ஸம்யோகம் (சேர்க்கை) யேற்படாமல் போகவே — அவைகள் ஜலத்தை உண்டு பண்ணுவதாக ஆகாது—என்பது சித்தாந்தம். இதனால் பரமாணுக்களின் காரணத்தை மறுக்கிறார் மலை சமுத்திரம் அவயவத்துடன் கூடியதாகவும் — இதனால் உற்பத்தி விநாசமுண்டு. காரணமின்றி காரியம் யேற்படாது - என்பது காணாதரின் கொள்கை. ஸாவாயவம் (அவயவத்துடன்) கூடியது யாவும் - அவயவ பிரிவினால் நாசமடையும். ஸம்யோகத்தை ஸஹகாரிகாரணமாக உடையவை. அவயவ அவயவிப் பிரிவானது எதில் முடிவடைந்து - நிவிருத்தியை அடைகின்றதோ - அது பரமாணுவாகும். பூமி அப்புதேயுவாயு- நான்கும் அவயவங்களுடன் கூடியவை. பரமாணுவரை பிரிவு யேற்படும்போது பிரளயம் யேற்படும், பின்னர் சிருஷ்டி கிரமத்தில் வாயு பரமாணுக்களின் (ஜீவர்களுடைய) அதிருஷ்டத்தை முன்னிட்டு கிரியை யேற்பட்டு - ஒரு அணுமற்றொரு அணுவுடன் சேர்ந்து-த்வியணுகாதி முறையினால் வாயு உண்டாகிறது. இவ்விதமே தெருப்பு - ஜலமும் முதலியவை, சரீரம் இந்திரியங்களுடன் கூடி — உண்டாகிறது. இந்த வழியாக ஜகத் யாவும் பரமாணுக்களிடமிருந்து உண்டாகின்றன.

இவ்விதம் கிரியை — காரியமாகவிருந்து — அணுக்களின் சேர்க்கை உண்டாக - முதன் முதலில் யேற்பட - யாதெனும் ஒன்றும் நிமித்தமாகவிருக்க வேண்டும். அது நிமித்தமின்றி

ஸம்பவிக்காதபடியால் அணுக்களிடத்து முதலிலுள்ள கிரியை யேற்படாது. ஜிவாத்மாவினுல் அந்த முதல் நிலையில் யேற்பட பிரசக்தியில்லை - ஏனெனில் சரிர மின்மையே காரணமாகும். சரிரம் யேற்பட்டதும் - ஜீவனுக்கும் மனத்துக்கும் சேர்க்கை உண்டாகி - அதனுல் ஆத்ம குணமாகிற பிரயத்னம் உண்டாகக் கூடியதாக விருக்கிறது. ஸ்ருஷ்டிக்கு முன்பு நிமித்தமாக ஏதுவும் ஆகாதது அன்றே? காணுதனில் பதில் - அதிருஷ்டம். அப்படியானுல் கேள்வி - அது ஸமவாய ஸம்பந்தத்தால் ஆத்மா வினிடத்துலுள்ளதா - இல்லை பரமாணுக்களிடத்தில் ஸமவாய ஸம்பந்தத்தாலுள்ளதா? எவ்விதமானுலும் அணுக்களிடம் அதிருஷ்ட நிமித்தக் கிரியையேற்படாது? ஏனெனில் அதிருஷ்டம் அசேதனம். சேதனனுடைய சம்பந்தம் வேண்டும், இது தானே சாங்கிய மதத்தில் ஏற்பட்டகுறை. அதற்காக புருஷனுகிற அதிருஷ்டத்தினுடைய சம்பந்தத்தால் அணுக்களுக்கு ஸம்பந்த மேற்பட்டு - விடுகிறது என்றுல்-அந்த சம்பந்தம் நித்யமாதலால் எப்போதுமே பிரவிருத்தி யேற்பட்டுக் கொண்டிருக்கவேண்டும். அதற்கு வேறு நியாமகம் தேவையில்லை ஆகவே புருஷன் முதல் கிரியையின்போது சைதன்யத்தின் (அறிவின்) உற்பத்தியை யடையாதவனுக விருக்கிறுன் - அது அசேதனனுகவிருப்பதால் அணுக்களிடம் கிரியை ஏற்பட நிமித்தமாகாது. ஆகவே ஸம்யோகம் சம்பவிக்காதபடியால்-அதைக் காரணமாகக்கொண்ட த்வியணுகாதியான காரிய ஸமூஹம் உண்டாகாது.

இந்த ஸமயோகம் - ஒரு அணு மற்றொன்றுடன் சேருவது - ஒரு முழு அணுவுடனு - அல்லது ஒரு பாகத்தில் மட்டுமா? முழு அணுவுடன் - ஸாவயவமானுல் - ஸாவயவத்துடன் வேறு திரவியத்துடன் சேர்ந்து - ஸம்யோகம் ஏற்படலாம். சிலபாகம் என்றுல் - பரமாணுக்களுக்கும் ஸவாயவம் - அவயவம் உண்டு என்று யேற்படும். இவ்விதம் அவ்யவம் கற்பிக்கப்படும். அப்படியானுல் அது வஸ்துவாகாது - அஸமவாயி காரணமாகாது. இரண்டு பரமாணுக்களின் ஸம்யோகமாகிற அஸமவாயி காரணமானது இல்லாமற்போகவே - த்வியணுகாதியான காரியத்ரவியமானது உண்டாகாமல் போகத்தெரியும். ஆகவே பிரளயத்தில் பிரிவுக்கும் நிமித்தம் - எப்படி ஸ்ருஷ்டியில் நிமித்தமின்றி ஸம்யோகம்யேற்படாதோ - அதுபோல - இங்கும் நிமித்தம் தேவைப்படும். நிமித்

தம் எதுவுமில்லாமற் போகவே - ஸம்யோகத்தை உண்டாக்கும் கர்மா ஏற்படுவதற்கிடமில்லாமல் போய்விடும். ஆகவே சேர்க்கையோ (ஸம்யோகமோ) பிரிவோ (விபாகமோ) இரண்டுமில்லாமல் - அவற்றையொட்டி பிரளய ஸ்ருஷ்டிகளும் ஏற்படாமல் - அணுக்களுக்கு ஸம்யோக கர்மாவில்லாதிருப்பதினுல் - பரமாணு காரணவாதம் பொருத்தமல்ல. மேலும் அநவஸ்தாதோஷம் யேற்படும். ஒரு ஸமவாயிகளான காரண காரியத்துடன் இன்னெரு வேறுபட்ட ஸமவாயிமானத்தின் அபேக்ஷைவருவது ஸமமாக ஆவதின்மூலம் - வேறு ஸமவாயத்தை ஒப்புக்கொள்வதால் - ஸமவாய கற்பனைக்கு முடிவில்லாமல் - அநவஸ்தைதோஷம் சம்பவிக்கும். ஸமவாயமானது கார்ய காரணங்களிருப்பதற்கு அவற்றைவிட முற்றிலும் வேருன வேறு ஸமவாயமும் அந்த ஸமவாயத்திற்கு வேறு ஒன்றும்-இவ்விதம் அநவஸ்திதே: என்கிற சூத்திரத்தில் விளக்கப்பட்ட தோஷம் ஏற்படும். ஸாம்யமாகவிருப்பதாலும் - அனவஸ்தை யேற்படுவதாலும்-ஒப்புக்கொள்ளத் தகாது. வேறுவேருன ஸம்பந்தம் இல்லாமற்போனுல் அநவஸ்தை யேற்படாது என்று வாதிப்பாயானுல் - அவ்விதமில்லை என்று பதில் சொல்கிருர்கள் அத்வைதிகள் (தார்க்கிக மதத்தில் - ஸம்யோகிகளாகிற திரவியங்களில் தன்னைவிட வேருக ஸமவாயம் என்கிற சம்பந்தத்தாலே சேர்க்கையை அடைகிறது என்று கூறப்படுகிறது. ஸமவாயமானது ஸமவாயிகளுடன் நித்ய சம்பந்தமாக அறியப்படுவதுபோல - ஸமயோகமும் ஸமயோகிகளுடன் நித்ய சம்பந்தமாக அறியப்படுவதால் ஸம்யோகத்துக்கு மட்டும் ஸமவாயம் என்ற வேறு சம்பந்த கற்பனை செய்வது எவ்விதம் சரியாகும் என்பது பாஷ்யத்தின் கருத்து.) இதனுல் நித்ய ஸம்பந்தமாகவே ஸம்யோசிகளுடனிருப்பதால் ஸம்யோகம் என்ற சம்பந்தம் ஸமவாயம் போலவே வேறு சம்பந்தத்தை-அது அபேக்ஷிக்காது என்கிற காரணமாக அநவஸ்தை யேற்படாது என்கிருர்கள், அதேபோல - ஸம்யோகமானது ஸம்யோகிகளைக் காட்டிலும் வேறு பொருளாகவிருப்பதால் - அது தன்னைவிட வேறு சம்பந்தத்தை அபேக்ஷிக்கின்றது என்ருலே ஸமவாயமும் ஸமவாயிகளைக்காட்டிலும் வேறு பொருளாகவிருப்பதால் - வேருன சம்பந்தத்தை நாடுவது அவசியமாகும். ஸம்யோகமானது ரூபாதிகளைப்போல குணமாகவிருக்

கிறது. அது சம்பந்தத்தை நாடுகிறது என்றால்-வேறு சம்பந்த அபேக்ஷைக்குக் காரணமானது வேறு பதார்த்தமாகவிருப்பது ஸம்மாகவிருப்பதே-அதன் காரணமாகும். மேலும் ஸம்யோகத்தை குணம் என்று எப்படி சொல்லமுடியும்; ஆகவே ஸமவாயத்தை வேறு பதார்த்த மாக ஒப்புகின்றவர்க்கு-அநவஸ்தைதான் தெரியும். இதனால் இரண்டு பரமாணுக்களால் த்வியணுகம் உண்டாவதற்கே இடமில்லாமல் போய்-அந்த பரமாணுகாரண வாதம் சரியில்லை என்பதாகும். மேலும் பிரவிருத்தியோ-நிவிருத்தியோ பாரிமண்டல்யத்தைப்போல காரணமாகாது - என்பது எப்பொழுதும் ஏற்படுவதிலிருந்து பரமாணுகாரணவாதம் பொருந்தாது. அதாவது காரணத்தை முன்னிட்டு-பிரவிருத்தி நிவிருத்தி யேற்படுவதால்-அதிருஷ்டம் முதலிய நிமித்தமானது நித்யமாகவே அருகிலிருப்பதால்-எப்பொழுதுமே பிரவிருத்தி யேற்படவேண்டும். அதிருஷ்டாதரிகள் நிமித்தமாகாது என்று சொன்னாலோ-எப்பொழுதுமே நிவிருத்தி யேற்படணும் ஆகவே பரமாணுகாரணத்வம் சரியில்லை.

இன்னொரு காரணமும் சொல்லப்படுகிறது. ரூபாதிகளுள்ள பொருள் ஸ்தூல்மாகவும்-அநித்யமாக விருப்பதனால்-இந்த பரமாணுக்களும் ரூபம் (ரஸம்கந்தம் ஸ்பர்சம்-ரூபம்) இவைகளை ஒப்புக்கொள்வதால்-அணுத் தன்மைக்கு மாறான தன்மை ஸ்தூலம் - அநித்யம்) யேற்படக்கூடும். இவ்விதம் இன்னும் சில காரணங்களால் இது தள்ளப்படுகிறது. முக்யமாக சிஷ்டர்களால்-வைதிகர்களால் ஒப்புக்கொள்ளப்படுவதில்லை. ஒரு வ்யக்திக்குப் பல ஸ்தானங்கள்-ஸ்தான வேறுபாட்டின் மூலம்-யேற்படுகிறது - பாலன் - பிராதாப மருமகன் இவ்விதமே அறிவு ஸம்யோக ஸமவாயங்களால் அடையப்படுசிறது இந்த ஸம்யோக ஸமவாயங்கள் நித்யம் இவை இயற்கையான சம்பந்தமல்ல, வெளியிலுள்ள ரூபத்தால் யேற்படுகின்றன. ஆகவே அணு, ஆத்மா, மனது - இவை நிரவயவமாக விருப்பதால்-இவைகளுக்கு ஸம்யோகம் ஏற்படாது. அவயவமுள்ள திரவியத்திற்கு அவயவமுள்ள வேறு ஒரு திரவியத்துடன் ஸம்யோகம் ஏற்படுவதாக லோகபிரத்யக்ஷம். நிரவயவமான இரண்டு பரமாணுக்களுடன் ஸாவயவமான த்வியணுகத்திற்கு ஆகாசத்துடன் ஸம்பந்தம் யேற்படமாட்டாது. ஸாரமற்ற தர்க்கங்கள் நிறைந்திருப்பதாலும்-ஈஸ்வரனைக் காரணமாகக்கூறும் சுருதிக்கு விருத்தமாக இருப்பதாலும்-மனு முதலியவர்களால்



ஒப்பப்படாதபடியாக - பரமாணுகாரணவாதம் ஒப்புக்கொள்ளப் படாது. வைசேஷகர்கள் வேதத்தை ஒப்புக்கொள்ளாமல் - கேவலம் அனுமானத்தையே பிரமாணமாகக்கொண்டு சித்தாந்தம் செய்ய வந்தார்கள்.

இதே மாதிரி அனுமானத்தையே கொண்டு சித்தாந்தம் செய்யும் பௌத்தர்களும் - ஸர்வ சூன்யவாதிகளுமாகிறபக்ஷமும் மறுக்கப்படுகிறது. புத்தருக்கு நான்கு சிஷ்யர்கள் - ஸௌத்ராந்தி கன், வைபாஷிகன், யோகாசாரன் - மாத்யாமிகன் - இவர்களில் முதலிருவர்கள் ஸர்வ சூன்யதாலக்ஷணமான தத்வத்தில் ஒருவாறு வெளியிலுள்ள பொருளை ஒப்புக்கொள்கிறவர்கள். அதிகமாக விஷயப்பற்றுள்ளவர்கள். 3-வது - சற்று பரிபக்குவமான சித்த முடையவனுனபடியால்-விக்ஞானம் மட்டுமே நிலைத்துள்ளது என உபதேசிப்பவர்கள். 4-வது ஸர்வ சூன்ய வாதத்தை சித்தாந்தம் செய்பவர்கள்.

முதலாவது - ஸௌத்திராந்திகள் - சரீரத்திற்கு வெளியிலும் உள்ளிலும் - பூதமென்றும், பௌதிகமென்றும், சித்தமென்றும் - சைத்திகமென்றுமான வஸ்துக்கள் பிருத்வி தாது-அப்பு - தேஜஸ் வாயு நான்கும் பூதவஸ்து (தாது); கந்தம்ரஸம் ரூபம் ஸ்பரிசம் முதலிய விஷயங்களும் க்ராணம ஜிஹ்வாசக்ஷுஸ் த்வக் முதலிய இந்திரியங்களும் பௌதிகங்கள், அவரவர்க்குத் தோன்றக்கூடிய ஞானதாரையின் வடிவம் - ஆலய விக்ஞானம் எனப்படும் சித்தம். இதைவிட வேறுன சுகதுக்காதி சைத்திகம் எனப்படும் (இவை களின் பிரிவுகளை பாஷ்ய விரிவுரையில் காணவும்) ஸங்காதம் - பூதபரமாணுக்களின் கூட்டம் (சேர்க்கை) போக்ய ஸங்காதம் - அதுபோல போக்த்ரு ஸங்காதமும் உண்டு.

பரமாணுக்களையும் ரூபவேதன-விக்ஞான ஸம்க்ஞா - ஸம்ஸ் காரம் என்ற பஞ்ச ஸ்கந்தங்களை (ஸமுதாயங்களை)க் காரணமாக வுடைய ஸமுதாயத்தின் (கூட்டம்) அஸித்தியானது (உண்டா கானமயானது) வரத்தெரியும் (சேர்த்து வைக்கும் சேதனன் ஒருவன் இல்லாமையால்-கூட்டத்தில் சேர்ந்துள்ளவை அசேதன மாக விருப்தால் - முற்கூறிய சேர்க்கை (ஸங்காதம்) ஏற்படாது. நிலைத்தசேதனன் இல்லையாதலால்-அவைஸ்வயம் அசேதனங்களாக

விருப்பதால்-பஞ்ச ஸ்கந்தங்களுடையவோ - பரமாணுக்களுடையவோ-ஸமுதாயம் ஏற்படுவதாகச் சொல்வது பொருந்தாது-என்பது சித்தாந்தம். (பௌத்தர்களில் பிரிவு - சிலர் ஸர்வத்தையும் இருப்பதாக ஒப்புக்கொள்கின்றனர். சிலர் விக்ஞானமட்டுமே இருக்கிறது என்கிறார்கள்-சிலர் எதுவுமே இல்லையென்றும், இவ்விதமாக மூன்றுவிதம் - அவற்றுள் - ஸர்வத்தையும் ஒப்புக்கொள்கிறவர்களுக்கு சரீரத்திற்கு வெளியிலும் உள்ளும் பூதம் என்றும் பௌதிகமென்றும்-சித்தம் சைத்தம் என்றும் ஒப்புக்கொள்ளுகிறவர்களுக்கும் அவர்களுக்கு முதலில் பதில் இங்கு அளிக்கப்படுகிறது.)

பௌத்தரால் ஒப்பப்படுவது பரமாணுவைக் காரணமாகக் கொண்ட பூத பௌதிக ஸங்காத ரூபமானதும் - ஸ்கந்தங்களைக் காரணமாகக் கொண்ட பஞ்சஸ்கந்தீ ரூபமானதுமான உபயஹேது சமுதாயம் ஒப்புக்கொள்ளப்பட்டாலும் - ஸமுதாயத்தின் அப்ராப்தி வருகிறது. ஸமுதாய நிலையேற்படுவதில்லை ஏனெனில் ஸமுதாயிகள் அசேதனமாகவிருப்பதால் சித்ததமெனப் பெரிய விக்ஞானமானது சமுதாயம் ஏற்பட்ட பிறகு - ஏற்படவேண்டிய ஸமுதாயத்தையோ - ஸமுதாயிகளையோ (அவயவங்களையோ) விட வேறுபட்ட சேதனை போக்தாவையோ நியந்தாவையோ - நிலைத்து நின்று சேர்த்துவைக்கக் கூடியவனாக ஒப்பாதிருப்பதே காரணமாகும் ஞானத்தையும் - மற்றையதும் க்ஷணிகமென்று ஒப்பியிருப்பதால் (எந்த க்ஷணத்தில் உண்டாகிறதோ - அதே க்ஷணத்தில் அழிகிறது) - உற்பத்தியையும் நாசத்தையும் தவிர்த்து வேறு எந்தவிதமான வேலையும் இருக்கமுடியாகையால்-பரமாணு முதலியவத்றைச் சேர்த்துவைப்பதற்க்குரிய பிரவிருத்தி ஏற்படுவதற்கில்லை. ஆகவே ஸமுதாயம் ஏற்படமாட்டாது. ஸமுதாயம் ஏற்படாமல் போகவே, ஸமுதாயத்தை ஆஸ்ரயித்த லோகயாத்திரையானது இல்லாமல் போகவேண்டிவரும் (பொதுவாக-காரண காரிய பாவத்துடன் ஏற்படும் ஸங்காதத்திற்கு - சேர்த்துவைக்கும் சேதனனை அது அபேக்ஷிப்பதில்லை. ஆகவே முந்தின ஸங்காதத்தை ஆஸ்ரயித்த அவித்யை முதலியவை - பின்னால் உண்டாகும் ஸங்காதத்துக்குப் பிரேரகங்களாக ஆகலாம் - ஒன்றையொன்று ஆஸ்ரயித்தல் என்கிற தோஷம் ஸம்பவிக்க இடமில்லை - என்பது பூர்வபக்ஷம்-ஆனால் பதில்-எல்லாம் க்ஷணிகம் என்பதால்-நிலைத்த

ஸங்காத ஒருபொழுதும் ஸித்திக்கமாட்டாது. போக்தாவொருவன் இல்லாததே அதன் காரணமாகும் என்பது சூத்திரகாரரின் கருத்து. சுகதுக்கானுபவத்துக்குவேண்டி ஸங்காதமாவது - ஏற்பட வேண்டும். புருஷன் போககாலம் - மோக்ஷகாலம் இரண்டிலும் இருக்கவேண்டியவனுகிருன். அதனுல் எதையும் வேண்டி முயற்சியோ-பிருர்த்திக்க வேண்டியதோ ஆகாது) க்ஷணிகம் என்பதால் காரணகாரிய பாவம் (க்ஷணிகப்பொருள்களுக்கு) யேற்படாது. ஆகவே காரியத்துக்கு முந்தின க்ஷணத்தில் இருத்தலே காரணத்வம் எனப்படும். எந்த வஸ்துவுக்கும் இரண்டு க்ஷண சம்பந்தமில்லை-என்பதால்-உலகில் எந்த வஸ்துவும் முதலிலிருந்து பின்னர் வேலையை அடைந்து - காரியத்தைச் செய்வதைக் காண்கிருேம். அவ்விதமாயின் காரண வஸ்து ஸ்திரமாகிவிடும். இதை ஒப்புக் கொள்ளாத போனுல்-லோகானுபவத்திற்கு விரோதம் ஏற்படும்) க்ஷிணிகப்பொருளுக்கு காரணத்வம் பொருந்தாது.

மேலும் உற்பத்தி - நாசம் என்பது வஸ்துவின் ஸ்வரூபமா-அல்லது அவஸ்தையா ? இருவிதமும் பொருந்தாது. ஆதி அந்தம் நடு என்கிற மூன்று க்ஷணங்களின் ஸம்பந்தம் சொல்லவேண்டியிருப்பதால் - எல்லாம் க்ஷணிகம் என்கிற சித்தாந்தத்திற்கு ஹானிவரும். இல்லாதபோனுல் வஸ்து நித்யம் என்ருகிவிடும். வஸ்துவின் தர்சனம் (காணுதல்) உற்பத்தி அதர்சனம் (காணுமல் போவது) இவை பார்க்கிறவனின் தர்மங்கள், வஸ்துவின் தர்மங்களாகாது. ஆகவே வஸ்து நித்யம் என்று ஏற்பட்டுவிடும். ஆகவே பெளத்த பக்ஷம் அஸங்கதமாகும்.

பெளத்தர்களின் பக்ஷத்தில் - ஆலய விக்ஞானத்திஞல் அறியக்கூடியது மூன்று வஸ்துக்களே - பிரதி ஸங்க்யா நிரோதம் அப்ரதி ஸமஞ்ச்யா நிரோதம் - ஆகாசம் என்று மூன்றும் - இவைகளைக்காட்டிலும் வேறுபட்டதுமான பாவமானது க்ஷணிகம் (ஒரு க்ஷணிகமாத்திர மிருப்பதாகச்) சொல்கிருர்கள். அவற்றுள் பிரதிஸங்க்யா - ப்ரதி பாவத்துக்கு நேர் எதிரிடையான ஸங்கயா புத்தியானது பிரதிஸங்க்யா எனப்படும். அத்தகைய புத்தியினுல் யேற்படும் நிரோதமானது (மறைவு) பிரதி ஸங்க்யா நிரோதம் என்ப்படும், அதாவது ஸத்தான - இருக்கின்ற இப்பொருளை,

அஸத்தாக (இல்லாததாகச் செய்கின்றேன்) என்பதை உண்டாக்கும் புத்தியாதுண்டோ - அதுவே ப்ரதி ஸங்க்யா நிரோதம் என்பதாம். ஒவ்வொரு க்ஷணத்திலும் யுக்தியினால் ஸாதிக்கப்படுகிறதும் - மந்த புத்திகளால் அறிய முடியாததும் சூக்ஷ்மமான குடம் முதலியவற்றின் நாசமானது அப்ரதி ஸங்க்யா நிரோதம் எனப்படும். ஆவரணம் - மறைவு இன்மை ஆகாசம் எனப்படும். ஆகவே இவற்றின் வாயிலாக எல்லா வஸ்துக்களும் நாசமடைகின்றன என்று அவர்கள் சொல்லுகின்றனர்.

இவ்விதம் ஸர்வ நாசம் சம்பவிக்கமுடியாது என்பது - (ஸூ) ப்ரதி ஸங்க்யா அப்ரதி ஸங்க்யா நிரோதா ப்ராப்த்தி: அவிச்சேதாத் - என்கிற சூத்திரத்தில் சொல்லப்படுகிறது. (ஞானபூர்வமாக பதார்த்த நாசமும் அக்ஞான பூர்வக பதார்த்த நாசமும் வரமாட்டாது. பதார்த்தங்களின் காரண காரிய ரூபமான பிரவாஹம் (தொடர்பு) ஸந்தானம் - என்பதற்கு விச்சேதமில்லாமையே அதன் காரணமாகும். இதில் - பிரதி ஸங்க்யா நிரோதம் என்பதும் அப்ரதி ஸங்க்யா நிரோதம் இவைகளை மறுத்து - பிரதி ஸங்க்யா அப்ரதி ஸங்க்யா இரண்டுக்கும் அப்ராப்தி (அஸம்பவம்) என்கிறார் - யேற்படாது - அதற்குக் காரணம் விச்சேதமின்மையே காரணமாகும் இவை ஸந்தானத்தை - காரண காரிய ரூபமான பிரவாஹம் (தொடர்பு) ஸந்தானம் எனப்படும் - விஷயமாக உடையதா? பாவத்தை (ஸந்தானியான க்ஷணத்தை) விஷயமாக உடையனவா என்று கேட்டால் - ஸந்தானத்தை விஷயமாகக் கொண்டதாகவோ ஆகாது, இதற்குக் காரணம் - இடையறாத காரண காரியபாவம் இருப்பதால் - ஸந்தானத்துக்கு விச்சேதம் ஸம்பவிக்க முடியாது. பாவத்தை (ஸந்தானியான க்ஷணத்தை) விஷயமாகக் கொண்டதாகவுமாவதற்கில்லை. பாவங்களுக்கு (ஸந்தானியான க்ஷணத்தை) தொடர்பற்றதும் - ஸ்வரூபமற்றதுமான விநாசமானது ஸம்பவிக்க முடியாததாக விருப்பதே அதன் காரணமாகும், எல்லா அவஸ்தைகளிலும் அதுதான் இது-என்கிற ஐக்ய ஞானத்தின் பலுக்கொண்டு - ஆதாரத்தினால் அன்வயிக்கு (தொடர்புள்ள பொருளுக்கு) விட்டுப் பிரியாமை காணவும் படுகிறது. ஆகவே பௌத்தன் கல்பிக்கும் இரண்டுவித நிரோதத்துக்கு பொருத்தமில்லை. உதாரணமாக - காய்ச்சின இரும்பில்

விழுந்த ஜலபிந்து வுக்கு-அதுதான் இது-என்று ஐக்யஞானத்தினல் அறியக்கூடிய அவ்யயியான ரூபமானது காணப்படவில்லையாத லால்-வஸ்துவுக்கு தொடர்பில்லாத நாசத்தை ஒப்புக் கொள் கிறார்கள். இதற்கு நாம் ஆக்ஷேபம் சொல்வது-இந்த விடத்திலும் கூட காய்ச்சின இரும்பில் விழுந்த அந்த ஜலபிந்து-தேஜஸ்ஸினல் மேகமாக்கவேண்டி, சூர்ய மண்டலத்தை நோக்கிக்கொண்டு போகப்படுகிறது என்று தெளிவதாம்.

ஆகாசே சாவிசேஷாத் என்கிற சூத்திரத்தால் மூன்றுவ தான ஆசாசத்திற்கும் ஸ்வரூபமற்றிருத்தல் (நாசம்) சம்ப விக்காது. ஏனெனில் - முன் இரண்டைப்போல - ஆகாசத்திலும் வஸ்துத்தன்மை பொதுவாக விருப்பதே அதன் காரணமாகும். ஸ்வரூபமற்றிருத்தல் (நிருபாக்யத்வம்) பொருந்தாது. ஏனெனில் ஆகாசத்துக்கும் வஸ்துவாகவிக்கும் தன்மை ஸமானமாகக் காணப்படுவதே அதன் காரணமாகும். ''ஆத்மாவினிடமிருந்து ஆகாசம் உண்டாயிறறு'' என்று ஸ்ருதி சொல்வதால் - சுருதி மூலம் ஆகாசத்துக்கு வஸ்துத் தன்மை பிரஸித்தம் (சப்த மானது ஒரு வஸ்துவை ஆஸ்ரயித்துள்ளது. குணமாக விருப்ப தால் மணம், ருசிபோல அனுமான பிரமாணத்தினல் ஆகா சத்துக்கு வஸ்துத்தன்மை ஸித்திக்கிறது என்று கருத்து. வஸ்து வாக வில்லாதவற்றிற்கு நித்யத்வமோ— அநித்யத்வாமோ ஏற்படாது. (நித்யத்வம் என்பது ஒரு தர்மம். அதை எதினிட மிருக்குமோ அதை நாம் தர்மி என்கிறோம். ஆகவே நித்யத்வ மாகிற தர்மத்துக்கு ஆஸ்ரயமாக ஆவதுபற்றி ஆகாசமும் வஸ்துவாகவே ஆகவேண்டும் என்பது கருத்து) மேலும் இன்னொரு காரணமும் - ஆத்மாவைக்ஷணிகனுகச் சொல்வது பொருந்தாது - (அனுஸ்மிருதேஸ்ச) எல்லாம் க்ஷணிகம் என்று சொல்வதால் ஆத்மாவுக்குப் (உபலப்தாவாகிற - ஸாக்ஷியான ஆத்மாவுக்கு) க்ஷணிகத்வம் ஒப்புக்கொள்ளவேண்டும். இது ஆத்மாவிற்கு யேற்படாது அனுஸ்மிருதி யிருப்பதே அதன் காரணமாகும். அனுபவத்தை (உபலப்த்யை) (தோற்றத்தை) அனு - ஒட்டிய உண்டாகும் ஸ்மரணமே (நினேவே) அனுஸ் மிருதியாகும். உதாரணமாகப் எந்த நான் அதை முன்னமே பார்த்தேனே - அந்த நானே இப்போது - அதை நினேக்கிறேன்

என்கிற ஐக்யஞானம் உண்டாவது ஸஹஜம். இதனால் முன்
யேற்பட்ட தர்சனத்தை மறுத்துக் கூறுபவன் - யாவரும் இருக்க
முடியாது. சூடான அக்னிக்கு சூடில்லை என்று சொல்ல
முடியாதது போல அவ்விதமே இங்கும் இதேமாதிரி ஒரு
பொருள் இன்னொன்றைப் போல ஸாத்ருசமாகவிருக்கிறது என்ப
தில் இருபொருள் இரண்டு க்ஷணங்களிலுமிருக்க வேண்டியது
என்பதால் எதையும் க்ஷணிகம் என்பது தவறாகும்.

மேலும் அபாவத்தினின்று ந அஸத பாவோத் பத்தே:-
பாவவஸ்துவின் உற்பத்தியானது அதிருஷ்டத்வாத் - காணப்
படாததைக் கொண்டு - பௌத்தம் சரியாகாது. விதை
முதலிய காரணவிசேஷத்தை ஒப்புவது பயனற்றதாகும்,
முயற்கொம்பு - போன்றதிலிருந்து ஏதாவது (முளை) உண்டாக
வேண்டிவரும். தங்கத்திலிருந்து நகை உற்பத்தியாகிறது -
ஆகவே அபாவத்திலிருந்து பாவவஸ்து உண்டாகிறது என்கிற
வாதம் சரியில்லை. ஆலம்பன ப்ரத்யயம் ஸமநந்த ப்ரத்யயம்,
அதிபதி ப்ரத்யயம், ஆலோகாதிகள் - இந்த நான்கினால் சித்த
சைத்தங்கள் உண்டாகின்றன என்றும் - பரமாணுக் களினின்றும்
பூதபௌதிக ரூபங்களான ஸமுதாயம் உண்டாகிறது என்று
முதலில் சித்தாந்தம் செய்து - பிறகு அபாவத்தினின்றும்
பாவம் உற்பத்தியாகிறது என்று சொல்வது-முதல் கொள்கையை
மறைப்பது - பௌத்தர்களால் இவ்விதம் சொல்லப்படுவது -
ஒரு ஏமாற்றம்தான். அவ்விதமாயின் இஷ்டாபதார்த்தஸித்தி
முயற்சியின்றி கிடைக்கும் என்பது அனுபவத்துக்கு விரோதம்.
ஏனெனில் அபாவம் சுலபமாகவிருப்பதே - துணி நெய்பவனுக்கும்
நூல் நெய்யாமலே துணி உற்பத்தியாகிவிடும்! ஒருவனும்
வஸ்துவுக்காக ஆசையோ முயற்சியோ செய்யமாட்டான்.
ஆகவே பௌத்தம் - தோஷமுள்ளது சுருதி பிரமாண விரோதம்
- மேலும் அவித்யைபோன பிறகு நித்யவத்வத்திற்காக போக
மோக்ஷங்களில் புருஷப்ரவிருத்தியேற்படலாம் - என்று அவர்கள்
சொல்வது பொருந்தாது.

யோகாசாரனுடைய மதமாகிற சரீரத்துக்கு வெளியில்
பதார்த்தமே உண்மையில்லை என்பதும் தவறு - என்று நாபாவ
உபலப்த்தே: என்பதில் கூறப்படுகிறது. வெளியிலுள்ள

பதார்த்தத்துக்கு அபாவமானது நிச்சயிக்கமுடியாது - ஏனெனில்- ஒவ்வொரு அறிவிலும் வெளியிலுள்ள பொருள் தோற்றத்தை யடைவதே அதன் காரணமாகும். வெளிப் பொருள் விக்ஞான ஸ்கந்தம் (ஞானதாரை மட்டும்) என்பது பொருந்துமா - அல்லது பொருந்தாதா? என்பது சந்தேகம். ஸ்வப்ன திருஷ் டாந்தமிருப்பதால் புத்தியிலுலே வ்யவஹரிக்கப்படுவதாலுமே அதுபொருந்தும் என்பது பூர்வபக்ஷம். பாஹ்யமான பொரு ளுக்குப்பாதம் இல்லாதபடியால் ஸ்வப்நவைஷம்யம் (மாறுபாடு) காணப்படுகிறது. ஆகவே விக்ஞானம் அர்த்தரூபத்தை யடைந்த தாக ஆகாது என்பது சித்தாந்தம்,

(வெளியிலிருக்கும் பொருளையிருப்பதாக ஒப்பும் மதத்தை ஆஸ்ரயித்து ஸமுதாயம் யேற்படமாட்டாது என்கிற தூஷணம் சொல்லப்பட்டதும், விக்ஞானவாதியான பௌத்தன் ஆக்ஷேபிக் கிறான். சில வஸ்துக்களில் சிலருக்கு பற்றிருப்பதையறிந்து - அதனுல் பாஹ்யார்த்தவாதமுறை ஏற்பட்டதே ஒழிய - புத்த பெருமானுடைய கருத்து இதுவல்ல - அவருக்கு விக்ஞான ஸ்கந்தவாதம் (ஞானதாரை மட்டும்) மட்டில்தான் கருத்து. அதில் - புத்தியில் ஆருடமான ரூபத்தால் பிரமாணம் (அறிவுக் கருவி) ப்ரமேய (அறியப்படும் பொருள்) பலம் (அறிவு) என்ற வியவஹாரமானது உள்ளிலேயே யிருப்பதாக யேற்படுவதால் எல்லாம் பொருத்தமே ஆகின்றது. வெளியில் பதார்த்த மிருந்திடினும் புத்தியில் சம்பந்தத்தை யடையாமல் (முற்கூறிய) பிரமாணுதி வியவஹாரம் உண்டாவதற்கிடமில்லை. விக்ஞா னத்தை விடவேறு பதார்த்தம் என்பது கிடையாது. ஏனெனில் வெளிப்பொருள்கள் விஷயமாக மாட்டா. க்ஷணிக மான ஞானத்துக்கு பொருளுடன் சம்பந்தம் யேற்படுவதற் குரிய காரணம் ஒன்றும் இல்லாதபடியால் - கிராஹ்யகிராஹக பாவம் இல்லை என்பதாம் அனுதிவாஸனையால் விக்ஞானங் களுக்கும் காரணகாரிய பாவமும் அதனுல் ஞானவைசித்ரியம் (வேறுபாடு) உண்டாவது என அறியத்தக்கது. ஆகவே பாஹ்யமான பொருள் இல்லை என்கிறுன். இதற்கு சித்தாந்தம் நாபாவ உபலப்தே: உபலப்தியால் (தோற்றம் ஏற்படுவதால்) ஒவ்வொரு அறிவுதோறும் - பலபொருள்கள் (குடம் - படம்)

தோற்றம் வெளியில் இருப்பதாக தெரியப்படுவதால் - இவை களும் அபாவம் (இல்லாமை) என்பதில்லை. இந்திரிய சம்பந் தத்தால் வெளிப்பொருள்களை அறியும்போது. விஷயங்கள் இல்லை என்று சாதிப்பது தவறு, மேலும் அறிவைவிட வேருகப் பொருளை ஒப்பவேண்டும். அறிவுக்கு விஷயம் தேவை, வெளியில் போல - என்று போல சப்தத்தை உபயோகிக்கின்றனர். பாஹ்யபொருள் இல்லாத பக்ஷத்தில் எதற்கு வெளியில்போல என்று சொல்லவேண்டும்.)

ஆகவே விக்ஞானம் — தீபத்தைப்போல - தன்னைவிட வேறொன்றினுல் அறியப்படுவதாகிறது என்று வேதாந்திகள் கருதுகின்றனர். வெளிப்பொருள்களாலே ஞானம் உண்டாகிறது. மேலும் பாஹ்யார்த்தவர்தம் விக்ஞானவாதம் சூனியவாதம் இவை ஒன்றுக்கொன்று முரண்பட்டதாக விருக்கின்றது. ஆகவே பௌத்தமதம் ஒப்புக் கொள்ளத்தக்கதல்ல.

இதே நயாயங்களால் ஜைனமதமும் மறுக்கப்படுகிறது. இவர் மதத்தில் அறிவு உருவமாக ஜீவனும் - ஜடஉருவமான அஜீவனும் எனச் சொல்லப்பட்டிருக்கின்றன. இந்த இரண்டுக் குமே ஐந்து அஸ்திகாயங்கள் என்றதால் வேறு ஐந்து பிரகாரத்தை உபதேசிக்கின்றன. ஜீவாஸ்திகாயம், புத்கலாஸ் திகாயம், தர்மாஸ்திகாயம் அதர்மாஸ்திகாயம் ஆகாசாஸ்திகாயம் என்று ஐந்து பிரிவுகள், அஸதிகாயம் — பொருளுக்கு இடுகுறி யாகும். பக்தன் முக்தன் நித்யஸித்தன் என ஜீவாஸ்திகாயம் மூன்று விதம். புத்கலாஸ்திகாயம் - பூமி ஜலம் நெருப்பு வாயு ஆக 4 பூதங்களும் - அசையும் பொருள் " அசையாப் பொருள் ஆக ஆறுமாம். தர்மாஸ்திகாயம் — பிரவிருத்தியிலிருந்து அறியவேண்டியது. அதர்மாஸ்திகாயம் - பிருவிருத்தியின்மையி லிருந்து அறியவேண்டியது. ஆகாசாஸ்திகாயம் லோகா காசம் - அலோசாகாசம் - என இரண்டு பிரிவுகள்., ஸம்சாரிகம் லோகாகாசம் - மோக்ஷஸ்தானம் அலோகாசம்.

இவர்கள் ஸப்தபங்கீ நயம் (நியாயம்)-என்கிற நியாயத்தைச் சொல்கிருர்கள் அஸ்தித்வம் (இருக்கும் தன்மை) நாஸ்தித்வம் (இல்லாததன்மை) என்று ஒன்றெக்கொன்று முரண்படும்

தர்மங்களை வைத்துக்கொண்டு — ஒவ்வொரு பொருளிலும் அஸ்தித்வம் நாஸ்தித்வம் என்று இருகர்மங்களின் சேர்க்கையைச் சொல்லுவது - ஒவ்வொரு வஸ்துவுக்கும் அநேகரூபமாக விருக்கும் தன்மை ஒப்பவேண்டியதாக விருக்கிறது. ஆதலால் ஸப்த பங்கிநயம் அவர்களால் கற்பிக்கப்படுகிறது. 1) ஸ்யாத் அஸ்தி 2) ஸ்யாத் நாஸ்தி 3) ஸ்யாத் அஸ்திச நாஸ்திச 4) ஸ்யாத் அவ்யக்தவ்ய: 5) ஸ்யாத் அஸ்திச அவ்யக்தவஸ்ச 6) ஸ்யாத் நாஸ்திச அவ்யக்தாஸ்ச 7) ஸ்யாத் அஸ்திச நாஸ்திச அவ்யக் தவ்யஸ்ச என 7 விதங்களாகும் இம்முறைப்படி ஏகத்வம் — அநேகத்வம் என்று இரண்டையும் எடுத்துக்கொண்டு - அதில் ஸப்தபங்கீ நயத்தை பொருத்திவிகல்பம் செய்யவேண்டும். இதனால் எதுவும் அநிஸ்சிதமாகவே யுள்ளது என்று ஏற்படுவ தால் பிரும்மம் ஏகரூபமானது என்ற பிரும்ம வாதத்திற்கு பாதமானது யேற்படுகிறது.

ஒரு பதார்த்தத்துக்கு இருக்கும் தன்மை (ஸ்யாத்) இல்லாமை (அஸ்யாத்) ஏற்படுமா? முதலிய தர்மங்கள் ஸித்தி யுண்டாகுமா அல்லது இல்லையா - சந்தேகம். பூர்வபக்ஷம் - அவற்றை ஸித்திப்பதில் ஆச்சரியமில்லை என்பதாம். ஒரே பொருளில் ஸத்வம் அஸத்வம் முதலிய விருத்த தர்மங்கள் என்று கூறப்படுவதால் - ஸப்தபங்கிநியாயம் யுக்திக்கு விரோதம். அத்துடன் ஜீவனுக்கு அப் சத்துடன் கூடியிருத்தலைச் சொல்வதும் பொருந்தாது - என்பது சித்தாந்தம். ஒரே தர்மியினிடம் ஒரே சமயத்தில் விருத்த தர்மங்கள் இருக்கமுடியாது (உஷ்ணம் சீதளம்போல) இவ்விதம் இரண்டு தர்மங்களால் நிர்ணய மாகாத ஞானம் - ஸம்சயஞானம்போல பிரமாண்ய மற்றதாகி விடும். இதேமாதிரி அவக்தவ்யத்வம் (சொல்லத்தகாதிருக்கும் தன்மை) சம்பவிக்கமுடியாது. அவ்விதமே நிச்சயத்தின் பலனை ஸம்யக்தரிசனமும் இருக்கலாம். இல்லாமலுமிருக்கலாம். இதே மாதிரி பாவம் (இருப்பு) அபாவம் (இல்லாமை) நித்யத்தன்மை - அநித்யத்தன்மை என்பது சரியாக நிர்த்தாரணம் செய்யப்பட மாட்டாது.

இதேமாதிரி - ஆத்மாவுக்கு (ஜீவனுக்கு) பூர்ணமாகவில்லா திருத்தல் என்று வேறு தோஷமும் ப்ரஸக்தமாகிறது. அந்தந்த

சரீர பரிமாணம் (அளவு) உள்ளவன் ஜீவன் என்று ஜைனர் கூறுகின்றனர். இதனுல் ஆத்மாவுக்கு பரிச்சின்னன் என்றும் - குடம் முதலியவற்றைப்போல - அநித்யத்வமும் யேற்படும். ஒரு ஜீவன் மனுஷ்ய சரீரத்தில் பரிமாணமுள்ளவனுக - யானையின் சரீரத்தின் முழுதேகத்திலும் நிறைந்திருக்க முடியாதவனுவான். பூச்சியின் சரீரத்தை அடையுங்கால் முழுபாகத்தாலும் அடங்க மாட்டான். இவ்விதம் சரீரத்திற்குத் தகுந்தாற்போல ஜீவனின் பரிமாண முள்ளதாக வேணுமானுல் - அவனுடைய அவயவங்களுக்கு ஆனந்தியமானது (அளவு கடந்திருத்தல்) ஊஹிக்க முடியாது. அதேமாதிரி அவர்களால் சொல்லப்படும் சில அவயவங்களின் வருகை - விலகுதல் ஒப்புக் கொள்ளமுடியாதவை மொத்தத்தில் ஜீவன் அணுவாகவோ - மஹானுகவோ ஒப்ப வேண்டுமேயல்லாது சரீர பரிமாணமுள்ளவனுக ஒப்பவேண்டியவனுகான். இதனுல் ஜைனமதம் அஸங்கதம் (யுக்திக்குப் பொருந்தாது).

பாசுபதாதிகரணத்தில் — ஈஸ்வரன் ஜகத்துக்கு குயவன் போன்று நிமித்தகாரணமாக ஆவார். உபாதான காரணமாக ஆகார். இதுவும் மறுக்கப்பட்டுத்தள்ளப்படுகிறது. ஈஸ்வரனை நிமித்தகாரணமாகச் சொல்லும் மதம் எது எது உண்டோ அதை மறுக்கப்பட்டதாகும். வைஷம்யம் நைர்க்குணய தோஷங்கள் வரக்கூடியதால் — அது தள்ளப்படவேண்டியதே. வேதபிரதிபாத்யனுன ஈஸ்வரன் நிமித்த உப-தான காரணமாவான் - சுருதிக்கு முறண்படுவதால் - இது பொருத்தமாகாது என்பது ஸித்தாந்தம்- நிமித்த மாத்திரமல்ல உப-பாதாதானமும் கூட (அதாவது ஈஸ்வரன் கேவலம் அதிஷ்டாதாவாக (நியந்தாவாக) மட்டுமே ஆவர் — என்பது மறுக்கப்படுகிறது. 1-வது அத்யாயம் - 4 - சூத் 23 - 24ல் ஈஸ்வரன் இருகாரணங்களாவார் என்று சொல்லியிருப்பதாலே. தாழ்ந்தவன் — நடுத்தரம் — உயர்ந்தவன் இத்தகைய முறைகளால் பிராணிகளை ஸ்ருஷ்டிக்கிற ஈஸ்வரனுக்கு ராகம் த்வேஷம் வருமாதலால் - ஆதலால் அநீஸ்வரத்வம் (ஜீவத்வம்) யேற்படும். ஈஸ்வரனுக்கு ஸ்ருஷ்டி ஸ்வ பிரயோசனமிருப்பதாக - யேற்படுவதால் — ஈஸ்வரனைப் புருஷ விசேஷனுக ஒப்பியிருப்பதாலும் — புருஷனை உதாஸீனனுக

(பற்றில்லாதவனுக) ஒப்பியிருப்பதாலும் அவனுக்கு பிரவர்த்த கத்வம் அஸமஞ்சஸம் (பொருத்தமில்லாது).

இன்னொரு காரணம் ஈஸ்வரன், புருஷன் பிரதானம் இவை களுக்கு மேலானவர். இவர்கள்எங்குமிருப்பதால் நிரவயவம்-ஸமவாய சம்பந்தம் யேற்படாது. இதனால் ஸர்வக்ஞன் ஈஸ்வரன் என்ற கொள்கைக்கு விரோதம் யேற்படும். ஆகவே ஒப்புக்-கொள்ளப்படமாட்டாது.

பாஞ்சராத்ரத்தில் - உத்பத்தி அஸம்பவாத் - என்பதால் - வாசு தேவ ஸம்ஞ்க பரமாத்மாவினிடமிருந்து — ஸங்கர்ஷணர் என்று சொல்லும்படியான ஜீவனுக்கு உத்பத்தி அஸம்பவமாக விருக்கிறது. நாராயணவ்யூஹம் — அவரது ஸமாராதனம் போன்று பொருந்தலாம் - பூர்வபக்ஷம். ஜீவோத்பத்தி மட்டும் பொருந்தாது - (மற்றது பொருந்தும் என்பதாம்) உண்டாகிற பொருளுக்கு அழிவிருக்குமாதலால் செய்யப்பட்ட புண்ய பாபங்களுக்குப் பயனில்லாமை முதலிய தோஷங்கள் வரத் தெரியும் என்பது சித்தாந்தம் (இதில் உபாதானமாகவும் - அதிஷ்டாதாவாகவும் ஈஸ்வரன் இருவிதகாரணமாக ஆவதாக யாது மதமோ உள்தோ அவரது மதம் மறுக்கப்படுகிறது).

ஸ்ருதியைப் பிரமாணமாகவைத்து ஈஸ்வரன் உபதான நிமித்தகாரணமாகும் என்று சொல்லப்பட்டது. அதாவது, வாசுதேவர் என்கிற ஒரு பகவானே நிர்துஷடக் ஞான ஸ்வரூபர் - அவரே உண்மையான தத்வமாவர். அவர் வாசுதேவ வ்யூஹருபத்தாலும் - ஸங்கர்ஷண வ்யூஹருபத்தாலும்-பிரத்யும்ன வ்யூஹ ருபத்தாலும் அநிருத்த வ்யூஹ ருபத்தாலும் தமது ஸ்வருபத்தைப் பிரித்துக் கொண்டிருக்கிறார். வாசுதேவர் என்பவர் பரமாத்மா. ஸங்கர்ஷணர் ஜீவனவர். பிரத்யும்னன் மனமாகவும் அநிருத்தன் அஹங்காரமாகும். வாசுதேவர் - மூலகாரணமாயும் - ஸங்கர்ஷணாதி மற்றவர் கார்யமாவர். இந்த வாசுதேவரை அபிகமனம் உபாதானம் இஜ்யா ஸ்வாத்யாயம் யோகம் இவற்றால் நூறு ஆண்டுகள் பூஜித்துத்தேய்ந்த க்லேசங்கள் (அவித்யாதிகள்) நாசமடைந்து) பகவானை யடைகிறான் என்பதாம். நாராயணன்



ஒருவர் - அவர் (பலவாகவும்) - மூன்றாகவும் ஆகிறார் - என்கிற சுருதிகளில் பலவிதமாக விருக்கும் தன்மை அறியப்படுவது அதன் காரணமாகும். ஆராதனம் மறுக்கப்படவில்லை - ஸமிருதி ஸ்ருதி களில் சொல்லியிருக்கிறபடியால். வாசுதேவனிடமிருந்து ஸங்கர்ஷணனும் ஸங்கர்ஷணனிடமிருந்து பிரத்யும்னனும் பிரத்யும்னனிவிருந்து அநிருத்தன் உண்டாவது என்கிற எது சொல்லப்பட்டதோ அது மறுக்கப்படுகிறது. ஸங்கர்ஷணன் எனப்பெயரிய ஜீவனின் உற்பத்தி சம்பவிக்க முடியாது. ஏனெனின் அநித்யத்வம்-உற்பத்தியான ஜீவனுக்கு - யேற்படும். அநித்யனான ஜீவனுக்கு பகவத் பிராப்திரூப மோக்ஷம் வராமற்போகத் தெரியும். கார்யப் பொருளுக்கு காரணப் பொருளை யடைதல் பிராப்தமாகும் போது ஸ்வரூபநாசம் வரக்கூடியதால் இந்த கற்பனை பொருத்தமாகாது (பிரும்ப சூத்ர 2 3 17) நாத்மா அருதே : நித்யத்வாத் சதாப்ய:— என்பதில் ஜீவனது உற்பத்தியை மறுக்கப்போகிறார். மேலும் இது பற்றி ஸ்ருதியையும் காணப்படவில்லை. ஸங்கர்ஷணாதிகளுக்கு ஞானபலம் ஐஸ்வரியாதி இருந்தபோதிலும் - ஈஸ்வரர்கள் என்று எண்ணப்பட்டாலும் - அவித்யை யில்லாதவர்களாகவும் இருப்பதால் - உத்பத்தி என்பது ஸம்பவிக்காது. எல்லா வ்யூஹங்களும் உயர்வு தாழ்வு யற்றதும் வேற்றுமை ஒன்றும் ஒப்பப்படவில்லை! வேற்றுமையற்ற வாசுதேவர்கள. வ்யூஹம் என்பது படைப்பு முழுவதும் ஆபிரும்ம ஸ்தம்பாதிவரை - என அர்த்தம். சாண்டில்யர் இதன் பெருமை கண்டார். பாஞ்சராத்திர ஒரு எழுத்தை அறிந்தவன் - அத்யயனம் செய்தவன் - நான்கு வேதங்களையும் அத்யயனம் செய்தவனையும் விட மேலானவன்'' - என்பதால் வேதநிந்தையும் காணப்படுகிறது. இதனால் இந்த அம்சம் (பாஞ்சராத்திரத்தில்) பொருந்தாது.

ஈஸ்வரன் - அதேபோல ஜீவன் - இவர்கள் நித்யம். ஆகாசம் பிரும்மத்தினுடைய காரியமாகும். வாயுவும் உற்பத்தியைத் கொண்டது: அதேமாதிரி ஸ்ருஷ்டி பிரகரணமாக வரும்போது - வாயு ருபத்தை அடைந்த பிரும்மத்தினிடமிருந்து அக்னியுண்டாயிற்று அதுபோல அக்னியை உபாதியாகவுடைய பிரும்மத்தினிடமிருந்துதான் ஜலம் உண்டாகியது. பூமியும் பிரும்மத்தினிடமிருந்து தான் உண்டாகிறது. இதுவே அன்ன சப்ததத்தாற்

சொல்லப்படுவது (பூமியே) ஆகும். இவ்விதம் சொல்லிவரும்போது இவைகள் (பூதங்கள்) அசேதனங்களானபடியால் - அவைகளுக்கு ஸ்ருஷ்டி கர்த்ருத்வம் எப்படி ஸம்பவிக்கும் - என்பதற்கு - அந்த அந்த பூதங்களின் அபிமான தேவதைகள் என்று சொல்லலாம். (அதாவது ஆகாசாதிகளை உபாதியாகவுடைய பிரும்மமே அந்த அந்த உருவத்துடன் இருக்கின்றவராய் கொண்டு - தியானம் செய்து-அந்த அந்த காரியத்தைப்படைக்கிறார். இதற்கு அவரைப் பற்றிய லிங்கம் (அடையாளம்) இருப்பதே அதன் காரணமாகும். அதாவது அந்தரியாமியாய் தனது நியந்தாவுடன் கூடிய பூதங்களுக்கே பிரவிருத்தியேற்படுகிறது என்பதைத் தெரிவிக்கிறது. ஸத்தாயும் (பூமிஜலம் தேஜஸ்) த்யத்தாயும் (வாயு ஆகாசமாயும் ஆனார். அவர் தன்னைத்தானே அவ்விதம் செய்துகொண்டார். இதனால் பிரும்மத்துக்கு ஸர்வாத்ம பாவத்தைச் சொல்லிற்று. ஈக்ஷணமும் சொல்லப்பட்டது. "நான் பலவாக ஆவேன்" என்பதால் ஈக்ஷிதாவானவர் ஸத்பதப் பொருளானவராகும்.

இதேமாதிரி பிரளயகிரமும் சொல்லப்பட்டது. உற்பத்திக் கிரமத்திற்கு மாறாகப் பிரளயம் ஏற்படுகிறது என்பது சித்தாந்தம் பூமி ஜலத்தில் ஒடுங்குகிறது என்று சுருதி சொல்கிறது. ஜலம் தேஜஸ்ஸில் லயமடைகிறது. இம்முறைப்படி சூக்ஷமமும் சூக்ஷம தரமுமான பொருள் அதற்கடுத்தாற்போலுள்ள காரணத்தில் ஒடுங்கி எல்லாக் காரியஸமூஹமும் பரமகாரணமும் பரம சூக்ஷம மான பிரும்மத்தில் ஒடுங்குகின்றது என அறிந்து கொள்ளவேண்டும். தனது காரணத்தைத்தாண்டி காரணத்துக்குக் காரண மான பொருளில் காரியத்துக்கு லயம் சொல்வது பொருத்த மாகாது. ஸ்ம்ருதியிலும் உற்பத்திக் கிரமத்துக்குமாறான (அவரோஹண) கிரமத்தாலேயே பிரளய கிரமம் ஆங்காங்கு சொல்லப் பட்டிருக்கிறது. காரிய நாசம் ஏற்பட்டபின் காரணத்தின் இருப்பு பொருத்தமானதே. ஆத்மாவை ஆதியாகக் கொண்டு உற்பத்தியும் - ஆத்மாவை முடிவிடமாகக் கொண்டு - பிரளயம் யேற்படுவது சரி. (முதலிய பூதங்கள் - கரணங்கள் - இப்படி ஸ்ருஷ்டியாயிற்று.)

ஆத்மாவுக்கு உற்பத்தியில்லை நித்யம் ஜனன மரண வியவஹாரம் தேகத்தை உத்தேசித்துச் சொல்லப்படுகிறது. தேகம்

மரிப்பது, ஆத்மா மரிப்பதில்லை. புருஷன் சரீர சம்பந்தத்தை யடையும்போது - அவனே பிறப்பவனாகவும் - வியோகத்தில் - மரித்தவனாகவும் ஆகிறான் - ஜீவனுக்கு உற்பத்தி பிரளயமில்லை. அவன் அஜனும் நித்யனும் ஸாஸ்வதனும் புராணனும் ஆவன். உபாதியினால் - புத்தியுடன் கூட-ஆகாசத்துக்குப்போல - பிரிந்த தோற்றமானது உபாதி நிமித்தமாக யேற்படுகிறது. இக்காரணத்தினால் உபாதியினுத்பத்தியால் - இவனுக்கு உத்பத்தியும் நிமித்தமும் யேற்படுகிறது. இது உபாதி பிரளயமே ஒழிய—ஆத்மாவுக்குப் பிரளயமில்லை. அவிகிருதமான பிரும்மத்துக்கே ஜீவபாவம் ஒப்பப்பட்டிருப்பதால் ஏகவிக்ஞானத்தினால் ஸர்வ விக்ஞானம் வரும் என்ற பிரதிக்ஞைக்கு விரோதமின்மையும் ஏற்படுகிறது. ஜீவபிரும்மங்களுக்குள்ள லக்ஷணபேதம் உபாதி நிமித்தமாக ஏற்பட்டதாகிறது.

ஜீவன் சித்ரூபன் - சுஷுப்தியிலும் சித் நாசமடைவதில்லை, அங்குத்வைத வஸ்துவில்லமமையால் த்வைத ஞானம் யேற்படுவதில்லை. திரஷ்டாவான தர்சனாகாரமான அந்தக்கரண விருத்தி பிரகாசக சைதன்யத்துடைய திருஷ்டிக்கு (சைதன்யத்துக்கு) நாசமில்லை - என சுருதியிருப்பது - சித்தாந்தம். பரபிரும்மமே ஜீவனாகவிருப்பதன் காரணமாய் - ஜீவனுக்கும் - அக்னியின் சூடு பிரகாசத்தைப்போல-நித்ய சைதன்னிய ஸ்வரூபனாகவிருத்தல் சம்பவிப்பதாக அறியப்படுகிறது.

ஜீவன் அணுவென்று சொல்வது பூர்வபக்ஷம். உத்கிராந்தி. கதி-ஆகமனம் இவற்றை சுருதி சொல்வதால் அணுவாவான் - பூர்வபக்ஷம். சைதன்ய பிரதிபிம்பத்துடன்கூடிய புத்தியானது அணுவாகவிருப்பதிலிருந்து அணுவான அந்தப் புத்தியாகிற உபாதி மூலம் ஜீவனுக்கு அணுத்வம் யேற்படுகிறது. இயற்கையில் பிரும்மத்வமிருப்பதுபற்றி - ஜீவன் ஸர்வக்தனே - (விபு) - நீக்கமற எங்கும் நிறைவுள்ளவனே - சித்தாந்தம் தத்குண ஸரத்வாத்து தத்வ்யபதேச : ப்ராக்ஞவத் - அணுவான புத்தியினுடைய குணங்களான இச்சை த்வேஷம் சுகம் துக்கம் முதலியவற்றை பிரதானமாகக் கொண்டிருத்தல்பற்றி-ஆத்மாவுக்கு அணுத்வம் முதலியபரிமாண வ்யவஹாரமானது யேற்படுகிறது. பரமாத்மாவுக்குப்போல

இங்குமாகும் - அதாவது விபுத்வமே சொல்லப்பட்டது. பிராணன்களுள் யாதொரு இந்த விக்ஞானமையனுண்டோ - அவனே மஹானும் அஜனுமான ஆத்மாவாகிறுன் - விபுத்வம் சொல்லப்பட்டது. எதுவரை சமசாரித்வமிருக்கிறதோ - ஆத்மாவுக்கு புத்தியுடன் ஸம்பந்தம் விலகுவதில்லை. திரஷ்டாவும் - ஸ்ரோதாவும் - மந்தாவாகவோ - விக்ஞாததாவாகவோ - காணப்படுபவன் பிரும்மத்தைக் காட்டிலும் வேறுபட்டவனன்று. अहं ब्रह्मास्मि - என்கிற சுருதியில் - விபு. உபாதியுடன் சம்பந்தப்பட்டபோது - புத்தி தியானிக்கும்போது - தியானம் செய்பவன் போலும் - விக்ஞானமயன்-புத்திமயனுக விருக்கிறுன் "ஸ்திரிமயனுகவிருக்கிறுன்." என்றுல் ஸ்திரிகளிடம் ஆசையுள்ளவனுக விருக்கிறுன் - என்று அர்த்தம். அதுபோல புத்தியின் குணங்களைப் பிரதானமாகக் கொண்டு - புத்திமயமாக ஆத்மாவிருக்கிறுன். ஆத்மாதானுகவே தியானம் செய்வதில்லை. பின்னையோவெனின் புத்தியானது தியானம் செய்யும்கால் தியானம் செய்பவன் போலும் - புத்தி சலிக்கும்போது சலிப்பவன் போலுமாகின்றுன் என்பதாம். ஆத்மாவுக்கு இந்த புத்தி சம்பந்தம் - உபாதியின் சம்பந்தம் - மித்யா ஞானத்தை முன்னிட்டது. எதுவரை மித்யா ஞானத்துக்கு நிவிருத்தியில்லையோ - அதுவரை புத்தியாகிற உபாதி ஸம்பந்தம் சாந்தமாவதில்லை. ஸுஷுப்தி (தூக்கம்) பிரளயம் இவ்விரண்டிலும் - ஆத்மாவுக்கு புத்தி சம்பந்தமில்லை - அதுபோது அவன் பரமாத்மாவுடன் சேர்ந்தவனுகிறுன் - தன் ஸ்வரூபத்தை உடையவனுகிறுன். இந்த புத்தியின் சம்பந்தம் ஆத்மாவுள்ளவரை இருக்கிறது. எப்படியெனில் - சுஷுப்தியில் பீஜ ரூபமாய்யிருக்கிற புத்தியின் சம்பந்தத்திற்கு - பும்ஸத்வாதிவத் - ரேதஸ் (வீர்யம்) தாடி மீசை வெளிப்படுதல் எவ்விதமோ - இல்லா தனவுண்டாவதில்லை - அதுபோல-சுஷுப்தியிலும் பிரளயத்திலும்-சக்திரூபமாய் இருந்து கொண்டே விழிப்பு - (ஜாக்ரதை) ஸ்ருஷ்டி சமயம் - வெளித்தோன்றுவதுபோல - வெளிவருகிறது. மனத்துடன் ஆத்மா சம்பந்தப்படாதபோது - ஒன்றும் ஏற்படுவதில்லை. வேறிடம் மனம் இருக்கும்போது நான் பார்க்கவில்லை என்கிறுன். மனத்தாலே பார்க்கிறுன் கேட்கிறுன் சங்கல்பம் ஆசை சிரத்தை அசிரத்தை தைர்யம் புத்திபயம் இத்யாதி - யாவும் மனமே என்றதால் காமம் முதலியவைகள் இந்த மனத்தின் விருத்திகள் எனத்

7

தெரிவிக்கிறது. இதனுல் தத்குணஸாரத்வாத்து தத்வ்யபதேச: சரியாகும் புத்திக்கும் ஆத்மாவுக்குமுள்ள தாதாத்மியம் இதனுல் சொல்லப்பட்டதாகும்.

இவ்விதமானுல் கர்த்ருத்வம் ஆத்மாவுக்கு உண்டா? போக்த்ருத்வம் உண்டா? சித்தாந்தத்தில் இரண்டுவிதமான கர்த்ருத்வமோ (ஸ்தூல சலன ரூபம் - ஸூக்ஷ்ம போதிய சக்தி ஆகிற இருவிதங்கள்) ஆத்மாவினிடத்தில் உண்மையில் இல்லை. அத்யாஸத்தால் ஆரோபிதமாகத் தோற்றுகிறது என்று உபதேசிக்கப்படுகிறது. யதாசதக்ஷோபயதா - என்பது சித்தாந்தாதிகரணம்.

இந்த ஜீவன் அத்யாஸி கர்திருத்வமுள்ளவனுகிறுன் - ஏன் ? யாகம் செய்யவேண்டும் கொடுக்கவேண்டும் என்பதாலே. சாங்கியன் புத்திக்கே கர்த்தாவாகவிருக்கும் தன்மை வரலாம் என்கிறுன் இது பூர்வ பக்ஷம். புத்தியாவது ஒரு கரணமாவதால்-அது கர்த்தாவாகமாட்டாது-யாகம்-சிரவணம் கர்த்தாவன்றி வியாபாரங்கள் ஸம்பவிப்பதில்லை. இதனுல் ஜீவனுக்கு கர்த்ருத்வம் ஒப்பவேண்டிவருகிறது என்பது சித்தாந்தம். புத்தியை சாங்கியன் கர்த்தாவென்கிறுன். இதை அத்வைதி கரணம் என்கிறுன். ஒரே வஸ்துவுக்கு கர்த்தாவென்றும் கரணமென்றும் பெயரில் வித்யாஸம் அதனுல் ஆத்மாவுக்கு கர்த்ருத்வம் அங்கிகரிக்க வேண்டும். ஆனுல் இது இயற்கையிலில்லை. தச்சன் உளியை வைத்து வேலை செய்யும்போது கர்த்தா - அதுபோல ஜீவனும் புத்தி முதலிய உபாதிகளுடன் சேரும்போது கர்த்தாவாகவும் - இயற்கையில் அகர்த்தாகவுமாகிறுன். உபாதியின் சேர்க்கையில் ஜீவனுக்குக் கர்த்ருத்வம் அத்யாஸமூல யேற்பட்டதாகவாகிறது என்பது சித்தாந்தம். கர்த்ருத்வம் போக்த்ருத்வம் அவித்யையினுல் உண்டுபண்ணப்பட்டதாகும். சுத்தமான ஆத்மா - புத்தியில் பிரதி பிம்பிம்பத்தை அடைந்து - அவித்யையினுல் பேதத்தை அடைந்து - ஜீவன் என்ற பெயரை அடைந்தவனுமான அவனுக்கே பந்தம்-மோக்ஷம் ஏற்படுவது. பிம்பம்-பிரதிபிம்பம் இரண்டுக்குமுள்ள கல்பிதயான வேற்றுமையானது தர்மத்தை வியவஸ்தை செய்வதாகக் காண்கிறோம். அவித்யாதசையில் கர்திருத்வம் போக்திருத்வம் என்று சொல்லி வித்யாதசையில் அதே கர்திருத்வம் யோக்திருத்வம் இரண்டையும்

மறுக்கிறது. அதாவது எந்த நிலையில் இந்த ஜீவனுக்கு எல்லாம் ஆத்மாவாகவே ஆகிவிட்டதோ அந்த நிலையில் எதனால் எதை அறியக்கூடும்? வித்யையினால் இருளைப்போக்கி - ஆத்மா ஒருவனாகவே இருந்துகொண்டு - ஒழிவையடைகிறான். தச்சனைப்போல ஸ்வரூபத்திலே அகர்த்தா-வாச்சி உளியை வைத்திருக்கும்போது கர்த்தாவாக விருக்கிறான். அதுபோல மனம்போல ஸாதனங்களை உபயோகித்து ஆத்மா கர்த்தாவாகிறான். ஸ்வரூபத்தாலே அகர்த்தாவே. பிரும்ம ஸ்வரூபம் ஆத்மாவுக்குச் சொல்லப்பட்டதால் ஜீவனுக்கு இயற்கையான கர்த்ருத்வமில்லை. ஸ்வப்னதசையில் சஞ்சாரம் - சுஷுப்தியில் இந்திரியங்களை எடுத்துக்கொள்ளல்-இவைகளும் பரிஹரிக்கப்பட்டவைகளாக ஆகின்றன.

இன்னொரு விஷயம். ஸ்வப்னத்தில் இந்திரியங்கள் தூங்கினவைகளாகவிருக்கும்போது-தனது சரீரத்தில் இஷ்டப்படி சஞ்சரிக்கிறான் என்கிற உபதேசப்படும் விஹாரமானது கேவலனான ஆத்மாவுக்குக் கர்திருத்வத்தை உண்டுபண்ணுவது. இதனால் ஆத்மாவுக்குக் கர்த்ருத்வம் உண்டா? ஸ்வப்னத்தில் முற்றிலும் கரணங்களுக்கு ஓய்வுமில்லை. புத்தியுடன் கூடவே ஸ்வப்னத்தை அனுபவிக்கிறானாயிருந்துகொண்டு கார்யகரண ஸங்காத ரூபமான இந்த ஸ்தூல பிரபஞ்சத்தை கடக்கிறான். என்றதால் - புத்தியின் ஸம்பந்தம் அந்த நிலையிலும் சொல்லப்படுவது அதன் காரணமாகும். ஸ்மிருதியும் அவ்விதமே சொல்கிறது " பாஹ்யேந்திரியங்கள் ஒழிவையடைந்ததும் - மனம் ஒடுங்காமல் விஷயங்களையே அனுபவிக்குமானால் அதை ஸ்பப்ன தர்சனம் எனக்கண்டுகொள்ள வேண்டும். மனத்துடன் கூடவே ஆத்மா ஸஞ்சரிக்கிறான். ஸ்வப்னத்தில் வாஸனையினால் ஏற்படுவது. ஸ்வப்னத்தில் காட்டைப் பார்த்தேன் - என்று சொல்லும்போது - கரணத்துடன் சம்பந்தம் சொல்லப்படுகிறது. தனித்த ஆத்மாவுக்கு கர்த்ருத்வம் இல்லை. எல்லா இந்திரியங்களுக்கு கரணத்வமோ உபலப்தியை (அறிவை) அபேக்ஷித்து ஏற்படுகிறது. அந்த உபலப்தியோ (அறிவோ) ஆத்மாவினுடையது. அந்த உபலப்தியிலும் இவனுக்கு (ஆத்மாவுக்கு) கர்த்ருத்வமில்லை. அஹங்காரத்தை முன்னிட்டு கர்த்ருத்வமும் - உபலப்தாவுக்கு (சுத்த சைதன்ய ஆத்மாவுக்கு) ஏற்படுவதில்லை. அகண்டமானசாக்ஷி சைதன்யம் புத்தியின் விருத்தியால்

விஷயத்துடன் கலந்து பின்னமாயாகி கலக்கிறான். உபலப்தியில் புத்தி முதலியவற்றிற்கு கரணத்வமும் புத்தி முதலிய உபாதியுடன் கூடின ஆத்மாவுக்கு கர்த்ருத்வமும் ஸித்திக்கிறது. கேவலாத்மாவுக்கு கர்த்ருத்வமில்லை. புத்தி ஜடமாதலால்-புத்திக்கும் உபலப்தியில் கர்த்ருத்வம் கிடையாது. புத்திக்கு கரணத்வம் ஒப்பியிருப்பதே அதன் காரணமாகும். ஆகவே ஆத்மாவுக்கு கர்த்ருத்வம் உபாதி நிமித்தமே என்பது ஸித்தம்.

அப்படியானால் ஜீவனை ஒரு காரியத்தில் தூண்டுவது யார் - ஆசையா? ஈஸ்வரனா? கர்த்ருத்வாதி லக்ஷணமான ஸம்சாரம் பிரேரகனை ஈஸ்வரனிடமிருந்து யுண்டாகிறது. சுருதி ஈஸ்வரனுக்கு பிரேரகத்தை உபதேசிப்பது. ராகாதிகள்-தூண்டுகின்றன. என்பது பூர்வபக்ஷம். ஜீவர்களிடமுள்ள ஆசையானது அந்தர்யாமியான ஈஸ்வராதீனம். ஆகவே ஈஸ்வரனே ஜீவனைத் தூண்டுகிறான் என்பது சித்தாந்தம்.

இங்குள்ள சந்தேகம் - அவித்யாதசையில் சொல்லப்பட்ட ஜீவனுடைய கர்த்ருத்வம் ஈஸ்வரனை அபேக்ஷிக்காமல் ஏற்படுகிறதா? அல்லது ஈஸ்வரனை அபேக்ஷித்ததா? சந்தேகம் ஏன்? ஜீவன் ஈஸ்வரனை அபேக்ஷிப்பதில்லை-அபேக்ஷிப்பதினால் பிரயோஜனமின்மையே காரணம். ஜீவன் விருப்பு வெறுப்பு தோஷங்களுள்ளவனாகி - கர்ம பலன்களுக்கு அடிமையாகிறான். ஈஸ்வரனைச் சொல்வதானால் வைஷம்யம் நைர்கிருண்யம் என்று யேற்படும். ஆகவே ஈஸ்வரனை அபேக்ஷிக்காமல்-இயற்கையான கர்த்ருத்வமே ஜீவனுக்கு ஸித்தம் என்பது பூர்வபக்ஷம். ஆனால் ஜீவன் எல்லாக் கிரியைகளிலும் பிரயோஜ்ய கர்த்தாவாகவும் - ஈஸ்வரன் பிரயோசக கர்த்தாவாகவும் ஆகிறார். நேரில் செய்பவன் பிரயோஜ்ய கர்த்தாவென்றும் - அவனைத் தூண்டுகிறவன் பிரயோஜக கர்த்தாவென்றும் சொல்லப்படுவான். எல்லாக் காரியங்களிலும் சுருதி மூலம் ஈஸ்வரன் பிரயோசக கர்த்தாவென்று முடிவு செய்யப்பட்டிருக்கிறது. எவனை இந்த உலகத்தினின்று உந்நிநிஷதே - உயரத் தூக்க விரும்புகிறாரோ - அவனை இவரே நற்காரியம் செய்யும்படி தூண்டுகிறார். ஆத்மாவின் உள் இருந்து நியமனம் செய்கிறார். இதனால் ஈஸ்வரனுக்கு வைஷம்யம் நைர்கிருண்யம் வராது.

ஜீவனின் கர்திருத்வம் ஈஸ்வராதீனம் என்றால் செய்யப்படும் முயற்சியை - பிரயத்னத்தை அபேக்ஷிக்கிறார். ஸ்வர்க்கத்தில் ஆசையுள்ளவன் யாகம் செய்தல் வேண்டும் - என்பதே. விஹித (விலக்கப்பட்ட) காரியத்தைச் செய்பவனாகிற ஜீவனை சுகத்துடன் சேர்ப்பிப்பார். மழை போன்ற பொதுக்காரணமாகவுமிருப்பார். ஈஸ்வரர், ஈஸ்வரனுக்கு அபேக்ஷையில்லாவிடில் - உலகில் காணப் படும் புருஷகாரத்துக்கும் (முயற்சிக்கும்) வையரித்யமும் (வீணாகாம லிருப்பதற்கு) அதுபோல தேசம் காலம் நிமித்தம் இவற்றுக்கு முற்கூறிய தோஷமும் பிரஸக்தமாகும் என்று இம்மாதிரியான தோஷசமுஹம் " கிருத ப்ரயத்நாபேக்ஷஸ்து - விஹித ப்ரதிஷித் தாவை யர்த்யாதிப்ய :- என்பதில் ஆதி சப்தத்தால் காண்பிக்கப் படுகிறது.

இதனால் - ஜீவன் பிரும்மத்தின் அம்சம்போல் ஆகிறான். இல்லையா? ஈஸ்வரனும் ஜீவனும் ஒன்றாக ஆகிறானா - ஜீவன் ஈஸ்வரனாகவோ ஈஸ்வரன் ஜீவனாகவோ-ஆகுதலாகிற ஸாங்கர்யம் தானா? பேதவ்யபதேசாத் - பரமாத்மாவைக்காட்டிலும் ஜீவன் வேறு என்றும்: அதேமாதிரி அபேதவ்யப தேசாத் - இருப்பதும் - இந்த காரணத்தினால் — பிரும்மத்துக்கு அடிமைத் தன்மை உண்டு என்று சொல்கின்றனரே. இதனால் ஸாங்கர்யம் - மறுக்கமுடியாது என்பது பூர்வபக்ஷம். அம்சம் என்றும் அவச் சின்னன் என்றும் ஆபாஸன் என்று மான உபாதிமூலம் யேற் படுகிற கல்பனைகளைக் கொண்டு ஜீவஈஸ்வர பரஸ்பரவ்யவஸ்தை ஸித்திக்கிறது - என்பது சித்தாந்தம். நெருப்புக்கும் பொரிக்கும் போலும் - யஜமானன் சேவகன் - உபகாரிய உபகாரக பாவம்- உலகில் காணப்படுகிறது. நிரவயவமான ஈஸ்வரனுக்கு அம்ச மாக — அம்சம் போல எவ்விதம் ஸம்பாவிதம் — யேற்படக் கூடும். அதனாலே பரமாத்மாவாகவே ஜீவன் ஏன் ஆகக்கூடாது - என்றால் பேதவ்ய பதேசமிருப்பதே அதன் காரணமாகும். " இவரை அறிந்தே முனியாகிறான் " - எவர் ஆத்மாவின் உள் இருந்துகொண்டு - ஆத்மாவை நியமிக்கிறாரோ - இதனால் ஜீவன் வேறு பரமாத்மா வேறு-அந்தர்யாமி என உபதேசிக்கிறார்.

இதனால் மட்டும் ஜீவன் அம்சமாவதில்லை. இதேமாதிரி அபேத வ்யபதேசமும் இருக்கிறது. அதர்வணத்தில் சிலர் - பிரும்மமே

செம்பட்டவர் பிரும்மமே அடிமைகள் - பிரும்மமே சூதாடுபவர். இவ்விதமானஹீன உதாரணங்களால் - நாமரூபங்களால் செய்யப் பட்டசரிர இந்திரிய ஸங்காதத்தில் பிரவேசத்தை செய்த எல்லா ஜீவர்களுக்குமே பிரும்மத்வத்தை உபதேசிக்கிறது. இதே பொருள் வேறிடத்திலும் சொல்லப்பட்டது. நீ ஸ்திரியும் நீபுமானுமா கின்றாய், நீ குமாரனாயும், குமாரியாகவும் ஆகிறாய் என்று த்ர்ஷ்டா வானவன் இதைக் காட்டிலும் வேறுபட்டவன் அன்று - என்பதால் அபேதமுமிருக்கிறது. நெருப்புக்கும் பொறிக்கும் உள்ள சூடு இரண்டிலும் ஒத்திருப்பதுபோல - ஜீவனுக்கும் ஈஸ்வரனுக்கும் சைதன்ய வேற்றுமை யற்றிருக்கிறது. ஆகவே பேதமும் அபேத மும் அறியப்படுகின்றது. இது தவிர மந்திரவர்ணத்தாலும் ஜீவனுக்கு அம்சத்வம் ஸித்திக்கிறது. இப்பிரபஞ்சமனைத்தும் ஸஹஸ்ர சீர்ஷபுருஷனின் விபூதியாகும். இவருடைய திரிபாத அம்ருத ஸ்வரூபமானது த்வி (த்யுலோகத்தில்) இருக்கிறது. இதில் ஸர்வபூதங்களும் இவரது பாதமாகும். பூத — என்கிறதால் ஜீவனைப் பிரதானமாகக் கொண்ட ஸ்தாவரஜங்கமங்களை சுருதி சொல்லுகிறது. ஆதலால் அம்சத்வம் அறியப்படுகிறது. ஸ்ம்ருதியிலும் (கீதை) ஜீவலோகத்தில் ஸநாதனமான எனது அம்சமே ஜீவனாக ஆயிற்று என்று ஜீவனுக்கு ஈஸ்வர அம்சம் சொல்லப்பட்டதாகும். எஜமானன் சேவகன் என்று பிரஸித்த மாக விருந்தாலும் - சாஸ்திரமூலம் அம்சாம் சித்வமும் ஈசித்ரு ஈசிதவ்யத்வமும் நிச்சயிக்கப்படுகிறது.

இவ்விதம் அம்சஅம்சிபாவம் யேற்படுமானால் - ஜீவனுடைய துக்கம் ஈஸ்வரனுக்கு யேற்படுமா? பதில் - பரமேஸ்வரன் அனுப விப்பதில்லை. ஜீவனுக்கு - அவித்யா மூலம் தேகத்தில் ஆத்ம பாவத்தை அடைந்தவன் போலாகிறான். ஆனால் பரமேஸ்வரனுக்கு தேஹாதிகளில் ஆத்மபாவமோ துக்காபிமானமோ இல்லை. ஜீவனுக்கு மித்யாபிமான ப்ரமத்தை நிமித்தமாகக் கொண்டு துக்கம் உண்டாகிறது. ஆனால் விஷயசம்பந்த மற்றவரும் சுத்த சைதன்ய மாத்திரஸ்வரூபமுள்ள பிரும்மத்துக்கு — இது யேற் படாது - பிரகாசாதிவத் என்று சூத்ரத்தில் சொல்லியபடி — உபாதி சம்பந்தத்தால் சூரியனுடைய பிரகாசத்தில் கோணலான தன்மையோ - அல்லது ஒழுங்கானதோ ஏற்படுமானால் - அதை

சூரியனிடத்தில் காணமுடியாது - (உபாதி-விரலினல் மறைப்பது- மடக்கின் ஜலத்தில் சூரிய பிம்பத்தைப் பார்ப்பது இதில் அசை வினல் யேற்படும் பிரகாசத்திற்கு பாதிதம் - சூரியனை ஸ்பரிசிக் காது). तत्वमसि என்று வாக்ய ஜன்ய ஞானத்தினல் அவித்யை விலகி - ஜீவனுக்குப் பிரும்மபாவம் சொல்லப்படுவதால் - ஜீவ னுடைய துக்கம் பரமாத்மாவை ஸ்பரிசிக்காது. வியாஸரும் அவ் விதமே ஸ்மருதியில் சொல்லியிருக்கிருர். ஜலத்தில் தாமரை இலையைப் போல ஈஸ்வரன் சம்பந்தப்படுவதில்லை. கர்மபலன் களுடன் கர்மாவுக்கு ஆஸ்ரயனை யாதொரு ஆத்மா (ஜீவன்) உண்டோ-பந்தம் மோக்ஷம் இவற்றுடன் சம்பந்தப்படுகிருன்.

கர்த்தாவாகவும் போக்தாவாகவுமிருக்கும் ஆத்மாவுக்கு ஸர்வசரீர சம்பந்தமானது (கர்ம பல போக்த்ருத்வமானது) யாது உண்டோ, அது ஆத்மைக்யத்தை ஒப்புவதினல் மாறி விடத்தெரியும். ஸ்வாமி ஒருத்தனுக விருப்பதால்தான்-சம்பந்தம் ஏற்படுவதில்லை. உபாதியினல் ஜீவனுக்குத் தொடர்பு. ஆத்மா வுக்கு உபாதியின் தொடர்பு இல்லாமையால் கர்மமாறுபாடோ - பலமாறுபாடோ ஏற்படுவதிற்கில்லை.

இந்த ஜீவன் பரமாத்மாவின் பிரதிபிம்பமாகிருன். ஜலத்தில் காணப்படும் சூரிய பிரதிபிம்ப அசைவு வேறு சூரியப் பிரதிபிம்பம்- அல்லது சூர்யனுக்கோ - இருக்காது. பிரதிபிம்பமானது (அபாஸ மானது) அவித்யா க்ருதமாகவிருப்பதால் - அவித்யையை நீக்கி - பாரமார்த்திக தசையில் ஸாங்கர்யம் யேற்படுவதில்லை. (ஆத்ம குணங்கள் ஒன்பது - புத்தி, சுகம், துக்கம், இச்சை, த்வேஷம், பிரயத்னம், தர்மம், அதர்மம் பாவனை - இவை ஏற்படாமலிருப் பதே மோக்ஷமாகும்.)

இந்திரியங்கள் - பிராணங்கள் - பிரும்மத்தின் காரியங்க ளாகும். அதனைன் காரியத்தை ஒட்டி-இந்திரியங்கள் பதினென்று என்பது சித்தாந்தம். புருஷ (ஜீவ)னிடத்திலுள்ள பிராணன்கள் பத்து-ஆத்மா பதினென்ருவதாக விருக்கிறது. ஆத்ம சப்தத்தால் அந்தக்கரணம் (மனஸ்) சொல்லப்படுகிறது - கரணங்களை (இந்திரி யங்களை) சொல்லும் பிரகரணமாக விருப்பதே அதன் காரண மாகும். மனத்தின் விருத்தியை ஒட்டி, மனம் புத்தி அஹங்காரம்

சித்தம் - என்று பலபடியாகச் சொல்லப்படுகிறது. இவையாவும் மனதேயாகும் - என்று சுருதி சொல்கிறது. நான்குவித அந்தக் கரணம்-அவித்யை, காமம் கர்மம் ஐந்து பிராணன்கள் ஐந்த பூத சூக்ஷ்மங்கள் ஐந்த ஞானேந்திரியங்கள் - ஐந்து கர்மேந்திரியங்கள் இவை - புரியஷ்டகம் எனப்படும். இவ்வெட்டின் மூலமே ஆத்மா அறியப்படுவதால்-இவை லிங்கமாகவுமாகின்றன. இந்திரியங்கள் அணுபரிமாண முள்ளனவேயாகும். முக்கியபிராணனும் இந்திரி யங்கள் போலவே பிரும்மத்தின் சுாரியங்களாகும் - பிராணனும் உண்டாவது என்பது சித்தாந்தம்.

ஜீவன் தனது கர்ம மூலம் வரும் போகத்தைத்தான் தானே அனுபவிக்கிறான். தேகதேஹங்களில் இயற்கை ஸித்திபெற்றவ ராக அக்னிபோன்ற அபிமானி தேவதைகள் ஸித்திபெற்றவர் களாகவிருக்கின்றன. முக்கிய பிராணனுடைய ஸ்திதி உத்கிராந்தி இவைகள் மூலம் தேகத்தின் தாரணமோ - அல்லது விழுதலோ யேற்படுகிறதேயொழிய - இந்திரியங்களுடைய (ஸ்திதி உத்கி ராந்திகளால் தேகதாரண பதனங்கள் (விழுதல்) யேற்படுவதில்லை. இந்திரியங்கள் பிராணனைக்காட்டிலும் வேறு தத்வங்களேயாகும்.

சுருதியில் சொல்லப்பட்டது - நான் இந்த (அப்பு தேஜஸ் அன்னம்-(பிருத்வி) இவைகளை இந்த ஜீவரூபத்தால் பிரவேசித்து - நாம ரூபங்களை வியாகரணம் செய்கிறேன் -(ஸ்தூலமாக்குகிறேன்) நாமரூபவியாகரணத்தில் ஜீவன் கர்த்தாவா-அல்லது பரமேஸ்வரன் கர்த்தாவா? ''இந்த ஜீவனால்'' என்கிற பதமிருப்பதாலே நாமரூப வியாகரணமானது - வியகரவாணி - என்ற உத்தம புருஷப் பிரயோகத்தைச் சொல்வதால் - தேவதை தன்னிடத்தில் முந்திக் கூறிக்கொள்ளுகிறது. சூத்ரம் ஸம்க்ஞாமூர்த்தி க்ல்ப்த்திஸ்து திரிவிருத்குர்வத உபதேசாத்-என்பதில் து என்பதால் பூர்வபக்ஷத் தை விலக்கி - ஈக்ஷிதாவுக்கு உத்தம புருஷ பிரயோகம் (வியாகர வாணி எனச்சொல்லப்படுவதால்-) ஈஸ்வரனுரே நாமரூப வ்யா கரணம் செய்கிறார் என்பது சித்தாந்தம். திரிவிருத்குர்வத: - லக்ஷணையால்-பரமேஸ்வரனைக் குறிக்கிறது. அவருக்கே சுருதியில் கர்த்ருத்வம் - மறுப்பற்றபடி - உபதேசிக்கப்பட்டிருக்கிறது. அந்த பரமாத்மா ஆலோசித்தது-ஸ்தூலமாக்குகிறேன் என்பதால்

ஶ்ரீ

பிரும்மத்துக்கே வ்யாகர்த்திருத்வம் உபதேசிக்கப்பட்டதாகும். சுருதியில் அக்னி ஆதித்யன் சந்திரன் மின்னல் இவற்றில்-அக்னி யில் சிவந்த ரூபம் எதுவோ அது தேஜஸ்ஸின் ரூபமாகும். கருப்பு யாதுண்டோ பிருத்வியின் ரூபமாகும். இங்கு அக்னியென்ற இந்த ரூபமான்து வியாகரணம் செய்யப்படுகிறது. திரிவிருத்கரணத் தால் ஒவ்வொன்றுக்கும் (அக்னிக்கு தேஜஸ்ஸைப்போல) ஆதிக்யம் உண்டு. அவை ஒவ்வொன்றுடன் கலந்து - கயிற்றுக்குப் பின்னல் போல - ஒன்றாகவிருப்பதால் வ்யவஹாரம் சித்திக்கிறது, தனித் தனி வ்யவஹாரமும் உண்டு. தனித்த ஆதிக்யத்தினால் (அக்னி) அப்பு என்ற பெயரால் அழைக்கப்படுகிறது. அவை தனித்தனியாக விருந்தால் வியவஹாரங்கள் ஸித்திக்காது.

சங்கரருடைய முக்கியமான நோக்கு - மனிதனுக்கு வைராக் யம் யேற்படவேண்டும். சம்சார நிவிருத்திக்கு பக்தியும் அவசியம். இவைகளுக்குக் கர்ம காரணமாகிற தேகம் - அவன் பிறப்புக்குக் காரணமாகிறது. கர்மம் காரணமாகவரும் தேகம் - இவனுடைய சரீர அபிமானத்தினால் - இவனுக்கு அடுத்த சரீரத்தைக் கொடுக் கிறது. வாழ்க்கையின் முடிவில் இனிவரும் தேகம் இவனது மனத் தில் தோன்றுகிறபடியால் - சரீர அபிமானம் ஏற்பட்டு பிறப்பை அடைந்துகொண்டு வருகிறான் ஜீவன். ஆகவே வைராக்யத்தை யடைய ஆத்ம ஞானம் அவசியம். இஷ்டாபூர்த்திக் கர்மாக்களைச் செய்கிறவனும் - ஆத்ம ஞானமில்லாவிடில் - தேவர்களுக்குப் பசு வாகிறான். (போக்ய ஸாதனமாகிவிடுகிறான்) - பிறகு தன்பலன் கள் முடிந்ததும், தேய்ந்ததும் - பூமியில் பிறக்கிறான் - தூம்ராதி மார்க்கத்தினால் செல்கிறான் - திரும்புகிறான். ஆத்ம ஞானம்-ஏதா வது ஒருவித்யையை உபாஸிப்பதினால் ஏற்பட்டவனே-அர்ச்சராதி மார்க்கத்தை அடைந்து - கல்பங்கள்தோறும் பூமிக்குத் திரும்பி வருவதில்லை. ஸ்வர்க்காதி லோகங்களிலிருந்து திரும்பிவரும் ஜீவன் சுபபலனைத் தரக்கூடிய மிச்சமுள்ள வேறு கர்மங்களுடன் கூடவே பூமியில் ஜனிக்கிறான். ஸ்ருதியில் யாவத் ஸம்பாதம் - பலன் அனு விப்பதற்காகச் செல்லுதலும் - அப்பலன்கள் முடிவடைந்ததும் - திரும்பிவருவதும் யேற்படுகிறது. யத்கிஞ்ச - என்பதால் பாக்கி யுள்ள பலனைத்தராத கர்மத்தைச் செய்வதற்காக பிறப்பு அடை கிறான். எஞ்சிய பாகத்தை - அனுஸயம் என்னை வைத்த பாத்தி

ர்த்தைக் கழுவினாலும் - சட்டியில் ஒட்டிக்கொண்டிருக்கும் எண்ணெய்ப்பிசுக்கு எவ்விதம் காணப்படுமோ - அதுபோல அனுஸயம் ஒட்டிக்கொண்டிருக்கும். எஞ்சியுள்ள கர்மம் - ஏகதேசமே (ஒரு பகுதியே) மறுபிறவிக்குக் காரணமாகிறது நல்ல குடும்பத்தில் பிறக்கிறான். நல் நடத்தையினால் யோனிலாபம் ஏற்படுகிறது. மனம் வாக்கு காயம் - இத்யாதிகளால் பிராணிகளுக்குத் த்ரோஹம் செய்யாமையும் - அனுக்ரஹமும் சாஸ்திரார்த்த ஞானமும் சீலம் எனப்படும். அதனால் சுருதியில் ரமணீய சரணா: (சரணா: ஸுசரிதங்கள் - நல்நடத்தைகள்) அவை அனுஷ்டிக்கப்பட்டால் - சீலத்தால் ஜயிக்கப்பட்ட அனுஸயம் - கர்மயோனி லாபத்திற்குக் காரணமாகிறது. பாதரியும் ரமணீய சரணா:-சிறந்த கர்மமுள்ளவர்கள் என்கிறார். இதனால் பாபம் செய்தவர்கள் சந்திரமண்டலத்தை அடைவதில்லை. சந்திரலோக கமனம் போகத்திற்காகவே யேற்பட்டது. பஞ்சாக்னி உபாஸனம் செய்தவர்கள் புண்யம் செய்தவர்கள் - சந்திரலோகத்தை அடைந்தால்தான் பிராணிகளுக்கு ஐந்தாவது (ஸ்திரி) ஆஹுதியினால் தேகம் சம்பவிக்கிறது. பாபிகள் யமலோகம் செல்கின்றனர் - சந்திர மண்டலத்தை அடைவதில்லை. யமலோகம் சென்றவர்களுக்கு மீண்டும் இறங்குதல் மீண்டும் துக்க மனுபவித்தல் யேற்படுகிறது. இஷ்டாபூர்த்தி செய்தவர்களே போகங்களை அனுபவிக்க சந்திர மண்டலத்தை யடைகின்றனர். அத்தகையவர்களின் எண்ணிக்கை குறைவானபடியால் சந்திரலோகம் நிறம்பப்படாததாகவிருக்கிறது. சிலர் க்ஷுத்ரமான கொசு புழு பிராணிகளாகப் பிறக்கின்றனர். கர்மத்தைத் தனமாக உடையவர்கள் பித்ருயானத்தின் வழியாலும், வித்யையை உபாஸிப்பவர்கள் தேவயான வழியாகவும் செல்கிறார்கள் (தூம்ராதி - அர்ச்சராதி ஆக இரு மார்க்கங்கள்.)

சிலர் - சீதை, திரௌபதி போல அயோநிஜர்கள் - மாதாவின் கர்ப்பவாசமின்மையாம் - இவர்களுக்கு ஸ்திரிகளில் ஹோமமாகிற அக்னியில்லை. விஸ்வாமித்திர ஜனனமும் இதற்கும் ஓர் சான்று. மொத்தத்தில் - யோநியில் பிறப்பது அனுஸயத்தின் பலனை அனுபவிப்பதற்கே, அதற்கு ஏற்ப சரீரம் எடுப்பதற்கே - என்று சாஸ்திரம் உபதேசிக்கிறது. "எவர் ரமணீய சரணர்களோ" அவர்களுக்கு இந்த உபதேசம்.

பிரும்ம சூத்திரத்தில் மூன்றும் அத்யாயம்-ஸாதனாத்யாயத்தின் முக்கிய நோக்கு - வீடுபெறுதல் (முக்தியடைதல்) இது இருவகை-ஸர்க்ஷாத் ஸாதனம்-பரம்பரை ஸாதனம் என்று இருவிதம். பிரும்ம ஜீவ ஐக்யம்-ஸாக்ஷாத் ஸாதனம் என்றும், நித்யா நித்ய வஸ்துவிவேகம் சமதமாதிகள் வைராக்யம் முமுக்ஷுத்வம் - ஆகிய நான்கும்பரம்பரை ஸாதனம் எனப்படும். இந்த நான்கில்-வைராக்யம் முதல் பாதத்தாலும் - ஸாக்ஷாத் ஸாதனமான - பிரும்ம ஜீவ ஐக்ய ஞானத்தை அடையும் முறை - இரண்டாவது பாதத்தாலும்; பரம்பரை ஸாதனங்களுக்குள் மிகச்சிறந்த சித்த ஸமாதானம் எனப்படும் சித்தைகாக்ர்ய ஸம்பாதனத்துக்குரிய ஸகுண பிரும்ம உபாஸனை முறை மூன்றுவது பாதத்தாலும்-ஞானத்துக்கு அவசியமான சமதமாதிகள் நான்காவது பாதத்தாலும்-உபதேசிக்கப்படுகின்றன. முதல் பாதத்தில் 1வது, 2வது அதிகரணங்களில் ஜனன மரணங்களையும்-அவைகளிலிருந்து விடுபடக்கூடிய வைராக்யத்தையும் உபதேசிப்பது.

ஜீவன் மரிக்கும்போது - அடுத்த ஜன்மத்தை அடைவிக்கும் அவனுடைய கர்மங்களுக்கு ஏற்ப-இனியேற்படும் சரீரமானது இவனது மனத்தில் தோன்றவே அச்சரீரத்தில் தாதாம்யாபிமானத்தை இவனடைந்து விடுகிறான் - அதன் பின்னே இந்த பழைய சரீரத்தை விடுகிறான் - வெளியேறுகிறான். அச்சமயம் பஞ்சாக்னியில் சொல்லப்படும் சிரத்தை ஸோம - விருஷ்டி - அன்னரேதஸ் என்கிற ஆஹுதிரூபமாக தன்னைப் பாவிக்கவேண்டும் என்றவிடத்தில் ஐந்தாவது ஆஹுதியான ரேதஸ்ஸாகத் தன்னைப் பாவிக்க வேண்டும் என்று சொல்லிய யுக்தியினால் - ஜீவன் பூத ஸூக்ஷ்மங்களுடன் கூடினவனாகச் செல்கிறான் என்பது சித்தாந்தம். ஸம்ஸாரத்தில் வெறுப்பையடைவது பஞ்சாக்னிவித்யையின் முடிவில் சொல்லி யிருப்பதாகும்.

தத்ந்தர ப்ரதிபத்தௌ-- இனிவரப்போகும் தேகத்தை மரிக்கும் மனிதன் மனத்தால் நினைக்கிறான் - அதை அடைந்தும்- தேக பீஜங்களான பூத ஸூக்ஷ்மங்களுடன் சரீரத்தினின்றும் வெளியேறுகிறான். த்யுலோகம்-பர்ஜன்யம் (மேகம்) பூமி-புருஷன்.

யோஷித் (ஸ்திரி) இவைகளில் சிரத்தை ஸோம-விருஷ்டி அன்னம் ரேதஸ்-என்று ஐந்து ஆஹுதிகளைக் காரணித்து முடிவில்-" அப்புக்கள் "-(புருஷன் தேஹம் என்கிற சப்தத்தை அடைந்தவனாக)-அப்புக்களுடன் பரிவேஷ்டிதனாக ஜீவன் போகிறான். புல்லின் பூச்சி புல்லட்டையைப்போல - வரும் தேகத்தைப் பிடித்துக்கொண்டு - இருக்கும் தேகத்தை விடுகிறான் (இங்கு அப்புக்கள் - என்பது கேவலம் ஜலம் மாத்திரமில்லை - மற்ற மூன்றும் கலந்தனவாம் - தேஜஸ் அப்பு பூமி-இம்மூன்றின் காரியம்தான் தேகம். இவைகளையும் சொல்லப்பட்டதாகும். இன்னொரு விஷயம்-கேவலம் இஷ்டா பூர்த்தி தானங்களைச் செய்திடினும் - ஆத்ம ஞானம் இல்லாத போனால் - அவர்கள் தேவலோகத்தில் அனுபவிக்கிறார்களே யானாலும் - அவர்களைப் பசுக்களைப்போல தேவர்கள் நடத்துகிறார்கள். பஞ்சாக்னி வித்யையினால் ஞானத்தை அடையவேண்டும் பஞ்சாக்னி விக்ஞானம் (உபாஸனம்) இல்லாதிருப்பதினால்-அவன் ஸோம லோகத்தில் விபூதியை அனுபவித்துத் திரும்பிவருகிறான் - என்று சுருதி சொல்வதால் - சந்திர மண்டலத்திற்குச் செல்லுதலும்-போக மனுபவித்தலும் - சொல்லப்படுகிறது. போகங்களை அனுபவித்த பிறகு மீதமுள்ள கர்ம வாஸனையுள்ளவனாக அவன் மீண்டும் பூமிக்குத் திரும்புகிறான் - சுருதி ஸ்ம்ருதி வசனப்படி சரணா:- ரமணீய சரணா:- என்பதால் அனுஸயம் (கர்ம பாக்கி) சூசிக்கப்படுகிறது-என்று சூத்ரக்காரின் அபிப்ராயம். அனுஸயம் - எண்ணை வைத்த பாத்திரத்தில் ஒட்டியிருக்கும் பிசுக்கைப்போல - கர்மபாக்கி-பூமியின் மறுஜன்மத்திற்கு உபயோகப்படுகிறது. பாதிரி என்பவர் சரணா:- என்பதற்கு புண்ய பாபங்கள் சொல்லப்படுகின்றன என்கிறார்.

பரலோகமில்லை என்று வாதாடுபவனுக்கு - பெண், பொன் இவைகளே உலகமாகும். யமலோகத்தை அடைந்து - அவனுக்கு வசப்பட்டு துன்பமனுபவிக்கிறான். மனு வியாஸாதிகளின் வசனங்களே நமக்கு பிரமாணமாகும். எவர்களுக்கு வித்யையினால் சம்பாதிக்கப்படும் தேவயான கதியோ - இஷ்டா பூர்த்திதானத்தினால் அடையப்படும் பித்ருயானம் என்கிற மார்க்க கமனமும் இல்லையோ - அவர்களுக்கு கொசு-புழு முதலிய நீச ஐந்து ரூபமானதும்-அடிக்கடி ஜன்ம மரணங்களை அடைவிக்கின்றதுமான மூன்றாவது

மார்க்கம் சொல்லப்படுவதால் அவர்களுக்கு சந்திரலோக கமன மில்லை. சிலவிடங்களில் ஸ்திரி புருஷ சேர்க்கையின்றி 5-வது ஆஹுதியின்றி உற்பத்தி ஏற்படுகிறது. வியர்வையிலிருந்தும் (தேள்) பூமியைப் பிளந்தும் (மரம் etc.) போன்றவைகளுக்கு சரீரம் யேற்படுகிறது அல்லவா ?

இவ்விதம் சந்திரலோககமனம் ஏற்பட்ட புருஷனுக்கு (வித்வை யில்லாதபோதுல்) ஆகாசத்தின் ஸ்வரூபத்தையடைந்து - வாயு வாகமாறி - தூமமாகவாகிறான் - வ்ரீஹிகளை மண்ழவழியாக அடைகிறான் - வ்ரீஹியாதிகளினின்றும் வெளிவருதல் வெகு கஷ்டம். அப்படி வெளிவந்ததும் - அவைகளுடன் சம்பந்தப் பட்ட ஜீவன் ஸம்பந்தத்தை கர்ம்வியாபாரமின்றி - அனு சயத்துடன் ஜீவர்கள் அவரோஹிக்கிறார்கள் (இறங்குகிறார்கள்) சம்பந்தம் மட்டும்தான் ஜீவனுக்கு யேற்படுகிறது. அவன் மாறுவதில்லை. ஆகவே, அனுஸயிகளுக்கு வ்ரீஹியாதி ஸம்ஸ்லேஷம் (சம்பந்தம்) மட்டுமே சொல்லப் பட்டதாகும்.

ஸ்வப்னத்தில் ஜீவன் தேர் முதலியவைகளுக்குக் கர்த்தா வாக ஆகிறதில்லை. ஜாக்கிரதையில் எவ்வித வ்யாபாரமுமற்ற தாகச் செய்து அவன்தானே பூர்வ வாஸனையினுல் தேர் முதலிய வற்றை நிர்மாணம் செய்து கொண்டு - தனது புத்திவிருத்தி யினுல் ஸ்வரூப சைதன்யத்துடன் தூங்குகிறான். அத்தகைய ஜீவன் விழித்ததும் யஏஷு:- என்றதால் இந்த ஜீவனே கர்மங் களுக்கும் சொப்பனத்தில் காமங்களுக்கும் நிர்மாதாவாகச் சொல்லப்படுகிறான். அந்த ஜீவனுக்கு - ஜீவத்தன்மையை விலக்கி - தத்வமஸி என்கிற பிரும்மபாவம் உபதேசிக்கப்படுகிற தால் - ஸ்வப்னத்தில் பரமாத்மாவின் வியாபாரம் நம்மால் மறுக்கப் படுவதுயில்லை. அவன் எல்லா அவஸ்தைகளிலும் ஸர்வேஸ்வர னைப்படியால் - அதிஷ்டாதாவாக (நியந்தாவாக) இருப்பதே அதன் காரணமாகும். "ததநந்யத்வமாரம்பணசப்தாதிப்ய:" பிரு.சூத். (2-1-14) என்றவிடத்தில் எல்லாபிரபஞ்சமும் மாயா மாத்திரம் என்று விவரிக்கப்பட்டுமிருக்கிறது. பிரும்ம - ஜீவ ஐக்யம் ஏற்படுமுன்னம் - வியவஹாரிகதசையில் - ஆகாசாதி பிரபஞ்சமானது நிலைத்த உருவமுள்ளதாக விருக்கிறது.

ஸந்தியை (ஸ்வப்னமான சமயத்தில்) ஆஸ்ரயித்த பிரபஞ்சமும் ஒவ்வொருநாளும் பாதிக்கப்படுவதாக விருக்கிறது. அவித்யை யினால் மறைக்கப்பட்ட ஜீவனுடைய ஈஸ்வரஸமான தர்மமானது (தத்வமஸி) பரமாத்மாவின் தியானவிசேஷத்தினால் - அவித்யை நாசமாகி - மீண்டும் ஆவிர்பாவித்தை அடைகின்றது. அதனால் இந்த ஜீவனுக்கு பந்த மோக்ஷங்கள் யேற்படுகின்றன. இதனால் நெருப்பின் பொறியைப்போல் ஜீவன் பரமாத்மாவின் அம்ச மாகிறான். எப்படி கண்தோஷமாகிறதிமிரம் ஒஷதியினால் நீக்கப்படுகிறதோ - அதுபோல - பிரும்ம ஸ்வரூபம் ஜீவனால் அறியப்பட்டதும் மோக்ஷம் ஏற்படுகிறது - பந்தம் - விலகுகிறது. ஸர்வகிலேசங்கள் - பந்தங்கள் - ராகத்வேஷாதிகள் விலகுகின்றன ஸர்வபாசங்களும் நாசமடைகின்றன. ஜீவனுக்கு பரமாத்மாவை விட்டு வேறுபட்டிருத்தல் பொருந்தாது. "அந்த தேவதை ஆலோசித்தது" - என்று தொடங்கி - இந்த ஜீவனாகிற ஆத்மா வினால் (ஸ்வரூபத்தினால்) உள்ளில் பிரவேசித்து - என்கிறதால் "**ஆத்மா** என்கிற சப்தத்தால் ஜீவனைச் சொல்லியிருப்பதால் - ஸ்வேதகேதோ அதுஸத்யம் - அது ஆத்மா, நீ அதாக விருக் கின்றாய் என்பதினால் - ஜீவனையும் பொருட்டு ஈஸ்வராத்மத் வத்தை சாஸ்திரம் உபதேசிக்கிறது. ஆதலால் ஜீவன் ஈஸ்வரனை விட்டுவேறு பட்டவனல்ல. - அதாகவிருந்து கொண்டு தேக வியாபாரத்தினால் - த்ரோஹிதமான ஞானஐஸ்வர்ய முள்ளவனாக ஆகிறான். அதனால் அவனுக்கு ஸ்வப்னத்தில் தேர் முதலியவை களுக்கு ஸ்ருஷ்டி சொல்வது பொருந்தாது. ஒருவனும் கெட்ட ஸ்வப்னத்தை ஸங்கல்பிக்கமாட்டான் அன்றோ! ஜாக்ரித அவஸ்தையில் ஸ்வப்னத்துக்கு ஸத்யத்வத்தை ஸ்தாபிக்கிறது என எது சொல்லப்பட்டதோ - அது அந்த ஸாம்யம் கூறும் வசனம் ஸத்யத்வத்தைக கொண்டதன்று. அவ்விதமாகில் ஸ்வயம் ஜ்யோதிஷ்தன்மை விரோதமாகிவிடும். ஸ்வப்னத்தில் தேர் முதலிய வஸ்துக்களுக்கு அபாவமும் காண்பிக்கப்பட்டிருக் கிறது. இதனால் ஸ்வப்னமும் ஜாக்ரதத்தில் உண்டாகும் வாசனையினால் உண்டு பண்ணப்பட்டதாக - அதற்கேற்ப தோற்ற முள்ளது எனக்கருத்தில் கொண்டு - ஸத்யத்வம் (அவ்வசனம்) யேற்பட்டது. ஆகவே ஸ்வப்னத்திற்கு மாயாமாத்திரத்தன்மை யானது பொருத்தமானதாகும்.

ஸுஷுப்தியில் இந்திரியங்கள் ஓய்வுபெறுகின்றன. அப்பொழுது ஜீவன் ஸத் பதப்பொருளுடன் (பரமாத்மாவுடன்) கலந்தவனாகிறான். ஆயதனம் என்கிற பதம் ஏழாம் வேற்றுமையின் பொருளாகும். ஸத்தில் ஏகீபாவத்தை (ஒன்று பட்டிருத்தலை) யடைந்து ஸத்தில் ஸம்பத்தியை (ஒன்றுபட்டிருத்தலை) அடைந்தோமென எண்ணுகின்றனரில்லை-என்று சுருதியிருக்கிறது. ததபாவ: என்பதற்கு ஸ்வப்னத்தின் அபாவம்-அதாவது - ஸுஷுப்தி என்பது பொருள். நாடிகளிலும் புரீதத்திலும் பிரும்மத்தினிடமும் தூங்குகிறான்-என்பதால் ஸமுச்சயமும் தெரிவிக்கப்படுகிறது. அவ்விதமாயினும்-நாடிவாயிலாகவே பிரும்மத்தினிடம் நிலை பெறுகிறான்-எவனொருவன் கங்கையினால் கடலையடைகிறானோ அவன் கங்கையிற் சென்றவனாகவேயாகிறான். ஆகவே ஸுஷுப்தியில் அவன் பிரும்மத்துடன் ஒன்று பட்டவனாகிறான். அவனை ஒருவித பாபமும் பற்றுவதில்லை. தஹர உத்தரேப்ய (1-3-14-பிரும்ம சூத்ரத்தில்) ஹிருதயாகாசமே பிரும்மத்வம். ஆகவே பிரும்மம் ஒன்றே ஸுஷுப்தி ஸ்தானமாகிறது. சுஷுப்தியில் "ஸ்வம் (தன்னை)யடைந்தவனாகிறான்-ஸ்வம் என்பது ஆத்மா சொல்லப்படுகிறது. ஸ்வரூபத்தையடைந்து ஸுப்தனாகிறான். ஒருபொழுதும் ஜீவனுக்கு ஸம்பத்தியானது (ஒன்றுபட்டிருத்தலானது) இல்லை என்பதில்லை. ஸ்வரூபத்திற்கு அபாவம் (இல்லை அழிவு) இல்லாதிருப்பதே அதன் காரணமாகும். ஸ்வப்ன ஜாக்ரத்தசைகளில் உபாதி ஸம்பந்தத்தால் பிறவற்றின் ஸ்வரூபாபத்தியிருப்பது போன்ற தோற்றத்தை அபேக்ஷித்து ஸுஷுப்தியில் அந்த உபாதி ஒடுங்கி - ஸுஷுப்தியில் ஸ்வரூபாபத்தி (ஸ்வரூப ப்ராப்தி) யேற்படுகிறது. ஆகவே ஸுஷுப்தியில் ஒரு சமயம் ஒன்றுபட்டவனாகவும் - இன்னொரு சமயத்தில் ஒன்றுப்பட்டவனாகவும் ஆவதில்லை என்பது சரியில்லை. மேலும் ஒன்றுபட்டபோது-" எதைக் கொண்டு எதைக் காணக்கூடும்" என்கிற சுருதிவசனம் இருப்பதால் - ஸத்தில் (ஸத்பதப் பொருளில் ஒன்றுபட்டதினால் (விசேஷ) அறிவற்றவனாகவும் ஆகிறான் என்பதும் சரியாகும். ஜீவனுக்கு உபாதியினால்தான் பரிச்சின்னத்வம் யேற்படுகிறது. ஸுஷுப்தியில் அந்தக் கரணங்கள் மனதுடன் ஒடுங்கிவிடுகின்றன-உபசாந்தமாக ஆகின்றன. ஆகவே பிரும்மமே ஸுஷுப்தியின் ஸ்தானம். அத்தகைய விக்ஞானத்தினாலே ஜீவனுக்கு பிரும்ம ஜீவ நிச்சயமும்-ஸ்வப்ன ஜாக்ரத வியவ

ஹாரங்களின்று விடுபட்டவனாகி விடுவதால் - ஆத்மாவே ஸுஷுப்தி ஸ்தானமாகும். நெருப்பின் சிறிய பொறிகளைப்போல் ஸத்தினின்று வெளிவந்து - ஸத்தினிடமிருந்து வந்தோமென அறிகின்றனரில்லை - என்கிற சுருதி வசனப்படி ஆத்மாவேதான் ஸுஷுப்தி ஸ்தானமாகும்.

அவ்விதமாகுமானால்-ஸுஷுப்தியிலிருந்து நியமமின்றி எவன் விழித்தெழுகின்றானோ - அவன் கர்மம் அவித்யை இவற்றின் மூலம் பரிச்சேதம் ஆகி - உபாதிக்குத் திரும்பிவருவதும் - சாஸ்திரம் அவ்விதம் உபதேசித்திருப்பதாலும் - தூங்கினவனேதான் விழித்தெழுகின்றான் என்பதாகும். முந்தின தினத்தில் நான் அதைக் கண்டேன்-அந்த நானே எழுந்து விவகாரம் செய்கிறேன்- வேறு ஜீவனும் எழுந்தவனாகமாட்டான் - முக்தியடைந்தவனை யும் சொல்லாது. அவித்யை நிவிருத்தி அவன் விஷயத்தில் யேற்பட்டுவிட்டது. ஈஸ்வரனை எழுந்திருப்பதாகவும் சொல்ல முடியாது - இதற்குக் காரணம் ஈஸ்வரன் அவித்யை அற்றவராக அவர் இருப்பதே காரணமாகும். வேறு ஜீவனாகுமானால் - கர்ம பலனாக ஸம்பவிப்பது இல்லாது போகிறது. அதனால் தூங்கின வனே எழுந்திருக்கிறான். ஸத்பதப் பொருளே உபாதியினால் ஜீவன் என உபசார முறையாற் கூறப்படுகிறான். அவன் பரமாத்மாவைவிட வேறுபட்டவனாக ஒருபோதும் ஆவதில்லை. ஆனால் உபாதியின் சேர்க்கையினால் அவனுக்குப் பந்தத் தொடர்பு எதுவரை இருக்கிறதோ - அதுவரை ஜீவன் ஒருவனே என்கிற வியவஹாரம் யேற்படுகிறது. பீஜாங்குர நியாயத்தினால் - இந்த உபாதியானது தூக்கம் - ஜாக்ரதை இவற்றிலுமிருப்பதால்-அதே ஜீவன் விழித்து எழுகிறான் என்பது சித்தாந்தமாகிறது.

இதேமாதிரி மூர்ச்சை அவஸ்தையிலும் - ஆத்மாவை - பாதி ஸுஷுப்தன் என்று சொல்லவேண்டியிருக்கிறது. மூர்ச்சை - ஜாக்ரதையாகவோ - ஸ்வப்னமாகவோ ஆகமாட்டாது. (மோஹத்தினால் மூர்ச்சையாகிறது) அதில் த்வைதத்தோற்ற மின்மை காரணமாவதால் - ஜாக்ரதை - ஸ்வப்னம் இவற்றுள் ஒன்று இது ஆகாது. இது தனிப்பட்ட அவஸ்தையாகும். சரீரத்தைவிட்டு வெளியேறுதலாகிற மரணவஸ்தை என்பதும்

ஒரு அவஸ்தை. ஸ்ருதியிலும் ஸ்மிருதியிலும் ஜீவனுக்கு ஐந்தா வதான அவஸ்தை காணப்படவில்லை. அதனால் பூர்வபக்ஷி சொல்கிறான். " இந்த நான்குக்குள் மூர்ச்சை ஒன்றுதான். சித்தாந்தம் - உயிர், சூடு இரண்டு இருக்கும்வரை மரித்தவனாக மாட்டான். ஸீஷுப்தியென்றும் அதனால் சொல்லமுடியாது. மூர்ச்சையில் அவனுக்கு இந்திரியங்கள் வேலை செய்கின்றன. கண்கள் விரிந்தபடி-தேகம் நடுங்குகிறபடி-கால அளவுடன் மூச்சு விடுதல்பற்றி-மரணமில்லை. மனது வேலை செய்யாது. அறிவற் றிருப்பது பற்றி ஸீப்தன் என்றும்-பாதி ஸுஷுப்தியெனவும் சொல்லும்படியிருக்கிறான். சுகி-துக்கி என்கிற எண்ணங்கள் ஸுஷுப்தியில் எவ்விதமில்லையோ-அது போல் மூர்ச்சித்தவனிடத் திலுமில்லை. மூர்ச்சை மரணத்திற்குத் த்வாரமாகவிருக்கிறது. எப்போது கர்மபந்தம் நாசமாகிறதோ - அப்போது தேக மரணம் யேற்படுகிறது. எப்போது கர்மம் பாக்கியுள்ளதோ - மனம் வாக்கு மீண்டும் வேலை செய்யத் தொடங்குகின்றன. ஆனதால் அர்தித ஸம்பத்தியைப் (பாதி ஸீஷிப்தியை) மூர்ச்சைக்கு, பிரும்ம வித்துக்கள் சொல்லுகின்றனர். இதனால் பிரும்மத்துடன் பாதி ஸம்பத்தி ஏற்படுகிறது என்கிற அர்த்தமில்லை. ஸீஷுப்தியின் ஒருபகுதியினாலும் - வேறு அவஸ்தையின் பகுதி ஒன்றினாலும் ஏற்படுகிறது என்று சொல்லுகிறோம் - இதுதான் சித்தாந்தம். இதனால் இது ஐந்தாவது அவஸ்தையென்று கணக்கிடப்பட வில்லை.

இதுவரை த்வம் என்னும் பதத்திற்கு ஜாக்கிரம் ஸ்வப்னம் ஸீஷுப்தி முக்தம் என்பவைகளைக்கொண்டு ஸம்பந்தம் சொல் லிற்று. இனி தத் பதலக்ஷ்யார்த்தமானது விளக்கப்படுகிறது - உபயலிங்காதி கரணத்தில் இதில் பிரும்மம் நிர்குணம் என்று சொல்லப்படுகிறது.

எல்லா உபநிஷத்துக்களும் பிரும்மம் நிர்குணம் என்று உபதேசித்திருப்பதாலே - பரமாத்மாவுக்கு பிருதிவ்யாதி உபாதி மூலமாகவும் - இயற்கையாகவும் உபய (ஸகுணம் - நிர்குணம் என்றும்) அதாவது ரூபாதி விசேஷங்களுடன் கூடினது என்றும் ரூபாதி விசேஷங்களற்றதென்றும் சொல்லப்படுவதால் லிங்கம்

இத்திக்கிறது-ஸ்ருதிகள் ஸவிசேஷத்துடன் கூடியவைகளாகவும் - ஸ்தூலத்தைவிட வேறுபட்டவர் அணுவைவிட வேறுபட்டவர் - ஹ்ரஸ்வத்தைவிட வேறுபட்டவர் - என்பது நிர்விசேஷத்துடன் கூடியதாகவும் இருக்கிறது ; (ஸவிசேஷ ஸ்ருதிகள் - எல்லாக் கர்மத்தையும் செய்பவர்-எல்லாக் காமமுடையவர் - எல்லாக் கந்தமும் உடையவர் இத்யாதி.) சித்தாந்தம் என்னவென்றல் - பிரும்மத்துக்கு இயற்கையாகவே இரண்டு உருவமுள்ளது-ஒரே சமயத்தில் நிர்த்தாரணம் செய்யவியலாதபடியால் - முரண்பாடு உண்டாவதால் ; மேலும் பிருத்வி முதலிய உபாதியின் சேர்க்கை மூலம் இருவித உருவமுள்ளதாக விருப்பதும் பொருத்தமில்லாத படியால் ஸ்படிகம் வெள்ளையாஞலும் – உபாதியாகிற செம் பருத்தம் பூவிஞல் சிவப்பை அடைவது போல - ஸவிசேஷம் என்று சொல்லக் கூடுமாஞலும் - இயற்கையிலே நிர்விசேஷமே - விசேஷமுற்ற நிர்விகல்பம் என்று கொள்ள வேண்டுமேயன்றி - ஸவிசேஷமாகச் சொல்லக்கூடாது. பிரும்மத்தின் ஸ்வரூபத்தைக் கூறும் "சப்த மற்றது-ஸ்பர்சமற்றது. ரூபமற்றது-இம்மாதிரி எல்லாவாக்யங்களும் பிரும்மத்தை விசேஷமுமற்றதாகச் சொல் கின்றன உபாதி பேதம் ஏற்படும்தோறும் - பிரும்மத்துக்கு அபேதத்தைச் சாஸ்திரம் உபதேசிக்கிறது. ஒவ்வொரு உபாதிக்கும் பிரும்மத்துக்கு அபேதத்தையே உபதேசிக்கிறது. உபாஸனைக்காக பேதம் ஏற்பட்டாலும் - அபேதத்தில் சாஸ்திரத் துக்கு தாத்பரியமிருப்பதால்-அதன் (நிர்விசேஷத்திற்கு) காரண மாகும். நிர்விசேஷ வாக்யங்கள்—"புருஷன் திவ்யனும் அமூர்த் தனுமன்ரே? உள்ளும் வெளியும் கலந்திருப்பவனும் அஜன மன்ரே? இந்த பிரும்மம் அபூர்வம் (தனக்கொரு காரணமுமற்றது) அநபரம் (தனக்குக் காரியமுமற்றது) அபாஹ்யம் (தனக்கு வெளிப் பட்டதாயுள்ளது) எதுவுமற்றது - ஸர்வாநு பூ: - எல்லாவற்றை யும் அனுபவிக்கின்ற அயமாத்மா இந்த பிரத்யசகாத்மாவே பிரும்மமாகும். இந்த வாக்யங்கள் பிரபஞ்ச சம்பந்தமற்ற பிரும் மாத்ம தத்துவத்தைப் பிரதானமாகக் கூறுமே ஒழிய - வேறு பொருளை முக்கியமாகக் கூருது. ஸகுண பிரும்ம பரவாக்யங்கள் உபாஸனுவிதியைய முக்கியமாகக் கொண்டவை. பிரும்மத்தைப் பிரதானமாகச் சொல்லவந்தவையல்ல. ஆகவே முரண்பாடு எதுவு மில்லாதபோது, ஸ்ருதி சொல்லியிருப்பதற்க் கேற்றபடியே

பொருள் கூறவேண்டும். முறண்பாடு யேற்படுமாகில் பிரும்மத்தைப் பிரதானமாகச் சொல்லும் வாக்கியங்கள் பலியஸ் - பிரும்மத்தை முக்கியமாகச் சொல்லாத வாக்கியங்களைக் காட்டிலும் பலீயஸ்; உபாஸனுவிதியைச் சொல்வதாலே - வலுப்பெற்றனவாகின்றன. ஆகவே கூட பிரும்மம் ஆகாரமற்றது - நிர்விசேஷமே.

பிரும்மம் பிருத்வியாகிற உபாதி சம்பந்தத்தால் அந்த உபாதி ஸம்பந்தத்தை யொட்டி - பிரும்மத்துக்கு உபாஸனைக்காக - ஆகார விசேஷ உபதேசம் ஏற்படுமாகில் - ஒருவித விரோதம் வருவதற்கில்லை. உபாதியினுல் ஏற்படுவது வஸ்துவின் தர்மமாக ஆகாது. அனுதி ஸித்தமாக அவித்யையிருக்கும்பொழுது - லோக - வேத வ்யவஹாரம் யேற்படுகிறது. ஸ்ருதியும் பிரும்மத்தைச் சொல்லும்போது சைதன்ய மாத்திரம் என்று சொல்லியிருக்கிறது. உப்புச்கட்டியைப்போல (இந்த விஷயம் முந்தி "தத்து ஸமன்வயாத்" என்ற விடத்தில் சொல்லப்பட்டது. உள்ளும் வெளியும் அறிவுருவமாகவே தானுகிறது என்பதாம். சைதன்யமேதான் ஆத்மாவின் உருவமாகும். नेति नेति - இவ்விதமில்லை - என்று வேறு ரூபத்தை நிஷேதிக்கும் வாயிலாகவே - உபதேசிக்கிறது. அறியப்பட்டதைக் காட்டிலும் வேறுபட்டதாகவும் அறியப்படாததைக் காட்டிலும் வேறுபட்டதாகவும் ஆகும். என்றும்; வாக்குக்கள் மனத்துடன் கூட (அதை) அடையாதனவாய் எங்கிருந்து திரும்புகின்றனவோ - என்றுமாம்; பாஷ்கலி என்ற மஹரிஷியினுல் கேட்கப்பட்டவராக - பாத்வர் என்ற மகரிஷி - மௌனத்தாலே - பிரும்மத்தை உபதேசித்தார் என்று சுருதி சொல்கிறது. "நாம் உபதேசிக்கத்தான் செய்கிறோம்" என்று மூன்று தடவைகள் சொன்னதாகவும் சுருதி சொல்லுகிறது. இந்த ஆத்மா உபசாந்தமானது - சப்தாதிவிசேஷங்களுமற்றது என்றுர். பிரும்மம் - க்ஞேயமான பொருள் எது விருக்கிறதோ - எதை அறிவதினுல் அம்ருதத்தை அடைகிறோமோ - அதைச் சொல்கிறேன் என்று தொடங்கி - பிரும்மம் ஆதியுள்ளதுமன்று - ஸத்தாகவும் சொல்லப்படாதது, அது அஸத்தாகவும் சொல்லப்படாதது. ஸ்மிருதியில் நாராயணர் நாரதருக்கு உபதேசிக்கையில்" என்னை எல்லாப்பூத குணங்களுடனும் கூடினவராக்

பார்ப்பது யாது உண்டோ - அது என்ருல் சிருஷ்டிக்கப்பட்ட மாயையாகும். உண்மையில் என்னை இவ்விதம் (ஸர்வபூதகுணங்களுடனும் கூடினவராக) அறிவது பொருத்தமற்றதாகும். நிர்குணபிரும்மமாதலால் - பாரமார்த்திக ஸ்வரூபத்தை மனத்திற்கொண்டு - ஜலத்திற்காணும் சூரியபிரதிபிம்பம்போல உவமை மோக்ஷசாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருப்பதால் — **ஒருவனே** பலவாறு பிரிந்துள்ள ஜலங்களில் (தடாகம் - கிணறு கிண்ணம்) பலவாறு காணப்படுகிருன் - இவ்விதமே பிறவியற்றவனும் ஸ்வயம் பிரகாசனுமான இந்த ஆத்மா ஒவ்வொரு க்ஷேத்ரத்திலும் உபாதியினுல் வேறுபட்டவனுக - ரூபமுள்ளவனுக செய்யப்படுகிருன் - அந்தந்த பூதங்களிலுமிருக்கின்ற ஒரு பூதாத்மாவே ஜலத்தில் காணும் சந்திரனைப்போல ஒருவிதமாகவும் பலவிதமாகவும் காணப்படுகிருன். இதற்கு ஆட்சேபம் - ஆத்மாவே மூர்த்தனல்லன் (உருவமில்லை) உபாதிகளோ இவனைக் காட்டிலும் வேறுபட்டனவாகவோ - வேறு தேசத்திலிருப்பனவாகவோ - வில்லை. ஆத்மா எங்கும் நிறைந்ததாகவும் - எதிலும் வேறுபடாததாகவும்மிருப்பதே அதன் காரணமாகும், இவ்விதம் ஆட்சேபிப்பது சரியில்லை - சூரியதிருஷ்டாந்தம் சாஸ்திரத்தில் சொல்லப்பட்டதாகும். மண் சட்டியில் காணப்படும் ஜலம் - அழுக்கோடு அல்லது அசையும்படி-காணப்பட்டால் அந்த தோஷம் சூரியனைச் சேராது. சூரியனுக்கு அத்தகைய தர்மம் இருக்காது. ஹ்ரஸ்வம் (குட்டை) நீளம் இத்யாதி தர்மங்கள் மண் சட்டியிலிருக்கும் ஜலத்தில் காணலாம். சூரியனிடம் காணப்படாது. விருத்தி ஹ்ரஸ்வம் சூரியனை அடையாது. பரபிரும்மத்துக்கு சுருதிகளிலே தேகம் முதலிய உபாதிகளின் நிமித்தமாக அநுபிரவேசத்தை சாஸ்திரம் உபதேசிப்பதைக் கொண்டு - "அத ஏவ சோபமா ஸீர்யகாதிவத்" என்பது பொருத்தமே. ஆகவே நிர்விகல்பமான ஒரே லிங்கமுள்ளதாக பிரும்மம் ஆகுமேயொழிய உபயலிங்கமுள்ளதாகவோ - விபரீதலிங்க முள்ளதாகவோ ஆவதற்கிடமில்லை.

இங்கு சந்தேகம் எழுமாறு சிலர் இரு அதிகரணங்களைக் கற்பிக்கின்றனர். ஸமஸ்த பிரபஞ்சமும் இல்லாதபோது - பிரும்மம் ஏற்பட்ட பின்னர் - பிரும்மம் ஸத்ரூபமா - சித்ருபமா-

அல்லது ஸத்சித் ஆகிய இரண்டுருப முள்ளதா? பிரும்மம் ஸத் என்றும் - சித்கனமானது என்றும் சொல்லப்பட்டிருப்பதால் சுருதி களிலே - பிரும்மம் இருரூபமுள்ளது என்று சொல்லப்போமா கில் - நிர்விசேஷ பிரும்மத்துக்கு விரோதம் உண்டாகும். ஸகுணதன்மை ஸபிரபஞ்சத்வமானது யேற்படும். இவ்விதம் சுருதி வாக்யங்கள் இரண்டு பக்ஷங்களுக்கு மிருப்பதால் - ஒரு சுருதிவிட வேண்டுவது - ஒரு பக்ஷசுருதிகளைவிடுவது அவசிய மாகிறது. பிரும்மத்திற்கு ஆகாரத்தை (ரூபத்தை) சொல்லும் வாயிலாக - அனுகாரத்தை (ரூபமில்லாமலிருப்பதும்) அறிவிப் பதில் பயனுள்ளனவே. ஆனுல் அவ்விதம் கூறுதல் சரியாகாது - ஏனெனில் - நிர்குண பிரும்ம ஞானத்தை உபதேசிக்கு மிடத்தில் - ஜீவபாவத்தை அடைந்த ஈஸ்வரனுக்கு - அஸ்ய - யுக்தঃ தேரில் கட்டப்பட்ட குதிரைகள்போல ஹி, யாது காரணம் பற்றி ஹரய; இந்திரியங்கள் ஸதா - நூற்றுக் கணக்காகவும் - தஸ — பத்துக் கணக்காகவும் இருக்கின்றனவோ — அக்காரணம் பற்றி - இந்திர: (இந்திரனை ஆத்மா) மாயாபி:- (விஷயவிக் ஞானங்களால்) புருரூப - வெகு ரூபமுள்ளவனுக ஈயதே - அறியப்படுகிறுன். அதாவது விஷயங்களாலும் அவற்றை யறியும் இந்திரியங்களாலும் ஒரே பிரும்மம் பலரூபமுள்ளவனுக அறியப்படுகிறதே ஒழிய - சுத்தசைதன்யத்தாலன்று என்று கருத்து). பிரக்ஞானகனமான இந்த ஆத்மா ஒன்றுதான். விஷயங்களால் வேறு பட்டவனுக தோன்றுகிறுன். லயம் பிரும்மத்தினிடம் சொல்லும்போது - ''அந்த இவையாவும் தனக்கொரு 'காரணமற்றதும், தனக்கொரு காரியமற்றதும் - தனக்கிடையில் வேறு ஜாதியற்றதும், தனக்கு வெளியில் ஏதுவும் அற்றதுமான பிரும்மமேயாகும் - என்று பிரகரண முடிவில் கூறியிருப்பதே - அதன் காரணமாகும்.

உபாஸனைக்காக - சிலவிடத்தில் கிரமமுக்தியும் சிலவிடத்தில் ஐஸ்வரியம் பிராப்திக்காகவும்-பலன் சொல்லப்பட்டிருப்பதால் - இத்தகைய உபாஸனு வாக்கியங்களுக்கும் பிரும்ம வாக்யங்களுக் கும் வெவ்வேறுன பொருளுள்ள தன்மை சொல்லுதல்தான் நியாயம் - அதனுல் ஒரே பொருள்தான் ஏகவாக்யத்வம்-என்பது சித்திக்காது. பிரும்ம வாக்கியங்களில் விதியில்லாதிருப்பதே

காரணமாக - ஒரே பயனுள்ள விதியின் தோற்றம் (ஏக நியோகப் பிரதிபத்தி) யேற்படாது - பிரும்மத்தைச் சொல்லும் வாக்யங்கள் பொருளை உபதேசிப்பதைத் தவிர-அதோடு முடிவடைகின்றதே ஒழிய, விதியை உபதேசிக்கின்றனவன்று - என்று தத்துஸமந்வயாத்என்பதில் விளக்கப்பட்டது.

மேலும் நாம் ஆட்சேபிப்பது-விதி இருக்குமாயின் எவ்வித விஷயமான விதி என்று பதில் சொல்லவேண்டியிருக்கும். பிரும்மத்தை அறிய விருப்பமுள்ள ஜிக்ஞாஸுவுக்கு, அதற்கு விரோதியான பிரபஞ்சம் தோன்றக்கூடாது, தோற்றமறச் செய்யவேண்டியது. காரணப் பொருளோ காரியத்தின் ஸ்வரூபமாகிறது. ஆனதால் காரியநாசம் யேற்படினும் காரண நாசமோ லயமோ - உண்டாவதில்லை. பானை உடைந்தாலும் மண் காணப்படுகிறதல்லவா? அதுபோல பிரபஞ்சம் பிரும்ம ஸ்வரூபமே ஒழிய - பிரபஞ்சத்தின் ஸ்வரூபம் பிரும்மம் ஆகாது. அதனால் நாமரூப பிரபஞ்ச பிரவிலாபநத்தினால் பிரும்ம தத்வக் ஞானம் உண்டாகிறது (பிரவிலாபனம்-தோன்றாமல்). இதற்குப் பதில்-பிரும்மத்தை அறியும்போது - அவித்யையினால் அத்யஸ்தமான (ஆரோபிக்கப்பட்ட) பிரபஞ்சத்தை நிராகரணம் செய்யவேண்டியது, எப்படி யெனில் சுருதி சொல்கிறது. ஏகமேவாத்விதீயம் பிரும்ம; தத் ஸத்யம் ஸ ஆத்மா தத்வமஸி. வாக்ய ஜன்ய ஞானத்தினால் பிரும்மம் அறிவிக்கப்பட்டதும் - வித்யை தானாகவே ஏற்படுகிறது. அதனால் அவித்யை நாசமடைகிறது. அதனால் நாமரூப பிரபஞ்சம் ஸ்வபன பிரபஞ்சத்தைப் போல நாசமாகிறது. இரண்டும் சித்திக்கிற காரணத்தினால் அதே விஷயம் மீண்டும் செய்யப்படாமல் போகிறது போல - பழுதையின் ஸ்வரூபத்தைப் பிரகாசப்படுத்துவதால் ஸர்ப்பாதி பிரபஞ்ச பிரவிலயமும் (நாசமும்) யேற்படுகிறது. ஆகவே அறியப்படவேண்டிய பிரும்மத்தை - த்ரஷ்டவ்ய: என்பதால் தத்துவ நோக்கைச் செய்வதில் கருத்துள்ளனவேயன்றி தத்வஞான விஷயமான விதியை முக்கியமாகக் கொண்டவை அல்ல. ஞானத்தையே செய் - என்கிற உபதேசமிருப்பதாகக் காணப்படவில்லை. ஞானத்திற்கு விஷயமான பொருள் மட்டும் தான் காட்டவேண்டியது. அவ்விஷயம் காண்பிக்கப்பட்டதும்

விஷயத்துக்கு ஏற்ப பிரமாணத்துக்கு யேற்ப - ஞானம் தானாகவே உண்டாகிறது. ஞானம் விதியினால் செய்யக்கூடிய தன்று. அது புருஷதந்திரமாக (புருஷனை எதிர்பார்த்து யுண்டாவதாக) இல்லாததுடன் - வஸ்து தந்திரமாகவும் (பொருள் இருப்பதற்கு யேற்ப உண்டாகிறபடியால்) இருக்கிறது. ஆகவே ஞானத்தில்விதி ஏற்படுவதற்கிடமில்லை. வேதம் விதியையே முக்கிய நோக்காகக் கொள்ள வந்ததன்று. அவித்யையை பற்றிய ஜீவனை ஞானத்தில் ஏவுமானால் - அந்த சாஸ்திரம் முரண்பாடுள்ள இருதத்வங்களை உபதேசித்ததாகும். சாஸ்திரத்துக்கு விதிபரத்வம் சொன்னாலோ - ஒரு பொருளை எடுத்துக் கொண்டு மற்றொரு பொருளைத் தள்ளுதல் - ஆகிற தோஷங்கள் வரலாம். ஆகவே பிரும்ம வாக்யங்கள் அபரோக்ஷ ஸாக்ஷாத் காரத்தில் மட்டும் நோக்குடையனவேயன்றி அவை விதியில் நோக்குடையனன்று. ஆகையால் ஒரே விதியின் தோற்ற மேற்படுவதின் மூலம் ஒரே பொருளுள்ள தன்மை சொல்வது சரியில்லை.

எவ்விதமாயினும் நிர்குணம்-ஸகுணம் என்று சொல்லப்படும் போது - ஏகவாக்யத்வமானது (ஒரே பொருளை உடைத்த தன்மை) யேற்படாது. ஒரே தர்மியான வஸ்துவினிடத்தில் முழு பிரபஞ்ச பிரவிலாபநமும் (தோற்றமும்) பிரபஞ்சத்தினது ஏகதேசமிருத்தலும் என்ற இது பொருந்தக்கூடியதாகவாகாது. ஆகையால் ஆகாரமுள்ளதாகவும் ஆகார மற்றதாகவுமுள்ள உபதேசங்களுக்கு - ஒன்றைவிட்டு ஒன்றைச் சொல்வதுதான் - சரியான விபாகமாகும் - பொருந்தும். அதனால் பிரும்மம் நிர்விசேஷமே.

**नेति नेति** - என்கிற பிரும்ம உபதேசத்தினால் - இவ்வளவு என்று வகுத்துக்காட்டப்பட்ட மூர்த்தா அமூர்த்தா என்கிற பிரும்மத்தினது ரூபம் யாதுண்டோ அதையே, மறுத்துக் கூறு கிறது. அதற்குப் பிறகு திரும்பவும் மூர்த்தா அமூர்த்தப் பிரபஞ்சத்தைக் காட்டிலும் வேறாக ஒன்றிருக்கிறது என்கிற உபதேசமுமிருக்கிறது. இதனால் **नेति नेति** - என்பதால் - பிரும்ம மும் ஜகத்தும் ஆகிய இரண்டும் நிஷேதிக்கப்படுகின்றனவா-

என்கிற பூர்வபக்ஷத்திற்கு - ஸித்தாந்தம். ஸத் - த்யத் என்று சொல்லப்படும் மூர்த்தாமூர்த்த பிரபஞ்சத்தைக் காட்டிலும் முக்காலத்திலும் அழிவில்லாத பிரம்மம் ஒன்றே மூடிவிடமாக (அவதியாக) எஞ்சி நிற்கிறது - என்பதாம். மூர்த்தா மூர்த்தம் அழிவடைந்தாலும் - பிரும்மம் ஒன்றே அழியாதபடி நித்யமாக விருக்கிறது. இந்த மூர்த்தாமூர்த்தங்கள் இரண்டுமே பிரும்மத்தின் ரூபங்களாகும். மூர்த்தம் அமூர்த்தம் இவை பிரும்மத்தின் ரூபங்க ளாகும் என்று தொடங்கி-ஐந்து மஹா பூதங்களில் பிருத்வி அக்னி அப்பு மூன்றும் மூர்த்தமென்றும் ஆகாசம் வாயு அமூர்த்தமென்றும் இவ்விதம் இரண்டாகப் பிரித்து புருஷ சப்தத்தால் சொல்லப் பட்ட அமூர்த்தத்தின் ஸாரத்துக்கு (மஞ்சள் நிறம்) முதலிய ரூபங்களைக் காண்பித்து-பிறகு படிக்கப்படுகிறது - பிரபஞ்ச உப தேசத்திற்குப்பிறகு நிஷேதத்திற்கு வேண்டிய பிரும்மத்தினிடம் பிரபஞ்சம் ஆரோபிதம் செய்யப்பட்டிருப்பதால் नेतिनेति-இதில்லை இதில்லை என்கிற ஆதேசம் நிஷேதத்தினுல் உபதேசிக்கப்படுகிறது. "இதில்லை" என்பதைவிட வேருன உபதேசமுறை ஒன்றுமில்லை என்பதாம். இந்த நிஷேதத்தினுல் கூறப்படுவது யாதென்ருல் - இதுதான் அது என்று தனித்துக் கூறக்கூடிய மறுக்கப்படும் பொருள் ஒன்றும் இல்லையன்ரே ? இவ்விடத்தில் இதி என்பதால் நிஷேதிக்கப்படும் பொருள் ஒன்று காட்டப்படுகிறது - ஏன் - நேதி நேதி-என்பதாய் நஞ்-பிரயோகமானது இதி என்றதை பரமாகக் கொண்டிருப்பதால் என்க. இதி-இவ்விதம்-ஏவம்-என்கிறபடி - ; முன்னுள்ள பிரகரணத்தை ஒட்டி அதன் விரிவுடன் கூடிய பிரும் மத்தின் இரண்டு ரூபங்களும் - இவை எதனுடையதோ - அந்த பிரும்மமே ஸந்நிஹிதமாக (முன்னர் கூறப்பட்டதாக) காணப்படு கிறது. இதனுல் சந்தேகம் ஏற்படுகிறது - இந்த நிஷேதம்-பிரபஞ் சம்-பிரும்மம் ஆகிய இரண்டையும் நிஷேதிக்கிறதா அல்லது - ஒன்றை மாத்திரமா-அதாவது பிரும்மத்தை இல்லையென்று நிஷே தித்து-இரண்டாவதான பிரபஞ்சத்தை (ரூபங்களை) மிச்சப்படுத்து கிறதா ? அல்லது ரூபங்களை நிஷேதித்து - பிரும்மத்தை மிச்சப் படுத்துகிறதா ? नेति-नेति என்று இருதடவைகள் சொல்லப்பட்ட தால் இரண்டையுமே நிஷேதிக்கிறது-இரண்டு நிஷேதங்கள் இருப் பதால் - ஒன்றினுல் அதைப்பற்றின விசேஷத்துடன் கூடின பிரும் மத்தின் ரூபமும் மற்ருென்றினுல் ரூபமுள்ள பிரும்மமும் மறுக்கப்

படுகிறது என்கிற எண்ணம் உண்டாகிறது; அல்லது ரூபமுள்ள பிரும்மமே மறுக்கப்படுகிறது. அந்த பிரும்மம் வாக்குமனத்திற்கு எட்டாதபடியிருப்பது நிஷேதிக்கக் தகுதியுள்ளதாக விருக்கிறது. ரூபபிரபஞ்சமோ - பிரத்யக்ஷத்திற்கு விஷயமாதலால் - நிஷேதிக்கத்தகுந்ததில்லை. இரண்டு தடவை படித்தலோ - அப்யாஸமேர் - ஆதரவினுல் சொல்லுகிறேம். இது பூர்வபக்ஷம். ஸித்தாந்தம் யாதுயெனில் - ரூபம்-ரூபமுள்ள பிரும்மம் ஆகிய இரண்டையும் நிஷேதிப்பது சரியில்லை. சூன்ய வாதம் வரக்கூடியதே அதன் பொருள். உண்மை நிலையயுடைய ஒன்றை பற்றிக்கொண்டு - உண்மை நிலையில்லாத மற்றொன்று மறுக்கப்படுகிறது என்பது சரியாகும். பழுதை பாம்பு-என்பதைப்போல - ஒன்று மறுக்கப்பட்டால் இன்னொன்று இருக்கிறதென்பது சரியாகும். இரண்டையும் மறுத்தால் எஞ்ஜியிருக்கும் பொருள் இராது. இராதபோது எதுமறுக்கப்படுகின்றதோ - அது மறுக்கவியலாதிருப்பதுபற்றி - அதற்கே பரமார்த்தத்வம் (உண்மையாகவிருத்தல்) பிராப்தமாவதால் மறுத்தல் ஏற்படாது.

பிரும்மமானது நித்ய சுத்த முக்த ஸ்வபாவமுள்ளது. பிரத்யகாத்மாவாகாததும் விஷயத்திற் சேராததாகும். இதனுல் ரூபபஞ்சத்தை மறுத்து - பிரும்மத்தை மிச்சம் படுத்திக்காட்டுகிறதென்பதாம். இவ்வளவு என்று கூறப்படும் மூர்த்தா மூர்த்த ரூபமான பிரும்மத்தினது ரூபமுண்டோ - இதை நேதிநேதி என்கிற சப்தம் மறுக்கிறது. வாசாரம் பணசப்தாதிகள் முலம் உண்மையில்லாமதிருத்தல் அதை நேதிநேதி என்பதால் மறுத்தது. லோக பிரசித்தமான மூர்த்தா மூர்த்த ரூபங்களை பிரும்மத்தினிடத்தில் கற்பிக்கப்பட்ட இந்த இரண்டு ரூபங்களையும் மறுக்கின்றன. முதல் நேதி பூதக்கூட்டங்களை மறுக்கின்றன இரண்டாவது நேதி வாஸனராசியை மறுக்கிறது. அல்லது நேதி நேதி என்ற இது இரண்டு தடவை கூறப்பட்டதாகும் (வீப்ஸையாகும்). நேதி நேதி - என்பதால் இந்த பிரும்மத்தைக் காட்டிலும் வேறுபட்ட பொருள் இல்லை என்ற காரணத்தால் - இது இல்லை என்று உபதேசிக்கப்பட்டதே ஒழிய பிரும்மமே இல்லை என்பது பொருளல்ல; அதையும் சுருதியானது "வேறுபட்டதும் மறுக்கப்படாததுமான பிரும்மிருக்கின்றது" - என உப

தேசிக்கிறது. न ह्येतस्मादिति नेति-என்றவிடத்திலுள்ள அக்ஷரங்கள் எப்போது - ''பிரபஞ்சத்தை நிஷேதம் செய்தல் ரூபமான உபதேசத்தைக் காட்டிலும் வேறுபட்ட, மேலான உபதேச முறை பிரும்மத்துக்கு இல்லை என்பதாம். அப்போது ततोऽब्रवीति च भूयः - என்கிற சூத்திரம் நாம (பெயரை) தேயத்தை விஷயமாகக் கொண்டது என்பது பொருள் கொள்ள வேண்டுவதாக ஆகிறது. சுருதியில் ஸத்யத்துக்கு ஸத்யம் என்பது - பிரும்மத்தின் நாமதேயம் என்று தொடங்கி - பிராணன்களே -ஸத்யமாகும் அந்த பிராணன்களுக்கு இது ஸத்யமாகும் என்றல்லவோ உபதேசம் காணப்படுகிறது. அந்த நாமதேயமும் பிரும்மத்தை முடிவாகக் கொண்டமறுப்பு சொல்லப்பட்டால் தான் பொருத்தமுள்ளதாகும். அபாவத்தை முடிவில் கொண்ட மறுப்பு சொல்லப் படுமாயின் ஸத்யத்துக்கு ஸத்யம் என எது சொல்லப்படும் ?. ஆகவே இந்த நிஷேதமானது பிரும்மத்தை முடிவில் கொண்டதே யல்லாது. அபாவத்தை முடிவிலே கொண்டதன்று என்று உறுதியாக்ச் சொல்லலாம்.

பிரும்மம் இந்திரியங்களால் அறியப்படாதது. எல்லா திருஸ்யங்களுக்குமே சாக்ஷியாக விருப்பதே அதன் காரணமாகும் ஆனால் சாஸ்திரஸம்ஸ்காரம் பெற்றயோகிகள் காண்கின்றனர். ஸம்ராதனம் - பக்தி தியானம் ப்ரணிதானம் என்பதாகும் இந்திரியங்கள் பஹிர் (வெளி) நோக்குள்ளவை. அந்தர் நோக்கில்லை. ஆனால் தீரன் புத்தியைத்தன் வசமாக்கி - இந்திரியங்களை உள்திருப்பி - பிரத்யகாத்மாவைப்பார்க்கிறார். இயற்கையில் - சிதாத்மா - தியானம் முதலியவைகளால் பேதத்தை அடைகிறதில்லை. அப்யாஸத்தினால் ஸ்வேதகேது ஒன்பது தடவைகள் அபேதத்தை உபதேசம் तत्त्वमसि - என்று பெற்றான். ஆத்ம பேதம் உபாதிநிமித்தத்தால் ஏற்படுகிறது. இயற்கையில் இல்லை. இயற்கையில் ஐகாத்மியமே தான் உள்ளது. வேதாந்த அப்யாஸத்தினால் - பல தடவைகள் உபதேசிக்கப்படுவதால் ஜீவபரமாத்மாக்களின் அபேதமே உபதேசிக்கப் பட்டிருக்கிறது. வித்யையினால் பேதத்தைப் போக்குகிறான். எவன் பிரும்மத்தை அறிவானோ-அவன் பிரும்மமாகிறான். பிரும்மாகவிருந்து கொண்டு பிரும்மத்தை யடைகிறான்.

சிலவிடங்களில் பேதமும் அபேதமும் சொல்லியிருப்பதால் - இரண்டும் வாஸ்தவமாகத் தோன்றினாலும் அபேதம் இயற்கையில் உள்ளது. உபாதியினால் பேதம் என்று உபய வ்யபதேசாத்து. அஹிகுண்டலவத் - பாம்பும் அதன் குண்டலமும் (சுருண்ட நிலையும்) போலவிருக்கலாம் - (இது பூர்வபக்ஷம் சூத்ரம்) தியானிப்பவன் - தியானம் செய்யப்படும் பொருள் இவற்றால் ஜீவபரமாத்மாவின்பேதம் சொல்லப்படுகிறது. எவர் உள் இருந்து எல்லாபூதங்களையும் நியமிக்கிறாரோ - என்பதால் நியந்தாவாக விருத்தல், நியந்தவ்யமாக நியமனம் (செய்யக்கூடிய) - அதாக நீ இருக்கிறாய் - நான் பிரும்மாக விருக்கிறேன் - இந்த உனது ஆத்மா ஸர்வாந்தரமானது, இந்த உனது ஆத்மா அந்தர்யாமியும் அமிருதமாகவுமிருக்கிறது. இவைகளால் ஜீவபரமாத்மா பேதம் உபதேசிக்கப்படுகின்றன. பாம்பும் - அதன் குண்டலத்தையும் போல. அதே மாதிரி ஜீவபரமாத்மாக்களுக்கு - பிரகாசமும் ஆஸ்ரயத்வமும் (சூர்யாதிகளுக்கும்) போல பேதாபேதவ்யபதேசம் சரியாகலாம். சூரியனும்-பிரகாசமும் தேஜோ ரூபமாக விருப்பது பற்றி முற்றிலும் வேறுபட்டதாக எவ்விதமாகாதோ - பேதா பேதவ்யபதேசத்தை யடைகின்றனவோ - இவ்விதமே ஜீவ பரமாத்மாக்கள் ஆகலாம் - (இதுவும் பூர்வபக்ஷம்) பேதம் - அபேதம் இரண்டுமே உண்மையாக ஏற்படலாம் என்கிற பூர்வபக்ஷம்.

இந்த இரண்டு பூர்வபக்ஷ சூத்ரங்களுக்குப் பதில் பூர்வ வத்வா - என்னும் சூத்ரத்தில் சொல்லப்படுகிறது. ப்ரகாசாதி வத்ச அவை சேஷ்யம் - என்பதுபோல பந்தம் அவித்யை யினால் ஏற்பட்டது. மோக்ஷம் வித்யையினால் உண்டாகும். மோக்ஷசாஸ்திரத்தின் நோக்குபந்தம் விலகுதல் - பேதாபேதம் இரண்டையும் உபதேசித்தால் மோக்ஷசாஸ்திரம் வீணாகிவிடும். அபேதத்தையே சாஸ்திரமூலமாக - தாத்பர்யம் என்று கூறி அவி த்யா ஏற்படுத்தும் பேதத்தை தானும் திருப்பிக் கூறுகிறது. ஆகவே பிரகாசாதிவத்சா அவை சேஷ்யம் என்பது ஸித்தாந்த சூத்ரமாகும். மேலும் பிரதி ஷேதாத்ச என்னும் சூத்திரத்தில் பரமாத்மாவைத் தவிர - வேறு சேதனனை சாஸ்திரம் மறுத்திருப் பதுமே அதன் காரணமாகும். த்ரஷ்டா - பரமாத்மாவைத் தவிர வேறுபட்டவனல்லன் - இதனால் வேறு சேதனனை மறுத்துக் கூறி யிருக்கிறது. அதனால் இந்த பிரும்மம் தனக்குமுன் (காரணம்)

அற்றதும், பின் (காரியம்) அற்றதும் உள் அற்றதும் வெளியற்றதும் ஆகும். பிரும்மத்தைவிட வேறுபட்ட பிரபஞ்சத்தையும் மறுத்துக் கூறி - பிரும்மத்தை மட்டுமே மிச்சப்படுத்தியிருப்பதாலும - இதுவே தான் ஸித்தாந்தமாகும். (பிறகு ஆனது பற்றி நேதி நேதி இதில்லை என்பதே பிரும்மத்தின் உபதேசமாகும்.) இதனுல் பிரும் மத்தைத் தவிர வேறு ஒன்றுமில்லை என்று ஸ்தாபிதம்.

(இங்கு ராமானுஜரின் அபிப்ராயம் - நேதி-நேதி என்பதால் பிரும்மத்தைவிட மேலானது - உத்கிருஷ்டமானது - ஒன்றுமில்லை. சர்ப்பகுண்டலவத் - ஒன்றையொன்று ஆஸ்ரயம் செய்வதால் - பிரபையையும் பிரபையையுடைய வஸ்துவைப்போல - ஏகஜாதியின் சேர்க்கையைப்போல - அம்சஅம்சீ (பாகம் - முழுவது போல) சம்பந்தத்தை யுடைய குணத்தை - ஜீவன் பிரும்மத்தின் ரூபமாக விருப்பதுபோல - விசேஷண விசேஷ்யபாவம் என்பதால் - பிரும்மம் உபாதானம் காரணம் - பிரதிக்ஞைக்கு பாதிதம் கூடாது - ஜகமும் பிரும்மமும் ஐக்யம் - ஸூக்ஷ்ம சித்அசித் விசிஷ்ட பிரும்மமும் ஸ்தூலசித் அசித்விசிஷ்ட பிரும்மமும் ஒன்றேதான் - சேதனன் தனியாக ஸ்வதந்திரமாகவிருக்காது. சரீர ஆத்மபாவம் சொல்லப்பட்டதாகும், அம்சமாகச் சொல்லப்பட்டதால்.)

பிரும்மமானது ஸர்வத்துக்கும் ஆதாரமாக விருப்பது - ஸேதுவாகவிருப்பதுபற்றி - விரோதம் - (பிரும்மத்தைத் தவிர வேறில்லை என்பதற்கு) ஏற்படுமாதலால். பிரும்மத்துக்கும் பரமானது ஒன்று இருக்கின்றது - என பிராப்தமானபடியால் - பரிஹாரம் சொல்லப்படுகிறது. பிரும்மத்தைத் தவிர வேறு பொருள் ஒன்றும் உற்பத்தியுடையதாகவில்லை. "ஸௌம்ய - ஸத்தாகவிருந்தது - ஏகம் - அத்விதீயம் ; ஏகவிக்ஞானத்தால் ஸர்வவிக்ஞானம் வருவதாக ப்பிரதிக்ஞை செய்திருப்பதால் - பிரும்மத்தைவிட வேறுபட்ட பொருளிருப்பதாகச் சொல்வது பொருந்தாது - ஸேது - ஆத்மா என்று அர்த்தம் அதற்கு மேலாக ஒன்று இருப்பது சொல்லப்படவில்லை. அஜத்வம் (உற்பத்தியற்றிருத்தல்) முதலியவற்றைச் சொல்லும் சுருதிகளுக்கு விரோதம் உண்டாகும் என்பதே காரணமாகும். ஆத்மா ஸேது ஸாத்ருஸ்யமாகும். உலகில் வ்யாகரணத்தைத் தாண்டினுன் என்றால் - அதைக் கடந்து பிறவொன்றை அடைந்

தான் என எவ்விதம் சொல்லப்படுவதில்லையோ - அவ்விதமே இங்கும் காண்க.

இன்னொருவாதமும் தள்ளப்படுகிறது - பிரும்மத்துக்கு உந்மானவ்யபதேசமும் - உபாஸனைக்கு வேண்டியே சொல்லப்பட்டதாகும் - (உன்மானவ்யபதேசம் அத்யாத்மத்தில் மனத்தையும் அதிதைவதத்தில் ஆகாசத்தையும்-பிரும்மத்தினது ப்ரதீகங்களாக சொல்லி - வாக்மனஸ்சக்ஷுஸ்ச்ரோத்ரம் இந்த நான்கும் மனத்தின் பாதங்கள் - அக்னி சூரியன் வாயுதிக்கு - ஆகாசத்தின் பாதங்கள் என்று கற்பிக்கப்படுவது எவ்விதமோ - அவ்விதமே இங்கும் காண்க.) உபாஸனைக்காக வேண்டியே சொல்லப்பட்டது- பிரும்மத்தினிடம் புத்தி எவ்விதம் நிலைபெற்றதாக விருக்கக் கூடும் என்பதால் - பேதவ்யபதேசாத் என்கிறதும் உபாதியை முன்னிட்டு உபசார முறையாகக் கூறப்படுவதே யொழிய ஸ்வரூபதா அபேக்ஷையை முன்னிட்டதன்று. பிரகாசாதிவத் - சூரியன் - சந்திரன் இவர்களுடன் சேர்க்கையிருக்கும் கால் ஒரு விசேஷம் ஏற்பட்டு-உபாதியின் அனுபவஸ்யம் ஏற்பட்டதும் ஸம்பந்த வ்யபதேசமும் உபாதிபேதத்தால் பேதவ்யபதேசமும் ஏற்படுவது எவ்விதமோ - அதுபோலவாம். ஆகாசத்தை பல விதமாகச் சொல்லியிருப்பதுபோல - ஹ்ருதயாகாசம் - சரீரத்தின் வெளியிலுள்ள ஆகாசம் - பிரசித்தமான ஆகாசம் - இத்யாதி உதாரணங்களாகும்.

இவைகளால் பிரும்மத்தைக் காட்டிலும் வேறாக ஒன்றில்லை என்று நிச்சயிக்கப்படுகிறது - ததா அந்ய ப்ரதிஷேதாத் என்னும் சூத்ரத்தில் - இதனால் தனது பக்ஷத்தை ஸ்தாபிப்பதாகும். அந்யத்தை நிஷேதித்து - பிரும்மத்தைவிட வேறான வஸ்துத்வம் இல்லை. அதுவே கீழிலுள்ளது-நானே கீழிலுள்ளவன் எவன் ஆத்மாவைக்காட்டிலும் வேறாக ஸர்வத்தையும் அறிவானோ - அவனை எல்லாம் பொருள்களும் நிராகரித்துவிடும்-பிரும்மம் தனக்கு ஒரு காரண மற்றதும் - காரியமற்றதும்-உள் வெளிசுற்றதும் ஆகும் - பிரும்மத்தைவிட வேறான வஸ்துத்வத்தை மறுக்கின்ற சுருதிவசனங்களாகும். எல்லாவற்றிற்கும் உள்ளிலுள்ளது - (அந்தர்யாமி) - பரமாத்மாவைக் காட்டிலும் அந்யனான அந்தராத்மா ஒருவனில்லை என்று உறுதி செய்யப்

படுகிறது. இதனுல் ஆத்மா எங்கும் நிறைந்தது, ஸர்வகதத்வமும் ஸித்தம்.

அத்தகைய பரம்பொருளே - பரமகருணையுள்ளவனுக - விருப்பதால் — அவன் மூலமாகத்தான் பலன்வரும். ஸர்வக்ஞனும் ஸர்வசக்தனுமே பல ப்ரதனுகும். அதாவது கர்மா பலனைத் தருகிறதா - அல்லது ஈசுவரன் தருகிருனு ? - என்பது சங்கை. ஸித்தாந்தம் - ஈஸ்வரனுல்தான் பலன் யேற்படும். மீமாம்ஸகன் சொல்வதுபோல - அபூர்வம் ஒன்றைக் கற்பிக்க வேண்டிய அவசியமில்லை (கர்மத்தைச் செய்தபின்னரும் - பலன் சித்திப்பதற்கு முன்னரும் உள்ள கர்மத்தின் சூக்ஷ்மநிலை அபூர்வம் எனப்படும்) - (பூர்வமீமாம் ஸகனின் கொள்கையாம்) பிரும்மத்துக்கு ஈஸிதா - ஈஸிதவ்யம் - வ்யவஹாரிக தசையில் விபாகநிலையில் - இந்த ஸ்வபாவம் சொல்லப்படுகிறது. ஈஸ்வரன் பலன் தருகிருர் என்பது - பொருந்ாது, கர்மம் நாசத்தை யடைகிறது - பின்னுல் வரும்பலனைத்தர வல்லமை ஆகாது அதனுல் அதற்கு அபூர்வம் சொல்லப்படுகிறது. ஈஸ்வரன் பலனைத் தருகிருர் என்ருல் - வைஷம்யம் நைர் கிருண்யம்வரும் கர்ம அனுஷ்டானமும் பயனற்றதாகும் ஆகையால் கர்மமே பலனைத்தருகிறது என்பது பூர்வபக்ஷம். ஆனுல் வியாஸர் ஈஸ்வரன்தான் கர்மானுகுணமாக பலனைத் தருகிருர் என்று எண்ணுகிருர் - ஹேது வ்யபதேசாத் - நற்கருமங்களை அவரே செய்யத் தூண்டுகிருர், கீதையும் ''நானே என் பக்தனுக்கு சிரத்தையை உண்டாக்குகிறேன், என்னுல் கொடுக்கப்பட்டவனுக இஷ்டத்தை யடைகிருன், ஈஸ்வரனுக்கு ஆட்சேபம் - விசித்திர மில்லாத காரணப் பொருளுககு விசித்திரமான காரியத்தை உண்டுபண்ணுதல் சம்பவிக்காது - என்கிற தோஷங்கள் ஜீவனுல் செய்யப்பட்ட பிரயத்னும் அபேக்ஷனுக அவர் (ஈஸ்வரன்) இருப்பதும் - இதனுல் அந்த தோஷமும் ஏற்படாது.

3ம் அத்யாயம், 3-ம் பாதம் :—

பிரும்மம் நிர்குணமாகும். அதை ஸாக்ஷாத் கரிப்பதற்கு ஹேது சித்தைகாக்ரியத்தைத் தருவது ஸகுண பிரும்மோபாஸனை. உபாஸனைக்கு வேண்டி சில குணங்களைப் பிரும்மத்துக்குச்

கற்பித்திருப்பதால் அத்தகைய குணங்களை சாஸ்திரம் பிரும்மத்துக்குக் கற்பித்திருப்பதால் - அத்தகைய குணங்களுடன் கூடியதாக பிரம்மோபாஸனை செய்யவேண்டியதாக விருக்கிறது. குணங்கள் பலவிடங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. ஒரே வித்யைக்கு வேறு சில சாகைகளில் வேறு பல குணங்கள் சொல்லப்படுகின்றன. ஒரு சாகையில் சொல்லிய குணங்களை மற்றும் சில சாகைகளில் சில குணங்களும் சொல்லப்பட்டிருப்பதால் - குணோப ஸம்ஹாரம் சொல்லப்படுகிறது.

கர்மங்கள் வித்யைக்கு ஸாதனமாக அமைகின்றன. கர்மங்களைச் செய்து கொண்டுவந்தால் - சித்ததோஷம் விலகுகிறது. ஞானமே முடிவான பலனாகும். சித்ததோஷம் நீங்கினதும் - அதனின்று ஞானம் யேற்படுகிறது. ஆஸ்ரம தர்மங்கள் வித்யையினால் தனது பலனுண்டாகும் விஷயத்தில் அபேக்ஷிக்கப்படாது - தனது ஞானத்தினது உற்பத்தியில் அபேக்ஷிக்கப்படுகிறது என்பதால்.

அத்வைதிகளுக்கு முக்திவிஷயத்தில் ஜீவன் முக்தி உண்டு. அவர்களுக்கு வேறு உலகத்திற்குச் செல்லுதல் - கமனம் கிடையாது. ஸகுண உபாஸனத்தில் ஹிரண்யகர்ப்பரை அடைதலும் - அர்ச்சராதி மார்க்கமும் உத்தராயணமார்க்கப் ப்ராப்தியும் உண்டு. பிரும்ம பிராப்தி என்பது ஸ்வரூப ஐக்யம். வித்யையை அப்யாஸிப்பவன் - அரிசி வெளியாகும் வரை நெல்லைக் குத்துவது போல - ஸ்ரவணாதிகள் அபரோக்ஷ ஸ்ாக்ஷாத்காரம் வரும்வரை அடிக்கடி செய்யவேண்டும். திருஷ்டமான பலன் ஸம்பவிக்கும் போது (கைவல்யம் ஜீவன் முக்தி இத்யாதி) அதிருஷ்டமான பலன் வித்வான்களால் கற்பிக்கப்படவில்லை என்பது அவர்களின் ஸித்தாந்தம்.

ஆத்மாவை சிரவணம், மனனம் நிதித்தியாஸனம் செய்யத்தகுந்தது என்று மைத்ரேயிக்கு யாக்ஞ்யவல்கியர் உபதேசித்தார். இந்த சிரவணாதிகளை - வேத - உபாஸீத - என்று சொன்னாலும் - அப்யாஸாத் - அபரோக்ஷ ஸாக்ஷாத்காரத்தை முடிவாகக் கொண்டதால் இறக்கும் வரை அபரோக்ஷசாக்ஷாத்காரம் கிட்டும் வரை செய்ய வேண்டும் - தத்வமஸி என்கிற வாக்கியங்களையும் அஹ [illegible] -

இத்யாதிகளையும் செய்யவேண்டியது. தத் பதத்தால் தோற்றிருந்து வருந்தும் நியந்தாவும் ஜகத்தின் ஜன்மாதிகளுக்குக் காரணரு மான ஸ்வரூப பிரும்மமானது சொல்லப்படுகிறது. அது-ஸத்யம் ஞானம் அனந்தம் பிருஹ்மம் - விக்ஞானம் ஆனந்தம் பிரும்மா அஜரம் அஜம் அமரம்-அஸ்தூலம் அநணு அஹ்ரஸ்வம், அதீர்க்கம் என்று சாஸ்திர பிரஸித்தமாக விருக்கிறது. அஜ என்பதால் ஜன்மா முதலியவை விலக்கப்பட்டன. அஸ்தூலம் எனபதால் பருத் திருத்தல் முதலிய திரவியங்கள் விலக்கப்பட்டன. விக்ஞானம் என்பதால் சைதன்ய பிரகாசம் சொல்லப்படுகிறது. த்வம் பதம் பிரத்யகாத்மா. ஸ்ரோதாவாகவும் தேக சம்பந்தம் பெற்ற பிரத்ய காத்மா - சைதன்ய வடிவில் இருப்பது - நிர்த்தாரணம் செய்யப் படுகிறது. அக்ஞான விஷயிகளுக்கு இந்த வாக்யம் தனது அர்த்த விஷயமான ஞானத்தை உண்டு பண்ணாது. எவர்களுக்கு அக்ஞானம் சம்சயம், விபர்யய ரூபமாகவுள்ள பதார்த்த விஷய மான பிரதிபந்தமானது இல்லையோ - அவர்களுக்கு ஒரே தடவை யினால் இந்த வாக்ய ஜன்ய ஞானம் ஏற்படுகிறது. அத்தகையவர் களுக்கு ஆவிருத்தி பயனற்றது. ஆகவே இதில் ஒரு கிரமம் என்பதில்லை.

பரமேஸ்வரனார் என்கிற ஆத்மா அபஹதபாப்மத்வாதி குண முள்ளவர். அதற்கு நேர்விருத்த குணமுள்ள அக்ஞானம் படைத்த ஜீவன். ஜாபாலர்கள் சொல்கிறார்கள் "பகவானே - நீராகவே நானிருக்கிறேன். நானாகவே நீர் இருக்கிறீர்" இதனால் பரமேஸ் வரனை ஆத்மாவாக அங்கீகரித்துள்ளார்கள் அதுபோல அஹம் ப்ரஹ்மாஸ்மி நான் பிரும்மமாக விருக்கிறேன் - இந்த உனது ஆத்மா அந்தர் யாமியாயும், அம்ருதனாகும், இந்த உனது ஆத்மா ஸர்வாந் தரனாகும் - அது ஸத்யம் - ஓ, ஸ்வேதகேதோ - அதுவாக நீயிருக் கிறாய்-இதான வாக்கியங்கள் ஈஸ்வரனை ஆத்மாவாகச் சொல்லி யிருக்கின்றன. ப்ரதீக உபாஸனையில் - மனத்தை ஆத்மாவாக (பிரும்மமாகவும்) ஆதித்யன் பிரும்மமாகும்-எங்கு ஒரு தடவை உபதேசம் காணப்படுகிறது. "நீர் நானாக விருக்கிறீர் நான் நீராக விருக்கிறேன். அபேதஞானம் உபதேசிக்கப்படுகிறது. எவன் ப்ரும்மத்தினிடம் பேதம் காண்கிறானோ அவன் மரணத்தை யடைகிறான்-எவன் எல்லாவற்றையும் ஆத்மாவைக் காட்டிலும்

அன்னியமாகக் காண்பானே அவனை அன்னியமாக எண்ணப் பட்டவையாவும் நிராகரணம் செய்துவிடும். இதில் சுருதி பேத ஞானத்தை மறுத்துக் கூறுகிறது. மாறுகுணமுள்ள இரண்டு பொருள்களுக்கு அன்யோன்யாத்மகத்வம் (ஒன்று மற்றொன்ருக விருத்தல்) ஸம்பவிக்க முடியாதென யாதொன்று சொல்லப் பட்டதோ-இதில் தோஷமில்லை. மித்யையாகவிருப்பது-விருத்த குணமுள்ளதாயிருக்கும் பொருள்-சாஸ்திரம், ஈஸ்வரன் உண்டு-. அவனுக்கு ஸம்சாரித்வம் தோன்றுகிறது. அதைப் போக்கி - ஈஸ்வராத்மத்வம் சொல்ல விரும்பப்பட்டது. வ்யவஹாரிக தசையில்-அதாவது அபரோக்ஷ ஞானம் யேற்படும் முன்பு - பிரத்யக்ஷாதிகளுக்கு அபாவம் சொன்னுல், சுருதிக்கு அபாவம் வரத் தெரியும். பரமார்த்த தசையில் பிதா பிதாவாக வாவ தில்லை என்று தொடங்கி - வேதங்களும் அவேதங்களே - என்கிற சுருதி வசனத்தினுல் அபரோக்ஷ ஸாக்ஷாத்காரம் வந்ததும் எல்லா சுருதிக்கும் அபாவம் விரும்பபட்டிருக்கிறது - பிரும்மத்தைத் தவிர வேறு ஒன்றுமில்லை. இதனுல் ஒருவனுக்கும் அக்ஞானமேயில்லை - எல்லோரும் மோக்ஷமடைகின்றனர் என்பதாகும்.

பாரமார்த்த தசையில் பிரும்மத்தைத் தவிர எல்லாம் மித்யை. அந்த நிலையில் ப்ரதீகத்தன்மை - உபாஸசனுக விருத்தல் என்பது நாசமாகிறது. பிரும்மாத்மைக்ய ஸாக்ஷாத்காரம் வராவிடிலோ ப்ரீதகமானது உபாஸனையைவிட வேருக விருப்ப தால் - நான் என்று எண்ணுவதற்கு அது தகுதியில்லை - என்பது ஸித்தாந்தம். பிரதீகத்தில் ஆத்ம புத்தியை செலுத்துதல் கூடாது. வளையிலும் ஸ்வஸ்திகத்திலும் பொன் இருந்தாலும் - இரண்டும் ஸ்வர்ணுத்மகத்வத்தினுல் ஒன்ருவது போல் - பிரும் மாத்மத்வத்தினுல் ஏகத்வம் சொன்னுலோ பிரதீகமே இல்லாமற் போய்விடும். ஆகவே ப்ரதீகர்களில் ஆத்ம புத்தியானது செய்யப் படுவதில்லை.

ஆனுல் பிரும்மேஹதி ஆதேசः, பிரும்மேஹதி உபாஸீத. உபாஸீதே-என்கிற இடங்களில் பிரும்ம சப்தத்திற்கு இதி என்கிற வார்த்தை பின்னிருப்பதால் ஆதித்யாதி சப்தங்களையோ சுத்தங்க ளாகவும் (இதி சப்தங்களில்லாதனவாகவும்) உபதேசிக்கிறது.

ஆகவே சுத்திகையை வெள்ளி என எண்ணுகிருன் என்றவிடத்தில் சுத்திகா என்பது சுத்திகையையே (கிளிஞ்சலேயே) சொல்லுவதாகவும், ரஜத (வெள்ளி) மென்ற சப்தம் ரஜதத்தின் தோற்றத்தைத் தருவதாகவும் ஆகிறது, வெள்ளியில்லை என்கிற படியால். இவ்விதமே இங்கும் ஆதித்யன் முதலியவற்றை பிரும்மம் என எண்ணுகிருன் என்று மட்டும் அறியப்படுகிறது. பிரதிமாதிகளில் (சாளிக்கிரமம் போன்றவை) விஷ்ணுவுக்குப் போல-பிரதீகங்களில் பிரும்ம திருஷ்டியைச் செய்தல் என்பது யாதுண்டோ - இதுவே தான் இவ்விடத்தில் பிரும்மத்துக்கு உபாஸ்யத்வம் எனச் சொன்னதாக விருக்கிறது.

எல்லாக் காலங்களிலும் வித்யையை ஆவிருத்தி செய்யவேண்டும். மரணம் வரும்வரை செய்யவேண்டும். மரண காலத்தில் அடுத்த ஜன்மத்தில் வரும் பலனுடைய தோற்றத்தை தருகின்றன. பின்னர்வரும் பலத்தோற்றத்துடன் கூடினவனுகவாகிருன் - அத்தகைய தோற்றத்துடனேயே கிளம்புகிருன் - என்றும் எவ்விஷயமான சித்தமுள்ளவனுக முடிவிலிருந்தானே அதனுடையயே இவன் பிராணனையடைகிருன். என்று சுருதிகளிருக்கின்றன. புல்லிலுள்ள அட்டையின் திருஷ்டாந்தம் சொல்லப்படுகிறது. இன்னொரு வரப்போகும் தேக சூக்ஷமத்தைப் பிடித்துக்கொண்டு-மரிக்கும் மனிதன் தன் தேகத்தை விடுகிருன். கீதையில் பகவான் சொன்னுர் - உயிருள்ளவரை எப்பொழுதும் அதே விஷயமான பாவனையுடன் இருந்து முடிவில் எந்தெந்தப் பொருளை நினைவிற் கொண்டு சரீரத்தை விடுகிருனே - அத்தை அடையவே அடைகிருன். அந்த உபாஸகன் மரண காலத்திலும்கூட (அக்ஷிதமஸி - அச்யுதமஸி, பிராணஸம் சிதமஸி, என்கிற இம் மூன்று மந்திரங்களையும் ஸ்மரிக்கவேண்டும் - என்பதாய் மரண காலத்திலும்கூட செய்யவேண்டிய காரியத்தின் சேஷத்தைத் தெரிவிக்கிறதாம். (ஆப்ராயணுதிகாரம்— 4-1-8)

பிரும்ம ஸாக்ஷாத்காரம் வந்ததும் ஞானத்துக்கும் பின்னரும் முன்னருமுள்ள பாபங்கள் நாசம்யேற்படுகிறது. ஏன்? அவ்விதம் சுருதி சொல்வதால். (அனுபவமில்லாமல் கர்மம் நாசமடையாது என்பது பூர்வபக்ஷம். நான் கர்த்தாவன்று என்கிற ஞானத்தினுலும்-வஸ்துவின் மகிமையினுலும் ஞானிக்கு கர்மலேபம் (ஒட்டுதல்)

கிடையாது. முந்தின கர்மம் ஸம்பந்திப்பதில்லை. பிந்தின கர்மம் நாசத்தையடைகிறது என்று சுருதி சொல்வதால். அனுபவிக்கா விடில் கர்மம்தேயாது என்பது ஆத்மஞானமில்லாதவன் விஷயத்தில் சரி, பிரும்ம பிராப்தியேற்பட்டதும் - நாசத்தையடைகின்றன. பிராயசித்தங்கள் அனுவசியம். பிரும்ம வித்யா விஷயத்தில் விதி கிடையாது. பிந்தியுள்ள பாபங்கள் ஒட்டாது. பராவரமான (பர= ஸர்வகாரணப் பொருள்) அவர எதற்குக் கீழ்பட்டதோ அத்தகைய) அந்த நிர்குண பிரும்மமானது ஸாக்ஷாத்கரிக்கப்பட்டதும் ஹ்ருதயகிரந்தி (மூலாக் ஞானமானது) நாசமடைகிறது. எல்லா சம்சயங்களும் நாசமடைகின்றன. கர்மத்தின் பலன்தரும் சக்தி வித்யையினால் தடுக்கப்படுகிறது அஸ்லேஷ: என்கிற பதத்தால் (4-1-9) இனிவரும் கர்மங்களுக்கு பிரும்மஞானி கர்த்தாவாக ஆகமாட்டான். மோக்ஷம் கர்ம்ம பலனைப்போல தேசகாலத்தை எதிர்பார்க்காது. ஞான பலனுக்குப் பரோக்ஷத்தன்மை ஸம்பவிக்கவும்மாட்டாது. ஆகவே பிரும்ம ஞானம் உண்டானதும் பாபக்ஷயம் ஏற்படுகிறது என்பது ஸித்தாந்தம். பாபம் எப்படியோ அப்படியே புண்யமும். புண்யத்து தரணம் (கடத்தல்) சுருதியிற் சொல்லப்பட்டது. ஞானியானவன் இரண்டையுமே (புண்ணிய பாபத்தை) கடக்கிறான் அன்றோ, இதனால் பாபநாசத்தைப் போல் புண்யநாசம் சொல்லப்படுகிறது. ஞானோதயத்திக்கு முந்தியுள்ள புண்யபாபங்களே நாசமடைகின்றன. பிராரப்த கர்மங்களில் பலன்கொடுக்க ஆரம்பத்து விட்டவை அனுபவித்தே தீரவேண்டும். தேகமிருக்கும்வரை சம்சாரம் தொடர்கிறது. பாணம், குயவனின் சக்ரம் (சுழல்வதுபோல) அந்த திருஷ்டாந்தங்கள் இருப்பினும், பிராரப்த கர்மங்கள் தேக பாதம்வரை நாசத்தை யடைவதில்லை - அனுபவித்தே தீரவேண்டும் என்பது சித்தாந்தம். இதேமாதிரி அனாரப்த (தனது பலனைக் கொடுக்க ஆரம்பிக்காத) கர்மங்களும் - பூர்வங்களும் - வேறு ஜன்மங்களின் ஸஞ்சிதங்களும் இதே ஜன்மத்திலும்கூட ஞானமுண்டாவதற்கு முந்திய ஸஞ்சிதங்களும் ஞானபிராப்தியால் நசிக்கின்றன. அவ்விதமானால் அக்னிஹோத்ரதியான நிஷ்காம நித்யகர்மம் நாசத்தை அடைவதில்லை. இது வித்யையில் உபயோகப்பட்டு விடுகிறது, ஞானோத் பத்திக்கும் பிறகு அக்கர்மத்துக்கும் ஸம்பந்தமின்மையோ என்றால் - அது காம்யகர்மாவைப்போல ஆகும்.

அதாவது செய்துகொண்டிருக்கவேண்டும். ஆனுல் பலன் வேண்டப்படாது. ஸம்பவிக்காதது. வித்யையினுல் நாசம்யேற்படுவதாகக் கொள்ளவேண்டும்.

பிராரப்தகர்மம் வித்யையை நாசம் செய்யாது. தன் பலனையே அனுபவிக்கச் செய்யும். தூங்கினவனுக்கும் விழித்தெழுந்தவனுக்கும்போல - பாபபுண்யங்களின் ஒட்டாமையானது அதே நிலையிலிருப்பதால் - மோக்ஷமானது ஏற்படும். கைவல்யம் அவசியம் வந்துவிடுகிறது. மித்யாஞானம் ஸம்யக்ஞானத்தினுல் போக்கப்பட்டியால்.

இதுவரை நிர்குண உபாஸனையின் பலனுக ஆத்மஞானம் ஸத்யோமுக்தியை அளிக்கிறது என்று சொல்லப்பட்டது. பிரும்மலோக பிராப்திரூபமான உபாஸனையின் பலன் - அர்ச்சராதி மார்க்கத்தினுல் அடையப்படுகிறது. இது அபர வித்யைச் சேர்ந்ததாகும் அதாவது ஸகுணபிரும்மோபாஸனை. முடிவுகாலத்தில்-அந்த பிரகிருதனுனபிராணன் அவித்யை கர்மம் பூர்வபிரக்ஞை இவற்றை உபாதியாகவுடைய ஜீவனிடத்தில் ஸம்பத்தியையடைகிறது. ஜீவனைப் பிரதானமாகத் கொண்டதாகிறது. முடிவு காலத்தில் எல்லாமும் சேர்ந்து ஜீவனுடன் சேர்ந்து செல்கின்றன. ஆகவே பிராணன் தேஜஸ்ஸில் - என்றவிடத்தில் ப்ராணனுடன் கூடின அத்யக்ஷ (ஜீவ) னுக்கே தேஜஸ்ஸுடன் கூடின பூதங்களில் இந்த இருப்பு சொல்லப்படுகிறது. யாக்ஞயவல்கியர் ஆர்திதபாகர் இவர்களின் ஸம்வாதத்தினுல் தெரியவருவது பஞ்ச பூதங்களின் சூக்ஷ்மத்துடனே கூடிய இந்த சரிரமானது அவற்றின் சேர்க்கை கொண்டு விளங்குகிறது.

வித்யா உபாஸகனுக்குத் தனிவழி. அவித்வானுக்கு தனிவழி - இவ்விதம் உத்கிராந்தியெற்படுவதால். வித்வானுக்கு மறுபிறப்புயில்லாதபடியால் - மார்க்கம் ஆரம்பிக்கும் வரையில் - வாங்மனஸி என்றதால் சொல்லப்பட்ட உத்கிராந்தி இருவர்களுக்கும் ஸமம். ஆனுல் அவித்வான் தேகத்துக்குப் பீஜ பூதங்களான பூத சூக்ஷ்மங்களை ஆஸ்ரயித்து கர்மாவினுல் ஏவப்பட்டவனுக தேககிரஹணத்தை (அடைவதை) அனுப

விக்கச் செல்கிறுன் வித்வானுக்கு கமனம் ஞானபிரகாசிதமான
மோக்ஷநாடித்வாரத்தினுல் ஆஸ்ரயித்துச் செல்கிறுன். இது
ஆஸ்ருதயுபக்ரமாதி-என்பதால் சொல்லப்பட்டது அந்த அதி
கரணத்தில் (4-2-4)

ஸர்வகத் பிரும்மாத்மபாவத்தை யடைந்தவரும் காமம்
கர்மம் இவையற்றவருமான பிரும்மவித்துக்கு கதியோ உத்
கிராந்தியோ ஸம்பவிக்கமுடியாது. நிமித்தமில்லாதிருப்பதே
அதன்காரணமாகும். ''இங்கு பிரும்மத்தை யடைகிறுன்'' -
என்று ஸ்ருதிகள் (இம்மாதிரியாகக் கூறுவதாலே - கதி உத்
கிராந்தி இவைகளின் அபாவம் சொல்லப்படுசிறது. பிரும்ம
வித்துக்குக்கதியும் உத்கிராந்த்யுமில்லை - இரண்டுமில்லை என்று
மஹாபாரதத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது. (இவை தேகத்
திலே அடங்கிவிடுகின்றன). ''அவர்கள் விஷயத்தில் தேவர்கள்
கூட மோஹமடைகின்றனர். அவர்களுக்கு மார்க்கம் எதுவு
மில்லாமல் - மோஹமடைகின்றனர் சரீரத்துடன் கூடிவைராகவே
வுள்ள சுகருக்கு யோகத்திருல் தேசபிராப்தியை (ஆதித்யனைப்
பிளந்து செல்லுதல்) முன்னிட்டு சரீரத்தை விடுதல் சொல்லப்
பட்டது. (வித்வான்களுக்கு அவர்களுக்கு . (न तस्मात् प्राणा:)
என்பதாக பஞ்சமீ பாடம் காணப்படுவதால்-ஜீவனுக்கு தேஹிக்கு
பிராதான்யம் கொடுக்கவேண்டியபடியால் பிராணன்கள் லயித்து
விடுகின்றன. தேகத்தினிடமிருந்து உத்கிராந்தி பிராப்தம். ஆனுல்
ஜீவனுக்கல்ல. அவித்வானுக்கு பிராணன் தொடர்ந்து செல்
கிறது. ஸம்சாரம் வரும் முறையைக் காண்பித்து - இவ்வித
மல்லவோ காமனையுள்ளவனுகிறுன் - பிறகு காமனையறறவன்
(வித்யை உள்ளவன்) விஷயம் சொல்லப்படுவதால் அவனுக்கு
உத்கிராந்தி இல்லையென்று மறுப்பு சொல்லப்படுகிறது.

ஞானிகள் (வித்யா உபாஸகர்கள்) விஷயத்தில் நதிகள்
ஸமுத்திரத்தில் லயமாவதுபோல - கதா : கலா :- பிராண
சப்தத்தால் சொல்லப்பட்ட பரமாத்மாவினிடமே லயமடை
கின்றன. அந்த இந்திரியங்களும் பூதங்களும் - அங்கே பரமாத்மா
வினிடம் லயமடைகின்றன. சுருதிகள் அவ்விதமே சொல்கின்றன-
நதிகள் சமுத்திரத்தை யடைவதுபோல - நாலாபக்கத்திலும்

பிரும்மத்தைப் பார்க்கின்ற-புருஷனிடத்தில் (ஆத்மாவினிடத்தில்) கல்பிக்கப்பட்ட இந்த பதினைந்து கலைகள் கொண்ட புருஷன் (கர்மேந்திரியங்கள் ஐந்து, ஞானேந்திரியங்கள் ஐந்து - பிராணங்கள் ஐந்து-ஆக பதினைந்து கலைகளாம். மனத்தை பிராணனுடன் சேர்த்து பதினைந்தாம்) புருஷனை (ஞ்யேமான பிரும்மத்தை) அடைந்து லயத்தையடைகின்றன. (தனது காரணங்களையடைந்தன) பிரும்மத்தையே அடைகின்றன.) அக்ஞானிகள் விஷயத்தில் மறுபிறப்பு இருக்கின்றபடியால் - சக்தியை மிச்சமாகக் கொண்டதாக சக்திசேஷம் ஒப்பப்படுகிறது. ஞானிகள் விஷயத்தில் கலைகளின் நாமரூபங்கள் நாசமடைகின்றன- புருஷன் என்றே சொல்லப்படுகிறது. அந்த (இந்த) புருஷன் கலைகளற்றவனாகவும் அம்ருதனாகவும் ஆகிறான் என்பதாம்.

வித்வான் பரமாத்மாவினால் அனுகிரஹிக்கப்பட்டு சுஷும்னா (101வது நாடியினால்) செல்லுகிறான். இவன் நாடியை சிந்தித்தலாலும் வித்யையின் மகிமையினாலும் - நாடிமுகமானது பிரகாசத்தையடைந்து - ஆத்மா கண்ணிலிருந்தோ - தலையிலிருந்தோ - வெளிச் செல்கிறான். பிரும்மலோகத்தையடைவதற்கு வழியாக ஆகிறது. (ஹிருதயத்தினின்றும் வெளிக்கிளம்புகிற இந்த ஸுஷும்னை வலது கண், தாலு, கண்டத்தினுள், ஸ்தனம் நாஸிகை - இவற்றின் நடுவிலுள்ள விடத்தின் வழியாகத் தலையில் பிரும்மரந்திரத்தை அடைந்து - சூரிய கிரணங்களுடன் ஒன்றுபட்டதாக ஆசி - பிரும்மலோகத்தை உபாஸகனுக்கு அடையவிக்கிறது. தேகமுள்ளவரை சூரிய ரஸ்மிக்கும் சுஷும்னை நாடிக்கும் சம்பந்தமிருக்கிறது ஆதலால் இரவில் மரித்தவன்கூட (வித்வான்) ரஸ்மிகளையடைகிறான். அதேமாதிரி தக்ஷிணாயனத்தில் மரித்தாலும் உபாஸகன் உபாஸனையின் பலனை அடையவே செய்கிறான்.

ஸகுணபிரும்மத்தை உபாஸிப்பவர்கள் அர்ச்சராதி மார்க்கத்தில் (ஸத்யத்தை) அதாவது ஹிரண்ய சர்ப்பரை யடைய பிரும்மலோகம் செல்கின்றனர். அர்ச்சிஸையடைந்து -(அர்ச்சிர பிமானி தேவதையையடைந்து) - தேவயானமார்க்கத்தை அடைகிறார்கள். அர்ச்சிஸ்ஸிலிருந்து அஹஸ் (பகல்தேவதை) சுக்ல பக்ஷம் - உத்தராயணம் (தக்ஷிணாயணம்) ஸம்வத்ஸரம் தேவ

லோகம் (வாயுலோகமும்) - (அக்னிலோகம் - வாயுலோகம் - வருணலோகம் (தேவலோகத்தினின்று ஆதித்யனை வாயுவி லிருந்து அடைகிறான். - சந்திரன் மின்னல் - அமானவன் - இந்திரன் பிரஜாபதி - இவர்கள் - லோகமென்ற பெயரானது அங்கு வசிக்கும் ஜனங்களை உத்தேசித்து சொல்லப்பட்டதாகும்,

மின்னலை அடைந்ததும் - அமானவ புருஷனாலேயே வருணாதி லோகங்களுக்கு அழைத்துச் செல்லப்படுகிறான். ஆதிவாஹிகர்கள் என்று சொல்லப்படுபவர்கள் - அர்ச்சராதி ஆதிவாஹிகர்கள் தேவதாஸ்வருப முள்ளவர் என்பதாம்.

உத்தராயண (அர்ச்சராதி) மார்க்கத்தினால் அடைப்படுவது யாது-பரபிரும்மமா அல்லது அபர (ஸகுண) பிரும்மமா? ஸகுண பிரும்மமே சொல்லப்படுகிறது. மார்க்கம் பொருந்தக்கூடியதாக வாகவேண்டியும் - பரபிரும்மத்தினிடத்தில் மார்க்கம் ஸம்பவிக்கா தாகையாலும்-ஸகுண பிரும்மமே அர்ச்சராதி மார்க்கத்தினால் அடையப்படுகிறது. "இவர்களை அமானவர் பிரும்மத்தை அடையச் செய்கிறான்" என்பதால் ஸகுண பிரும்மத்தினிடத்தில் பிரும்ம சப்தம் பிரயோகமானது - நிர்குண பிரும்மத்துக்கே ஸகுணமாகவிருத்தல் ஏற்படுவதையொட்டி செய்யப்பட்டதாக ஆகிறது. அம்ருதத்வமானது கிரம முக்தியை ஒட்டிச் சொல்லப் பட்டது. ஸகுண பிரும்மத்துக்குக் கமனம் பொருந்தக்கூடியது - இந்தக்கார்ய (ஸகுண) பிரும்மத்துக்கன்றோ அடையக்கூடியதாக விருத்தல் பொருந்தக்கூடியதாகவாகிறது. வேறு பிரதேசமாக விருப்பதே அதன் காரணமாகும். பரபிரும்மத்தினிடம் கந்த்ருத் வம் (கமனகர்த்ருத்வமோ) கந்தவ்யமோ (அடையக்கூடியதாக விருக்கிறது) கதியோ பொருந்த மாட்டாதன்றோ? அது எங்கும் நீக்கமற (ஸர்வகத) நிறைந்திருப்பதும் - போகின்றவர்களின் பிரத்யகாத்மா ரூபமாக விருப்பதே அதன் காரணமாகும். அதா வது ஹிரண்யகர்ப்பர் அங்கே வசிக்கிறார். பிரும்ம கமயத்-ஸகுண பிரும்ம விஷயமானகதியே மார்க்கமேதான் சொல்லப்படுவதாக அறியப்படுகிறது. லோகாந்-என்பதால் பஹுவசனம் பரபிரும்மத் தினிடம் பொருந்தாது. ஸகுண பிரும்மத்தினிடம் ஸம்பவிக்க லாம் லோகசப்தமும் காரியவர்க்கத்தில் சேர்ந்ததும் ஒருமாதிரி யான போக பூமியில்தான் பொருத்தமாகிறது. "பிரும்மமேதான்

லோகம் இதுவே ஸாம்ராட் ''-இதில் லோகம் கௌணமாகவாகிறது. அடைவித்தலாகிறது. (நயனமானது) ஸகுண பிரும்ம விஷயத்திற்கே பொருந்தும்.

பிரும்ம சப்தத்தினுல் ஸகுண பிரும்மம் சொல்லப்படலாமா? ஸாமீப்யாத்து தத்வ்யபதேச:-அபர (ஸகுண) பிரும்மத்தினது ஸாமீப்யாது. (அபேதமானது) இருப்பதால்-தத்வ்யபதேச;-பிரும்ம சப்தத்தினுல் ஸகுண பிரும்மமும் உபதேசிக்கப்படுகிறது. பரபிரும்மமே உபாதி ஸம்பந்தத்தாலே மனோமயத்வம் முதலிய விகார (காரிய) தர்மங்களுடன் கூடினதாயும்-சிலவிடத்தில் உபாஸனைக்குவேண்டி உபதேசிக்கப்படுவதால் அது அபர பிரும்மம் எனப்படுகிறது. காரியபிரும்மப் பிராப்தி சொல்லும் விஷயத்தில்-சுருதியில் ஆவிருத்தி (திரும்பிச் சொல்லுதல்) யின்மை சொன்னது பொருந்தமாட்டாது சுருதிசொல்வது தேவயானத்தில் செல்லுபவர்கள் இந்த மன்வந்தரம் (கல்பம்) முழுதும் திரும்பமாட்டார், என்பதால் திரும்புதலின் இன்மையைச் சொல்லுகிறது. மேலும் சுருதியில்-ஹிரண்ய கர்ப்ப லோகத்திற்கு நாசம் வந்ததும் - அந்த லோகாதிபதியான ஹிரண்ய கர்ப்பருடன்கூட இதற்குமேல் பட்ட நிர்குண பிரும்ம ஸ்வரூபத்தை (அதாவது கிரம முக்தியாக) அடைகின்றனர். இவ்விதம் சுருதிசொல்கிறது. அதாவது ஸம்யக்தர்சனத்தினுல் (அபரோக்ஷ ஸாக்ஷாத்காரத்தை) உடையவர்களாய்க் கொண்டு - அந்த லோகத்துக்கு அத்யக்ஷரான ஹிரண்ய கர்ப்பருடன்கூட-அதாவது கிரம முக்தியையோ அனுவிருத்தியாதிகளைச் சொல்லும் சுருதியிலிருந்து ஒப்பித் தீர்க்கவேண்டிவருகிறது. கதியை முன்னிட்ட பரபிராப்தியானது ருஜீவாக ஸம்பவிக்கமாட்டாது என்ச் சொல்லப்பட்டதாகும். ஸ்ம்ருதியும் அவ்விதமே சொல்லுகிறது. அதாவது பிரளயம் வந்ததும், (ஹிரண்யகர்ப்பருடைய ஸமஷ்டி லிங்கசரீர ரூபமான விகாரத்திற்கு நாசம் ஏற்பட்டதும்) சுத்தமான புத்தியை உடைய பிரும்மலோக வாசிகள் யாவரும் ஸம்யக் ஞானத்தினுல் மோக்ஷமடைகின்ற பிரும்மதேவனுடன்கூட பரமபதத்தை (பிரும்ம ஸ்வரூபத்தை) அடைகின்றன:-பிரும்மமாக ஆகின்றனர் (இதனுல் எல்லோரும் முக்தியடையும் வரை - மோக்ஷம் உபாஸகனுக்கு ஸம்பவிக்காது) ஆகவே காரிய பிரும்ம விஷயமான கதியானது சுருதியில் சொல்லப்பட்டது (நிர்குண பிரும்ம விஷயமல்ல என்பது) ஸித்தாந்தம்.

மீண்டும் சந்தேகம்-அம்ருதத்வம் என்பது பரபிரும்மத்துக்கே பொருந்தும் - ஸகுண பிரும்மத்துக்குப் பொருந்தாது. (பிரும்ம உபாதியின் நாசத்தையொட்டி அவித்யை நீங்கி - அந்த நாச மான்து காரிய பிரும்மத்துக்கும் சொல்லப்பட்டதாகும்) காரிய மானுல் அழிவுள்ளதாகுமே என்ருல்- நாம ரூபங்கள் எதில் கற்பிக்கப் பட்டனவோ அது பிரும்மம் என்பதாலும் காரிய விலக்ஷண மாக பிரும்மம் இருப்பதாலும் - கந்தவ்யம் பரபிரும்மத்துக்கு இல்லாதபடியாலும் - ஸர்வகதமான்படியால் - பிரும்மமும் ஸர்வ சக்தியுடன் கூடியிருப்பதால் எவ்விதத்திலும் அடையப்படுவது என்பது இல்லை. அவயவமற்றது - சாந்தமானது - குற்றமற்றது - அணுவைவிட வேறுபட்டது, ஸ்தூலத்தைவிட வேறுபட்டது, உள்ளிலும் வெளியிலும் கலந்துள்ளது, ஜனனமற்றது - அஜனும் அஜரனும் அமரனும் அமிருதனும் அபயமான ஆத்மாவே பிரும்மமாகும் - இந்த ஆத்மா नेति नेति - இதில்லை என விலக்கிக்காணக்கூடியது - என்கிற ஸ்ருதி ஸ்மிருதி நியாயங்களை ஒட்டி - தேசம் காலம் முதலிய எத்தகைய விசேஷத்தின் சேர்க்கையும் பரமாத்மாவினிடம் (நிர்குண பிரும்மத்தினிடம்) கல்பிக்க முடியாது.

சுருதிகள் பிரும்ம ஜீவஸ்வருப ஐக்யத்தைச் சொல்வதால் - மிருத்முதலிய திருஷ்டாந்தங்களினுல் ஸத்தும் ஏகமான பிரும்மத்துக்கு ஸத்யத்வத்தையும் (நிர்குணத்தையும்) காரியத் துக்கும் (அநிருத்தத்வத்தையும்) சொல்லுகிற சாஸ்திரமானது கேவலம் உற்பத்தியாதிகளைச் சொல்ல வந்ததாகக் கொள்ள முடியாது. மேலும் சுருதி சொல்கிறது. ஐக்ய ஸாக்ஷாத் காரத்தை அடைந்தவன் எதினின்றும் பயத்தை அடைவதில்லை. பிரும்மாத்ம ஏகத்வத்தை ஸாக்ஷாத்கரிப்பவர்க்கு அந்நிலையில் மோஹமேது? சோகமேது? அத்தகையவர்களுக்கு ஆத்ம ஞானமே முடிவான பலனுகும். ஸத் சப்தப்பொருளுக்கு விக்ஞேயத்தை சுருதிசொல்கிறது. உற்பத்தியாதி சுருதி களுக்கு ஐகாத்மிய ஞானத்தை உபதேசிக்கும் தன்மை காணப்படுவதால் பிரும்மத்துக்கு அநேக சக்தியுடன் கூட்டு சேர்க்கை ஸம்பவிக்கமாட்டாது, (ஒரே பொருளுக்கு பலவித எதிர்த்தடான. சக்திகள் எவ்விதம் பொருந்தும்) அதனுல் கந்தவயம் (கதியினுல் அடையக்கூடியதாக) இருத்தல்

பொருந்தாது. "அவனுடைய பிராணன்கள் வெளிக்கிளம்புவ தில்லை - பிரும்மமாகவே யிருந்து கொண்டு பிரும்மத்தை யடை கிறன்" என்று சுருதி சொல்வதால் - பிரும்மத்தினிடம் கதியை மறுக்கிறது. அது ஸ்பஷ்டோஹி ஏசேஷாம் - என்ற விடத்தில் வியாக்யானம் செய்யப்பட்டது. (அதாவது வித்வான் விஷயத் தில் பிராணனின் உத்திராந்தியில்லை - அவித்வான் விஷயத்தில் கூறி உள்ளது. ஸர்வகத பிரும்மத்தை அடைந்தவரும் - கர்மம் கர்மம் அற்ற பிரும்மவித்துக்கு கதியோ - உத்கிராந்தி யோ இல்லை. பிரும்மத்தை அடைகிறுன் - இவற்ருல் உத்கிராந்தி அபாவத்தைத் தெரிவிக்கிறது.) போகிறவன் போக்வேண்டிய பிரும்மத்துக்கு அவயவமாகவோ - காரிய மாகவோ வேருகவோ ஆகவேண்டிவந்துவிடும். அத்யந்த தாதாத்மியம் (முற்றிலும் பிரும்ம ஸ்வரூபமாக வுள்ளது) என்பதிஞல் கமனம் பொருந்தாது. இதஞல் கிடைப்பது - ஜீவன் பிரும்மத்தின் ஏகதேசம் (அவயவம்) ஆஞலோ, அந்த அவயவமான ஜீவஞல் அவயவியான பிரும்மமானது எப்பொழுது மே அடையப்பட்டிருப்பதால் - திரும்பவும் பிரும்மத்தை அடைவதாகச் சொல்வது பொருந்தாது. பிரும்மம் நிரவயவ மானபடியால் - அவயவாய விகல்பனை செய்வதும் பொருந்தாது. சுருதிபிரஸித்தம். பிரும்மம் அவயவ மற்றது. ஜீவனும் பிரும்மத்தின் காரியம் என்ருல் - காரியத்துடன் காரணப் பொருள் நித்யபிராப்தமாக விருக்கிறது. குடம் மண்ணைவிட்டு தனித்திருப்பது இல்லையன்ருே. தனித்திருந்தால் காரிய ரூபத்துக்கு அபாவம் யேற்படும். ஜீவன் பிரும்மத்தைவிட வேருஞல் — அணுவாகவோ — விபுவாகவோ — மத்யபரிமாண முள்ளதாகவோ இருக்கவேண்டும். வியாபியாஞல் கமனம் இல்லை. (ஸர்வகதமானபடியால்) மத்யபரிமாணம் என்ருல் அநித்யத்வம் ஏற்படும் (காரியகாரணத்துக்கு); அணுத்வம் என்ஞலோ - முழுச்சரீரத்திலுள்ள அறிவு ஏற்படாமல் ஆகிவிடும். அணுத்வம் இரண்டாம் அத்யாயத்தில் மறுக்கப் பட்டது. ஜீவனைப் பரமாத்மாவைவிட வேருகச் சொன்ஞல் - அதாக நீயிருக்கிருய் - என்கிற சுருதிக்கு பாதம்யேற்படும். விகாரம் (காரியம்) அவயவம் என்ற இருபக்ஷங்களிலும்கூட இந்த தோஷம் ஸமானமாகவிருக்கும்.

பிரும்மாத்ம ஐக்யத்தை ஒப்பாவிடில் - கர்த்ருத்வ போக்திருத்வவத்தை ஸ்வபாவமாகவுடைய ஆத்மாவுக்கு (ஜீவனுக்கு) கைவல்யத்தை ஆசைப்படுவது எதிர்பார்க்கமுடியாது. கர்த்ருத்வம் போக்யத்வம் எப்படி நித்யமோ - அப்படியே நிமித்தங்களின் சக்தியுமிருப்பதால் இவ்விரண்டுக்கும் ஸம்பந்தமும் நித்யமாகவே ஆக்கக்கூடுமாதலால் - மோக்ஷம் என்பது ஏற்படுவதற்கிடமில்லாமல் போய்விடும். ஆத்மாவானவன் கர்திருத்வ போக்திருத்வ ஸ்வபாவமாகவே முள்ளபடியால் - வித்யைமூலம் - யேற்படக்கூடிய பிரும்மாத்மா ஐ க் ய ம் ா ன து இல்லாமல் போகவே மோக்ஷத்தைக் குறித்து ஆசைப்பட ஒருபோதும் முடியாது. சுருதி சொல்கிறது. மோக்ஷத்தின் பொருட்டு (ஞானத்தைவிட) வேறுன மார்க்கம் கிடையாது - என்றதால் ஞானம்தான் மோக்ஷமார்க்கம் ஆகும். ஞானம் வந்ததும் எல்லாவற்றையும் ஆத்மாவாகவே பார்க்கிறபடியால் த்வைதம் விலகுகிறது. அதனுல் பரபிரும்மஞானிக்கு கதிகிடையாது.

கதியைச் சொல்லும் சுருதிகள் ஸகுணபிரும்மத்தையே விஷயமாகக் கொண்டன. குணங்கள் ஸகுண உபாஸனைக்கே ஏற்பட்டவை. "அவனுடைய பிராணன்கள் வெளிக்கிளம்புவதில்லை" என்பதால் ஸகுணபிரும்மம் சொல்லப்படுகிறது- பிரும்மவித்து பரத்தை அடைகிறுன் - ஆப்நோதி - என்பதற்கு கதி என்று அர்த்தம் ஏற்படினும் - அவித்யை நீங்கி ஸ்வரூப பிராப்தியேதான் - பிரும்மமாகவிருந்து கொண்டு பிரும்மத்தையடைகிறுன் என்ற விடத்தில் சொல்லப்பட்டதையே அதாவது ஸ்வரூப ஐக்யம் சொல்லப்படுவது எனக்கண்டு கொள்ளவேண்டும்.

பரபிரும்மத்தை அடையருசியை உண்டு பண்ண கதி சொல்லப்படும். கதியைச் சொல்லுவதுமூலம் பரபிரும்மத்துக்கு ருசியை உண்டு பண்ணுவது செய்யப்படுவதில்லை- தன்னுலேயே அறியக்கூடியதும் எவ்விதமறைவு மற்றதும், வித்யையினுல் அறிவிக்கப்பட்டதான ஸ்வாஸ்த்ய (ஸ்வரூபாவஸத்) தினுலேயே அது ஸித்தித்து விடுவதே காரணமாகும். ஆகவே மார்க்கம் அபர பிரும்ம (ஸகுணபிரும்ம) விஷயமே. எது ஸகுணம், எது நிர்குணம் என்கிற பிரித்தறியாமை காரணமாக அபரபிரும்ம

(ஸகுண) விஷயமாகவுள்ள கதி சுருதிகள் பரபிரும்மத்திலிடமே ஆரோபிக்கப்படுகின்றன.

பரம் அபரம் என்று இரண்டு உண்டோ - ஆம். ''ஹேஸத்ய காம - ஓங்காரம் என்பது யாதுண்டோ இதுவேதான் பரமும் அபரமுமான பிரும்மமாகும்'' எதுபரபிரும்மம் என்றால் - எந்த நிலையில் - அவித்யையினுல் செய்யப்பட்டகாமரூபாதி விசேஷங்களை மறுப்பதால் - அஸ்தூலம் முதலிய சப்தங்களினுல் பிரும்மம் உபதேசிக்கப்படுகிறதோ அது பரபிரும்மமாகும். அதே பர பிரும்மம் எந்த நிலையில் சில்நாமரூபாதி விசேஷத்துடன் கூடியதாக மனோமயம், பிராண சரீர! பாரூப; - என்கிற சப்தங்களினுல் உபாஸனைக்கு வேண்டி உபதேசிக்கப்படுகிறதோ - அது அபர பிரும்மமாகும்.

அப்படியாயில் அத்விதீயம் - என்பதற்கு அர்த்தம் என்ன? அவித்யையினுல் செய்யப்பட்ட நாமரூப உபாதியுள்ளதாக இருப்பதினுல் அது அத்விதீயம் - தோஷமில்லை. அவித்யை போக்கப்படாமலிருப்பதால் அதைப்போக்கினுல் - தேச விசேஷகந்தவ்யம் சரியாகும். ஆத்மா ஸர்வகதமாக விருப்பினும் - குடம் முதலியவற்றின் கமனத்தில் ஆகாசத்துக்குப்போல்- புத்தி முதலிய உபாதியின் கமனம் ஏற்படும்போது (ஆத்மாவுக்கும்) கமனம்பிரஸித்தியேற்படுகிறது. இது ''தத்குண ஸாரத்வாத் (2-3-29) என்பதில் சொல்லப்பட்டது ஆகவே ''கார்யம் பாதரி;'' என்றதில் சொல்லப்பட்டது ஸித்தாந்தமாகும். ''பரம்ஜைமிநி''யிற் சொல்லப்பட்டதோ வெனில் அறிவு விசாலமாக ஏற்படுவதற்கு (பூர்பக்ஷத்தைக்காட்டி) பிறகு சொன்ன ஸித்தாந்தம் என்று கண்டு கொள்ளவேண்டும். (பரபிரும்மத்தையேதான் அமானவ புருஷன் அடைவிக்கிறுன் என்று ஜைமினி எண்ணுகிறுர். ஏன்? பிரும்ம சப்தத்துக்கு பரப்பிரும்மம் முக்கியமான பொருளாக விருப்பதே காரணமாகும் என்பதால்).

அமானவபுருஷன் பிரும்மோ பாஸகர்களை பிரும்ம லோகத்தில் சேர்க்கிறுன் என்பதுபோல - ப்ரதீக உபாஸகர்களையும் சேர்க்கிறுனு என்பதற்கு இல்லை. பிரும்ம விஷயமான தியான

யில்லாதிருப்பதாலே - ப்ரதீகத்தின் உபாஸனைக்குப் பலன் சொல்லப்பட்டிருப்பதாலே தத்க்ருது நியாயமும், உபோதபலகமாக விருக்கிறபடியால் - சேர்ப்பதில்லை. ஆனால் பஞ்சாக்னி வித்யோபாஸகர்களைச் சேர்க்கிறான் என்பதாம், (ராமானுஜரின் கருத்துப்படி - எவர்கள் பரபிரும்மத்தை உபாஸிக்கிறார்களோ அவர்களையும் - எவர்கள் பிரகிருதியிலிருந்து (ஸம்சாரத்திலிருந்து) விடுபட்டு தங்களது ஆத்மாவைப் பரமாத்மாவுக்குச் சரீரமாக வைத்து பிரும்மாத்மகமாக உபாஸிக்கிறார்களே - அத்தகைய உபய (இருவகை)யினர்களையும் அழைத்துச் செல்கிறார்கள் (ये परंब्रह्मोपासते चाऽऽत्मानं प्रकृतिविमुक्तं ब्रह्मात्मकमुपासते तान् उभयविधान् नयति) என்பதாம் (அவர் அபிப்ராயப்படி - தத்க்ருத நியாயமும் சேர்ந்து - இரண்டு வகையான ஜீவர்களை- 1) எவர்கள் பிரும்மத்தை தங்கள் ஆத்மாக்களை அந்த பரமாத்மாவுக்கு குணங்களாக (விபூதிகளாக) உபாஸிப்பவர்களோ அவர்கள்; 2) எவர்கள் தங்கள் ஆத்மாக்களில் பிரும்மத்தை அவைகளின் ஆத்மாவாக நினைத்து உபாஸிக்கிறார்களோ அவர்களை; பகவத் கீதை விளக்கத்தில் - இரண்டாவது வகையினருக்கு புநராவிருத்தி யேற்படாமலிருக்கும்படி - ஒருநிலையேற்படுகிறது - இதற்கு கீழானமுக்தி - கைவல்யமுக்தி liter ally (தனிப்பட்டது என்பது பெயர்) இதனால் ஆனந்தம் ஆத்ம ஞானத்தினால் யேற்படுகிறது. ஆனால் பரிபூர்ணபிரும்மானுபவம் யேற்படுவதில்லை.]

அத்வைத சாஸ்திரப்படி - கதியானது கார்ய பிரும்ம விஷயமானதே ஒழிய-பரபிரும்ம விஷயமன்று, எல்லா வித்யா உபாஸகர்களுக்கும் அர்ச்சராதி கதியுண்டு. அதாவது அநியம: ஸ்ர்வாஸாம் என்றவிடத்தில் பொதுவாகவே இந்த கதியானது வேறு வித்யைகளிலும் சொல்லப்பட்டிருக்கிறது என்பதாக ப்ரதீக உபாஸகர்களைத் தவிர்த்து - மற்ற எல்லா விகாரோபாஸகர்களையும் (அமாவை புருஷன்) பிரும்மலோகத்தைச் சேர்ப்பிக்கிறான் என பாதராயண ஆசிரியர் எண்ணுகிறார். இவ்விதம் இரண்டு (உபயதா பாவம்) விதமாகப் பொருள் கொள்ளுதலில் ஒருவித தோஷமுமில்லை. முன்னர் சொன்ன அநியம நியாயமானது (அநியமஸ்ஸர்வாஸாம்) என்கிற சூத்திரத்தினால் நிரூபித்த நியாயமானது ப்ரதீகத்தைவிட வேறான உபாஸனைகளிலும் பொருந்தக்

கூடியதாக ஆகிறது. தத் க்ருது நியாயப்படி. இரண்டு வித மாகப் பொருள் கொள்ளுவதை சரியென்று சொல்ல ஹேதுவாக விருக்கிறது. எவன் பிரும்ம விஷயமான ஸங்கல்பம் உள்ளவனே அவன் பிரும்ம ஸம்பந்தியான ஐஸ்வர்யத்தை அடைவான் என்ப தாகும். "அதை எந்த எந்த விதமாக உபாஸிக்கின்றனரோ, அவ்விதமே ஆகின்றனர். என்று சுருதியிருக்கிறது. ப்ரதிகங் களில் (சாளக்ராம சிலை முதலியன ப்ரதீகங்கள் எனப்படும்) பிரும்ம க்ரதுத்வமானது (பிரும்மம் என்ற சங்கல்பமானது) கிடையாது. அவ்வுபாஸனம் ப்ரதீகத்தை ப்ரதான முக்கியமாகக் கொண்டிருப்பதே அதன் காரணமாகும். (சாளக்ராமம் விஷ்ணு வாகச் சொல்லப்படுவதால் - விஷ்ணுவின் ஐஸ்வர்யத்தை அடை வான் - தத் க்ருது நியாயப்படி). (அர்ச்சராதி கமனம் உண்டு). ப்ரதீக உபாஸகன் விஷயத்தில் தனியாக உபாஸனம் காணப் படுகின்றதோ - அங்கு இவ்விதமிருக்கட்டும். தத் கிருது நியாயத் தினல் பிரும்ம விஷயமான தியானம் செய்வதற்கு பிரும்ம பிராப்தியே ஒழிய மற்றவர்க்கில்லை யென்று அறியப்படுகிறது.

நாமாவுக்கு கதியானது எதுவரை உண்டோ, அவற்றில் நாமோபாஸகனுக்கு தனதிஷ்டப்படி நடத்தல் ஏற்படுகிறது. வாக்கே நாமத்தைக் காட்டிலும்மேல் - வாக்குக்கு எவ்வளவு தூரம் கதியுண்டோ அவ்விடத்தில் இவனுக்கு (வாக்கிந்திரிய உபாஸகனுக்கு) தன் இஷ்டப்படி கமனம் யேற்படுகிறது. மன ஸ்ஸே வாக்கைக் காட்டிலும் மேலானது - என்பதால். இந்த பல விசேஷமும் உபாஸனமானது (வாகாதி) ப்ரதீகத்தை யொட்டி யதாக விருப்பதால் சரியானதே. பிரும்மாதீனமாக உபாஸன மிருந்தாலோபிரும்மம் எங்கும் ஒரே மாதிரியாக வியாபித்திருக்கிற படியால் - பல விசேஷம் எவ்விதம் யேற்படும்? ஆகவே ப்ரீதி கோபாஸகர்களுக்கு மற்ற உபாஸகர்களுடன் சம்மான (துல்ய) பலன் யேற்படமாட்டாது என்று யேற்பட்டதாம்.

ஆகவே இதுவரை நிர்குண பிரும்மோபாஸகர்களுக்கு புண்ணிய பாபங்கள் தேய்ந்ததும் - சரீர அவசியம் இல்லை யென்று யேற்பட்டதும் - பிரும்மத்தினிடத்திலேயே பிராணன்களுக்கு லயம் யேற்படுகிறது ஒழிய - உத்கிராந்தி கிடையாது என்று

சொல்லப்பட்டது. அத்துடன் ஸகுண உபாஸகர்களுக்கும் புண்ய பாபங்கள் தேய்ந்ததும் தலையிலுள்ள சுஷீம்ண நாடி வழியாக வெளிக் கிளம்பி அர்ச்சராதி வழியாக ஸகுண பிரும்ம ப்ராப்தி யேற்படுவதாகவும் சொல்லப்பட்டது. இப்போது நிர்குண பிரும் மத்தின் ஸாக்ஷாத்காரத்தை யடைந்து அதிலேயே ஒடுங்கின பிராணனுள்ளவர்களுக்கு இயற்கையாக வுள்ளதும், விசுத்தசித் ஸ்வரூபமான பிரும்ம அபேதத்துடனும் ஆரோபிதமான ஸர்வ க்ஞத்வாதிருபத்துடனும் அவஸ்தானமும் ஸகுணபிரும்மோபா ஸனம் செய்து ஸகுண பிரும்மத்தை அடைந்தவர்களுக்கு ஸகுண பிரும்ம ஸாயுஜ்யத்துடன் அவஸ்தானமும் (இருப்பிடமும்) ஏற்படுகிறது.

ஏஷ ஸம்ப்ராஸாத:— அவித்யை நீங்கப் பெற்ற இந்த சுத்த ஜீவன் சரீரத்தினிடமிருந்து வெளிக் கிளம்பி ஸ்தூல சூக்ஷ்ம காரணசரீர அபிமானத்தை விலக்கிக் கொண்டு-பரம் ஜ்யோத் ரூப ஸம்பத்ய) பரமானந்த ஜோதியை யடைந்து, ஸ்வேந ருபேண (சொந்த ரூபத்துடன் விளங்குகிறார்). அபிநிஷ்பத்யதே- அபிவ்யக்தனுக ஆகிறுன் - என்பது ஸித்தாந்தப்படி பொருள் கூறப்படுகிறது, ஸம்பத்யாவிர்ப்பாவ: ஸ்வேந சப்தாத்-என்னும் சூத்திரத்தில் அஸ்மாத் சரீரம் ஸமுத்தாய பரம் ஜ்யொதிருபஸம் பத்ய ஸ்வேந ருபேணுபி நிஷ்பத்யதெ — பரம் ஜ்யோதிஷை யடைந்து (அபேத ஸாக்ஷாத் காரத்தை யடைந்து ஆவிர்ப்பாவர் (முன்னதாக இருக்கின்ற சொந்த ஸ்வரூபத்தில் பிரகாசமானது ஏற்படுவதாகவும் சொல்லப்படுகிறது.) ஏனெனில் சுருதியில் ஸ்வேந சப்தம் - ஸ்வரூப போதகமான சப்தம் - பிரயோகப் பட்டிருப்பதே அதன் காரணமாகும். இங்குள்ள சந்தேகம் - முக்தி ஸ்வரூபமானது ஸ்வர்க்காதிகளைப் போல் புதிதாக ஏற்படுகிறதா இல்லையா - அல்லது முன்னரே உள்ளதா- அபிநிஷ்பத்யதே என்பதால் புதிதாக யேற்படுகிறது என்பது பூர்வபக்ஷம். ஸ்வேந ரூபேண என்பதால் (சொந்தமான முன்னரே யுள்ள - ஸ்வேந) என்ற சப்தமிருப்பதால் - முக்தி முன்னரே உள்ளது. அபிநிஷ்பத்யதே என்பதால் ஆவிர்ப்பாவ மாகவேதான் யேற்படுகிறது. அக்ஞான நிவிருத்தியானது பலனுகிறது என்பது சித்தாந்தம். (கிணற்றின் ஜலம் வெட்டப்

பட்டதும் - மீண்டும் தோண்டுவதில்லை - என்பதைப்போல) தனித்த ஆத்மாவினால் மட்டும் ஆவிர்பாகத்தை யடைகிறானே யொழிய - வேறு (புதிதான) தர்மத்துடன் கூட உற்பத்தியை அடைகிறதில்லை. ஏனெனில் - ஸ்வேந சப்தத்தால் - (சொந்த ரூபத்தில் - முந்தி யிருந்த ரூபத்துடன்) தனித்த ஆத்ம ஸ்வரூபத்துடன் மட்டும் ஆவிர்பாகத்தை அடைகிறானே ஒழிய - இடையில் வந்த வேறு ரூபத்தால் இல்லை யானது பற்றி - ஸ்வேன என்ற விசேஷணமானது பயனுள்ளதாக ஆகிறது (பூர்வபக்ஷத்தில் அபிநிஷ்பத்யதே என்பதால் உண்டாக்குகிறான். சித்தாந்தத்தில் ஆவிர்பாவத்தை (பிரகாசத்தை) அடைகிறான் என்பது பொருள்.

ஸ்வரூபத்திற்கு அழிவு இல்லாமை ஸமானமாகவிருக்கும் பொழுது - முன்னிலையிலும் இந்த அவஸ்தையிலும் என்ன விசேஷம் இருக்கிறது - அதற்கு முக்த: பிரதிக்ஞானாத். ஆவிர்பாவத்தை யடைபவன் முக்தன் எனப்படுகிறான். சுருதி அவ்விதம் சொல்லுகிறது. சுத்தமான ஆத்மாவுடன் (ஸ்வரூபத்துடன்) பிரகாசிக்கிறான். முன்னிலையில் பொட்டையானவன் போலும் - அவித்யையினால் கலங்கினவனாக ஆனேன் - இப்போதில்லை. இது எவ்விதம் அறியப்படுகிறது? உபதேசத்தினால் (பிரதிக்ஞானத்தினால்) - "இவனையே உனக்குத் திரும்பச் சொல்லுகிறேன் - விளக்கமாக" - அவஸ்தாஸ்ரயமான தோஷமற்ற ஆத்மாவை விளக்க பிரதிக்ஞை செய்து - "சரீரமற்றிருப்பவனைத் துக்கங்கள் சுகங்கள் ஸ்பர்சிப்பதில்லை" என்று உபதேசித்து சொந்த ரூபத்துடன் ஆவிர்பாவத்தை அடைந்து உத்தம புருஷனாகிறான்." என்று சுருதி சொல்வதால் கதை தொடக்கத்திலும் - எந்த புண்ய பாப சம்பந்தமற்ற ஆத்மா உண்டோ - முக்தனான ஆத்ம விஷயமாகவே பிரதிக்ஞை செய்யப்பட்டிருக்கிறது. மோக்ஷத்துக்குப் பலத்தன்மையும் பிரஸித்தியும் - பந்த நிவிருத்தியும் மட்டும் அபேக்ஷித்ததே யொழிய - புதிதாக ஒன்றின் உற்பத்தியை அபேக்ஷிக்கவில்லை. அபிநிஷ்பத்யதே என்பது உத்பத்தியைக் கூறும் மாற்றுப்பதம் என யாதொன்று சொல்லப்பட்டதோ அதுவும் - அரோகியாக - ரோகம் நீங்கி அபிநிஷ்பத்தியை அடைகிறான் - ஆகிவிடுகிறான். முந்தின் நிலையை அபேக்ஷித்து - பெற்றதாகும்.

ஆத்மா ப்ரகரணுத் - பரம் ஜ்யோதி ரூபஸம்பத்ய என்கிறதில் ஜ்யோதி : என்று சொல்லப்படுவது ஆத்மாவேயாகும். பரமாத்ம பிரகரணமாக விருப்பதே அதன் காரணமாகும் அதாவது முக்தன் என்பதால் பரம்ஜ்யோதி ரூபஸம்பத்ய - என்கிறபடி, இவனைக் காரிய வகுப்பில் சேர்ந்தவனுக ஸ்ருதி தெரிவிக்கிறது. ஆத்மாவே ஜ்யோதி என்று உபதேசிக்கப்படுகிறது. ஆத்மாவின் பிரகரண மாக இருப்பதுபற்றி, பாப ஸம்பந்த மற்றதும் ஜரையற்றதும் மரணமற்றதுமான யாதொரு ஆத்மாவுண்டோ - எனப் பரமான ஆத்மாவானது ப்ரகிருதமாக விருக்கும்போது திடீரெனப் பௌதிகமான ஜ்யோதிஷை கிரஹிப்பது பொருந்தாது. பிரகிருதத்தில் தொடர்ந்து வரும் பொருளை (அவித்யையை) விடுதலும் - தொடர்ந்துவராததை (சுத்த பிரும்மானது) கல்பித்தலும் வரத்தெரியும். ஜியோதி: சப்தம் ஆத்மாவில் (ஜ்யோதிஸ்ஸீக்களுக்கு ஜ்யோதிஸ்ஸான அதை) - என்று பிரயோகம் கொள்ள வேண்டியது. (ஜ்யோதிர் - தர்ஸனுத் - என்பதாலும் விளக்கம் பார்க்கவும்).

அடுத்தகேள்வி, முக்தன் பரமாத்மாவுடன் எவ்விதமாக அபின்னனுகவே ஆகிருன் - சுருதியில் சொல்லப்பட்டது அபின்னனுகவே ஆகிருன். பூர்வபக்ஷி வேறுபட்டவனுகத்தான் சொல்லவேண்டும். ஜ்யோதிசைக்கடந்து என்றவிடத்தில் கர்ம (இரண்டாம் வேற்றுமையுள்ள பொருள்) கர்த்தா (அடையும் பொருள்) ஆகியபேதம் (வேற்றுமை) சொல்லப்பட்டிருக்கிறதே- அதுகாரணம் என்கிருன் பூர்வபக்ஷி-பரம் ஜ்யோதிஸ்ஸை யடைந்த வனுடைய ரூபத்துக்கு "அவன் உத்தம புருஷன்" என்பதாய் - பிரும்மத்வம் சொல்லியிருப்பதால் அபின்னமாக (வேறு படாத தாக)வே தான் அது ஆகிறது. கர்மகர்திருபேதமானது உபகார முறையை ஒட்டிச் சொல்லப்பட்டதெனக் கண்டு கொள்ள வேண்டும் - என்பது ஸித்தாந்தம். பரம ஜ்யோதிஸையடைந்து - என்று கர்த்ரு கர்ம நிர்த்தேசம் காணப்படுவதாலும் (பரமாத் மாவைவிட) வேருகவே இருப்புச் சொல்லவேண்டும் என எவனுக்கு என்னமுதயமாகிறதோ - அவனை முக்தன் பரமாத் மாவுடன் அபின்னனுகவே (வேறுபடாதவனுகவே) இருக்கிருன்- என்றதால் திருத்துகிஞர். ஏன்? ஸ்ருதியில் "நீ அதாக விருக்

கிருய்,'' ''நான் பிரும்மமாக விருக்கிறேன்,'' ''என்நிலையில் பிறவொன்றைப் பார்ப்பதில்லையோ'', ''அதைக்காட்டிலும் வேறு பட்டதாக எதுவொன்றைப் பார்ப்பானோ அத்தகைய இரண்டாவது பொருள் ஒன்று மில்லையன்றோ?'' என்கிற வாக்கியங்கள் அபின்னனுகப் பரமாத்மாவைத் தெரிவிக்கின்றன. தத்கிரது நியாயத்தை ஒட்டி - தர்சினத்துக்குத் தக்கபடியே பலன் சொல்லுவதுதான் பொருத்தம். ''சுத்த ஜலத்துடன் சேர்க்கப் பட்ட ஜலமானது எவ்விதம் சுத்த ஜலமாகவே ஆகின்றதோ - அவ்விதமே ஆத்ம சாக்ஷாத்காரமுடைய முனிவரின் ஆத்மா ஆகிறது. இதனுல் முக்தனுடைய ஸ்வரூபத்தை நிருபிக்கும் வாக்யங்கள் அபேதத்தையே தெரிவிக்கின்றன. நதிகள் சமுத்திரத்தை அடைவது - அபேதத்தையே தெரிவிக்கின்றது. அபேதம் இருப்பினும் - பேத நிர்தேசமானது உபகாரமுறையால் செய்யப்படுகிறது. ஆத்மாவிலே ரதி (கிரீடை) செய்கிருர் என்கிற சுருதிபாலவசனம்.

ஸகுணத்வம் நிர்குணத்வம் இரண்டும் ஒரே சமயத்தில் வருவதாகச் சொன்னல் விரோதப்படமாட்டாது. சுருதியில் கிரமமாக வருவதாகச் சொல்லப்படவில்லை. ஆத்மா - பாபசம்பந்தமற்ற அபஹதபாப்பாப்மத்வம் - ஸத்யகாம ஸத்யஸங்கல்பத்வம் - என்றது ஆத்ம ஸவரூபத்தைச் சொல்லியதாம். அவனுக்கு சஞ்சாரம் எல்லா உலகங்களிலுமிருக்கிறது. ஸர்வக்ரு - ஸர்வேஸ்வரன் - இத்யாதி வியபதேசங்களும் பொருந்தும். வஸ்து ஸ்வரூபத்தினுல் - இவருடைய காமங்கள் உண்மையானவை - என்கிற வ்யுத்பத்தியினுல் பிரும்ம தர்மங்களாகச் சொல்லப்படுகின்றன. உபாதி சம்பந்தத்தால் சைதன்யம் போல பிரும்ம ஸ்வரூபத்தில் சேர்ந்தனவாகமாட்டா.

உண்மை நிலையில் சைதன்யம்மட்டுமே இந்த ஆத்மாவின் ஸ்வரூபமாகிறது - ஆவிர்பாவம் சொல்வதுதான் சரியாகும். வ்யவஹாரதசையில் அதாவது பிரும்ஹாத்ம ஐக்ய ஸாக்ஷாத்காரம் வரும்வரை வ்யவஹார தசையாகும். பந்த நிலையை ஒட்டியே ஸத்யகாமத்வாதி உபந்யாஸம் செய்திருப்பதாலும் - பந்தாவஸ்தையிலுள்ள ஸத்யஸங்கல்பத்வாதிகளின் பாவம்

பிரும்மத்தினிடம் யேற்படுவதால் - ஜைமினி ஔடலோமி - இருவர்களின் மதத்திலும் விரோதமின்மையை (அதாவது பந்த நிலையில் ஈஸ்வரனிடத்தில் ஸத்யஸங்கல்பாதிகள் வாஸ்தவ மென்றும், முக்தாவஸ்தையில் எவ்வித தர்மமுமின்றி சைதன்ய மாத்ரமாயுள்ளதென்றுமான விரோதமின்மையை) பாதராயணர் எண்ணுகிறார். வ்யவஹாரிக தசையில் பிரும்மத்தின் ஐஸ்வர்ய ரூபத்துக்கு மறுப்பு இல்லாமை விரோதமாகாது. (இவருடைய பாதராயணரின்-மதத்தில் முக்தர்களான ஜீவர்களிடம் அவித்யை நீக்கப்பட்டாலும் - பத்த ஜீவர்களிடத்திலுள்ள அவித்யாதி களினல் ஈஸ்வரனிடம் ஸர்வக் ஞாதிவாதிகள் ஆரோபிதமாக விருக்கிறது. ஆகவே வ்யவஹாரிகையில் ஸர்வக்ஞத்வாதி களுக்குப் பாரமார்த்திகமான நிர்விசேஷ சிதாத்மஸ்வரூபத் துடன் விரோதம் ஏற்படாதாகையால், அபஹதபாப்மத்வம் முதலியவற்றிற்கு ஔடுலோமி சொல்கிறபடி (அத்தகைய ஸர்வக்ஞத்வம் - அபஹதபாப்மத்வம் - தர்மங்கள் பிரும்மத்தி னிடம் கிடையாது) எவ்வித பொருளுமற்றதன்மை (அதாவது விகல்பம்) சொல்லவேண்டுவதில்லை என்று யேற்படுகிறது. பாரமார்த்திகதசையில் கேவலம் சைதன்யமாத்திர ஸ்வரூப முள்ளதாக விருப்பதாம்.

மோக்ஷத்தில் சரீர இந்திரியங்கள் அபாவம் (இல்லை) என்று தான் சொல்லவேண்டும். மனத்தினல் ரமிக்கிறன் - என்று சுருதியிருப்பதால் பாதரியின் அபிப்ராயம் சரியில்லை. ஜைமினி யோ - மனத்துக்குப்போல சரீர இந்திரியங்களுக்கும் இருப்பை எண்ணுகிறார். சுருதி அவ்விதம் சொல்கிறது - ஒருவனாக விருக்கிறன் - மூன்றுவிதமாக ஆகிறன் என்று. பாதராயணரோ உபயவிதம் (சரீரத்துடனிருப்பது - சரீரமில்லாமலிருத்தல்) இரண்டையும் ஸாதுவாக எண்ணுகிறார். த்வாதசாஹம் என்ற கிரதுவானதுபோல உபயவிதம். ஸத்ரம் என்றும் அஹீனம் என்ற பெயருள்ளதாகவும் ஆவதுபோல சரீரத்வம் அசரீரவத்வம் இரண்டுமே பொருத்தமாம்.

பிரும்மலோகத்தில் உபாஸகனுக்கு யேற்படும் அநேக தேகங்கள் ஆத்மா உள்ளனவா— இல்லையா? ஒரு

தீபத்திலிருந்து பல தீபங்கள் உண்டாவதுபோல அந்தந்த மனோவச்சின்ன ஆத்மாக்களால் அந்தந்த தேஹங்கள் ஆத்மாவுடன் கூடினவைகளாகவே ஆகின்றன - மூன்று விதமாக ஆகிறான் - என்று சுருதி சொல்வதால் - இது சித்தாந்தம். முக்த னுக்கு சரீரத்துடன் கூடியிருத்தல் சொல்லப்பட்டது. மூன்று விதமாக ஆகிறான் - காரிய சக்தி யோகத்தினால் அநேக தீபமாக வாகுதலை யடைகிறதோ இவ்விதமே உபாஸகன் ஒருவனாக விருப்பினும், அணிமாதி சித்திகளால் பல சரீரங்களில் பிரவேசிக் கிறான். சாஸ்திரம் அவ்விதம் சொல்லியிருப்பதே காரணம். ஒருவனுக்கு அநேக பாவத்தை (ஒருவனே அநேகமாக வாகுதலை) தெரிவித்திருப்பதே அதன் காரணமாகும். "உபாஸகன் ஒன்று - மூன்று ஐந்து ஏழு - விதமாக ஆகிறான் என்று சுருதி சொல்வதால் யோக சாஸ்திரம் இதை அனுமதிக்கிறது. (ஸௌபரி உதாரணமும் நினைக்க வேண்டியது) ஸகுண பிரும்ம வித்யையின் பலனை இது பற்றியதால் - ஸ்வர்க்காதிகளைப் போல இதுவும் ஒரு அவஸ்தை தான் - அதில் ஐஸ்வரியம் சொல்லப்படுகிறது. ஆனது பற்றி பரமார்த்திக நிலையுடன் தோஷமில்லை. வியவஹாரிக தசையில். ஐஸ்வர்யங்கள் யேற்படுவது ச்ஹஜம்.

முக்தர்களுக்கு ஏற்படும் ஐஸ்வர்யமானது ஜகத்தின் ஸ்ருஷ்டி யாதி தவிர்த்து - ஜகத் வ்யாபார வர்ஜம் - மீதமுள்ளதே யாகும். ஜகத் ஸ்ருஷ்டியானது நித்ய ஸித்த ஈஸ்வரனுடையதாக விருப் பதே அதன் காரணமாகும். அந்த ஸ்ருஷ்டி' ஸ்திதிலயம் இவை களைச் சொல்லுமிடம் ஈஸ்வரனைப் பற்றிச் சொல்லும் பிரகரண மாகவிருப்பது ஜீவாதிகளுக்கு அவ்விடத்தில் உபதேசமில்லா திருப்பதும் அதன் காரணமாகும். அதாவது - ஸ்வராஜ்ய நிலையில் - அணிமாதி சித்திகள் பரிபூர்ணமாக விருப்பதால் - முக்தர்களுக்கு ஸ்ருஷ்டி உண்டு என்கிறான் பூர்வபக்ஷி. ஆனால் ஸ்ருஷ்டி சொல்லப் படும் பிரகரணத்தில் ஜீவன் சொல்லப்படாததாலே முக்தர் களுக்கு ஸ்ருஷ்டிருத்வம் கிடையாது. ஈஸ்வரன் முக்தர்களுக்குப் போகத்துக்கு வேண்டி ஸ்வராஜ்யத்தையும், வித்யையினால் அபரோக்ஷ ஸாக்ஷாத்காரத்தினால் முக்தியைக் கொடுக்கிறார் என்பது சித்தாந்தம். ஜகத்வ்யாபர வர்ஜம் என்ற சூத்ரம். ஜகத் ஸ்ருஷ்டியாதி ஈஸ்வரனுடைய காரியமாகும் - ஸ்ருஷ்டி

பிரகரணத்தில் ஈஸ்வரனே பிரகிருதராகவிருப்பதும் - யோகிகள் (முக்த ஜீவர்கள்) பிரகிருதர்களாக இல்லாதிருப்பதுமே அதன் காரணமாகும். அவரைத் தொடர்ந்தே ஜகத் உற்பத்தி உபதேசம் சொல்லப்படுகிறது. ஈஸ்வரன் நித்யனுகவும் சுருதி யினுல் மட்டும் அறியக் கூடியவராக விருப்பதும் இன்னெரு காரணம். மற்றவர்களுக்கு ஈஸ்வரன் அன்வேஷணம் - தேடப்பட வேண்டிய பொருள். இவர்கள் மனஸ்ஸுடன் கூடியிருப்பதால் - ஒரு முக்தனுக்கு ஸ்ருஷ்டியில் எண்ணமும் மற்றவனுக்கு ஸம்ஹார த்தில் அபிப்ராயமும் ஏற்படலாம், பரமேஸ்வரனுடைய ஸங்கல் பத்தை ஒட்டியே மற்ற எல்லா முக்தர்களுடைய சங்கல்பமும் யேற்படுகிறது. பகவத் அனுகூலர்களாக விருக்கிருர்கள். இதனுல் உபாஸகர்களின் ஐஸ்வர்யம் குறைவு படாது.

சாஸ்திரம் பரமேஸ்வரனுக்கு இரு வித ஸ்திதியைச் சொல்லு கிறது, விகாரத்திற் சேராததாகவும் விகாரத்திலிருப்பதாகவுமிருக் கிறது, அதாவது நித்யமுக்தமாகவும், சூரியமண்டலாதிகளை அதிஷ் டானமாகவுடையதும், விகாரத்தில் (காரிய வர்க்கத்தில் மட்டும் இருப்பதாகவும் சொல்லவில்லை. இவரது ஸ்வரூபம் அத்தகையது - புருஷன் (ஈஸ்வரன்) இந்த விகாரத்தைவிட மேல்பட்டவர். விகார ஸம்பந்தமே யற்றவர். எல்லாப் பூதங்களும் இவருடைய பாதங்க ளாகும். திரிபாத அம்ருத ஸ்வரூபமானது ஸ்வப்ரகாசமான சொந்த ரூபத்திலிருக்கிறது. அத்தகைய நிர்விகார (நிர்குண) ஸ்வரூபத்தை வேறு ரூபத்தை உபாஸிப்பவர் அடைகிருர் எனச் சொல்லமுடியாது. பரமேஸ்வரன் இருவித ரூபமுள்ளதாகயிருப் பதில் - நிர்க்குணமான ரூபத்தை யடையாமல் - ஸகுண ரூபத்தி லேயே இருக்கின்றனர் - என்பது போல ஸகுண ரூபத்திலும் குறை வற்ற ஐஸ்வர்யத்தை யடையாமல் - குறைவுள்ள ஐஸ்வரியத்தி லேயே இருக்கிருர் என்று தெளியவேண்டும். சுருதிகள் நிர்குண பிரும்மத்துக்கு விகாரத்துடன் சம்பந்த மின்மையைத் தெரிவித் திருக்கின்றன; அதாவது அதைச் சூர்யன் ப்ரகாசப்படுத்துவதில்லை. இதனுல் பரம் ஜ்யோதிசுக்கு விகார ஸம்பந்தமின்மை என்பது சுருதி பிரஸித்தம்.

ஆகவே உபாஸகனுக்கு போக மாத்திரம் ஸாம்யம் - அனுதி ஸித்த ஈஸ்வரனுடைய சரீரத்துடன் மட்டும் ஸாம்யத்தைச் சொல்

லும் சுருதிலிங்கத்தைக் கொண்டும் ஸகுண உபாஸகர்களுக்கு குறைவுள்ள ஐஸ்வரிய ஸித்தியேற்படுகிறதாக சித்தம். போக மாத்திரத்தாலே ஈஸ்வரனுடன் ஸாம்யம். ஸகுணபிரும்மோபா ஸகர்களுக்குயேற்படுகிறது. நிரங்குசமான (எவ்வித குறைவுமற்ற) ஐஸ்வரியம் சித்திப்பதில்லை. அதாவது "அந்த உபாஸகனை ஹிரண்ய கர்ப்பர் சொல்லுவதாவது -" என்னுல் இந்த அம்ருதமய ஜலங்கள் புஜிக்கப்படுகின்றன. உனக்கு இவை புஜிக்கத் தக்கதாகும். "இந்த உபாஸகனை எல்லாப் பூதங்களும் ரக்ஷிக்கின்றன" இந்த தேவதை யை எல்லாப் பூதங்களும் காத்து ரக்ஷிப்பது போல" இதனுல் ஹிரண்ய கர்ப்பருடைய ஸாயுஜ்யத்தையும் (ஸமானமான தேஹத்தையும்) ஸமானமான லோகத்தையும் (முக்தன்) அடை கிருன் - என்கிற பேதமான உபதேசலிங்கங்கள் சுருதிகளில் காணப்படுவதால். சூத்ரத்தில் - போக மாத்திரம் ஸாம்யம் - உபாஸ்ய பிரும்மத்துக்குரிய போகம், விஷயானுபவம் எது உண்டோ, அத்தகைய விஷயானுபவம் எது உண்டோ, அத் தகைய் விஷயானுபவம் ஸகுண உபாஸகனுக்கும் உண்டென்றும் அவருடைய சரீரம் போன்ற சரீரப் ப்ராப்தியும் உபாஸகனுக்கும் உண்டு என்று பொருள் கொள்ளவும்.

இவ்விதமான உயர்வு தாழ்வுள்ளதாக விருப்பதால் - ஸகுண பிரும்மத்தின் ஐஸ்வர்ய அந்தத்வம் (முடிவு - அழிவு) ஏற்பட வாம். அதிலிருந்து உபாஸகர்களுக்கு பிரும்ம லோகத்தினின்றும் புனராவிருத்தி (சம்சாரத்தில் மறுபிறப்பு) ஏற்படுமா - என்கிற சந்தேகத்திற்கு - பகவானுன பாதாராயணரே அநாவிருத்தி: சப்தாத் அநாவிருத்தி: சப்தாத் - அர்ச்சிராதி மார்க்கத்தினுல் கமனம் யேற்பட்டவனுக்கு ஒரு மன்வந்தரம் (ஒரு கல்பம்) திரும்பி வருதல் கிடையாது. இது சுருதியின் வசனமாகும். அநாவிருத்தி:; சப்தாத் - என்று இரு தடவைகள் கூறியபடியால் சாஸ்திர முடிவைக் காட்டுகிறது.

அதாவது தேவயான மார்க்கத்தினுல் அடைபவர்கள் சந்திரலோகத்தை அடைந்தவர்கள். போகம் கழிந்ததும் திரும்பி வருகிருர்களே - அது போலே பிரும்ம லோகத்திலிருந்து திரும்பி வருவதில்லை. இவர்கள் அடையும் பிரும்மலோகம் - பூலோகத்தி

லிருந்து மூன்றுவதான தேவலோகத்திலுள்ள எந்த பிரும்ம லோகத்தில் அம்ருத மடுக்களும், அன்னங்களும், மதீய ஸர: (குளம்) இருப்பதும் அம்ருதத்தை வர்ஷிக்கும் அரசமரம் இருப் பதும், அபராஜிதை யென்று பிரும்மபட்டிணமும் ஹிரண்மய மான வீடுகளும் இருக்கின்றனவோ - இவை யாவும் விவரித்துச் சொல்லப்பட்டதாகும். ஸீஷும்ந நாடி வழியாகச் சென்ற வனுக்கு புநரா விருத்தி இல்லை. இதனால் செல்லுபவர் இந்த மந் வந்தரம் முழுதும் திரும்புவதுமில்லை - பிரும்ம லோகத்தை அடை கிறுன் - திரும்பி வருகிறுன் என்பதுமில்லை - என்கிற சுருதி வசனங்களிருப்பதால் - ஐச்வர்யங்கள் அழிவுள்ளதாக விருப்பி னும் - புனராவிருத்தி ஸம்பவிப்பதில்லை - கார்யாத்யயே ததத்ய க்ஷேண ஸஹ அத: பரமபிதாநாத் (பி - சூ, 4-3-10)ல் சொல்லப் பட்டது. (அதாவது ஹிரண்ய கர்ப்பருடன் கூட இதற்கு மேல் பட்ட நிர்குண பிரும்ம ஸ்வரூபத்தை அடைகின்றனர் - எப்போது ஹிரண்யகர்ப்பரின் லோகம் நாசமடையும் போது - அவ்விதம் சுருதி சொல்லியிருப்பதால்) - ஸம்யக்தர்சனத்திறல் அக்ஞானம் போக்கப்பட்டவர்களும் - நித்ய ஸித்தமான கைவல்யத்தை யடைந்தவர்களுமானவர்க்கு (நிர்குண பிரும்மாத்மைக்ய ஸாக்ஷா த்காரம் வந்தவர்களுக்கு) அநர்விருத்தியானது ஸித்தமாகவிருக் கிறது. அந்த ஸம்யக்தர்சனத்தை ஆஸ்ரயித்தன்றோ - ஸகுண பிரும்மோபாஸகர்களுக்கும் அநாவிருத்தியானது ஸித்திக்கிறது. இது தான் ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யர்களான கோவிந்த பகவத் பாதர்களின் சிஷ்யர்களான ஸ்ரீமத் சங்கர பகவத் பூஜ்ய பாதரவர்களின் க்ருதியான சாரீரக மீமாம்ஸா பாஷ்யத்தின் நான்கு அத்யாயங்கள் - அவைகளின் நான்கு பாதங் களின் - முக்கிய கருத்துக்களாகும். **ஸம்பூர்ணம்.**

— சுபம் —

இவைகளை ஸ்ரீமத் ராமானுஜ பாஷ்யத்துடன் ஆங்காங்கு ஒப்பிட்டுப் பார்த்து மனம் தெளியவும். (தை வெள்ளி-அஷ்டமி கிருத்திகை - பீஷ்மாஷ்டமி - ருத்ரோத்காரி - 1rth Feb - 1984)

— x —

# SECTION — III

# பகவத் ராமானுஜ ஸ்ரீ வைஷ்ண சித்தாந்தம்

*(அவரது ஒன்பது கிரந்தங்களிலிருந்து தொகுக்கப்பட்டது)*

ஸ்ரீமத் ராமானுஜர் ஸ்ரீபாஷ்யமெனப்படும் பிரும்ம சூத்ரத்திற்கு விளக்க உரையும் பகவத் கீதைக்கும் - வேதாந்த ஸார்ம் - வேதார்த்த ஸங்கிரஹம், தீபம், நித்யகிரந்தம் மூன்று கத்யங்கள் ஆக ஒன்பது நூல்களை இயற்றினார். அவர் விஷ்ணுபுராணம், பாகவத புராணங்களிலும் மனப்பற்றுக் கொண்டவராக - "பிரஸ்தான த்ரயம் (பிரும்ம சூத்ரம்) - உபநிஷத் - கீதை) என்கிற நூல்களின் அர்த்தங்களை, வைஷ்ணவப்பெரியோர்களான நம்மாழ்வார், நாதமுனிகள், யாமுனச்சாரியார் போன்றவர்களால் இயற்றப்பட்ட சம்ஸ்கிருத திரவிட நூல்களை கொண்டக் கருத்துக்களையும், ராமாயணம் போன்ற இதிஹாஸக் கருத்துக்களையும் போதாயனர், திரமிடர், டங்கர் போன்ற வேதாந்திகளின் கருத்துக்களுக்கு இணங்க-தமது ஸ்ரீபாஷ்யத்தை கூரத்தாழ்வாரின் ஒத்தாசையினால் எழுதி முடித்து பிரசாரம் செய்தார். அவருடைய ஸ்ரீ வைஷ்ணவ சித்தாந்தத்தின் முக்கிய கருத்துக்களானவை :—

சங்கரரின் அத்வைதக் கொள்கைகளையும் - கேவலம் ஞானம் ஒன்றையே அவலம்பித்து அதனால் தான் மோக்ஷம் சித்திக்கும் என்கிற வாதத்தை எதிர்த்தும் ; அதுபோல கேவலம் கர்மத்தையே அவலம்பித்த கர்மமீமாம்ஸகர்கள் வைதிக கர்மாக்களை - அதனால் யேற்படும் ஜாதி புரோகிதனின் கடமைகள் - கர்மாக்களையும் எதிர்த்து தமது புதிய சித்தாந்தத்தை ஸ்தாபித்தார். அவருக்கு ஜாதி வித்யாஸங்களும் - சமூக வாழ்க்கையில் யேற்பட்டுள்ள விதிவிலக்குகளும் சரிதான் என்று சொல்லுபவராக இருந்தாலும்-எல்லா ஜாதியினர்களுக்கும் விமோசனம் - முக்தி உண்டு- ஏழை பணக்காரன் உயர்ந்தகுலம் தாழ்ந்தகுலம் என்று வித்யாஸமின்றி - படித்தவன் படிக்காதவன் - ஞானமுள்ளவன் ஞானமில்லாதவன் - யாவருக்கும் முக்தி உண்டு என்றார். இத்தகைய முக்தி அத்வைதத்தினரால் சொல்லப்படும் ஜீவ பிரும்ம ஐக்யத்தினால் யேற்படாது; அதுமாதிரி கர்ம பட்

க்களால் சொல்லப்படும் வைதிக கர்மாக்கள் ஒன்றினாலேயே அடையப்பட முடியாதென்றும்; கர்மமும் ஞானமும் மோக்ஷத்திற்கு அவசியமானாலும் - அவைகளால் பரஞானமும் - பரபக்தியும் யேற்பட்டு - பரமாபக்தி என்று சொல்லப்படும் பகவான் நாராயணரின் வைஷ்ணவ அவதாரங்கள் அர்ச்சாவிக்ரஹங்கள் இத்யாதிகளை பக்தியுடன் உபாஸித்து - அவருடைய கிருபையை ஏ க ம ா த் தி ர ம ா க சம்பாதித்து - வீடுபெறலாம் என்றார். கர்மத்திலே - ஞானம் அந்தர் கதம் பகவத் ஆராதனையாகச் செய்யப்படுவதாலே - பல தியாகம் - கர்திருத்வதியாகம்- மமதா தியாகம், இத்யாதிகளால் மனம் சுத்தமடைந்து - பக்தியாக பரிணமிக்கிறது. எல்லா ஆஸ்திகசார்பினர்களை ஒப்புக்கொள்கிறவராக, அவர் ஈஸ்வரனை - விஷ்ணு, நாராயணர் என்பவரை தமது இஷ்டதேவதையாகக்கொண்டு சேதனனாகிற ஜீவனுக்கும் - அசேதனமாகிற அசித்வஸ்துவிற்கும் வஸ்துத்வம் - ஒரு உண்மையான ஆகாரம். நிலேஸ்திதி - பரமாத்மாவின் அனுப்ரவேசத்தினால் யேற்படுவதாகவும் - இப்பிரபஞ்சம் முழுவதும் சித்அசித்விசிஷ்ட பிரும்மம்தான் (கூட்டுச்சேர்க்கைபெற்ற) - அதுவும் ஸகுணமான பிரும்மம்தான் மஹாலக்ஷ்மியுடன் கூடின ஸ்ரீமந் நாராயணரே - அவர்தான் பரதத்வம், அவரை ஏகபக்தியுடன் உபாஸிப்பதால் வீடு பெறலாம் என்று சித்தாந்தம் செய்தார். இதனால் யேற்பட்டது அத்வைதிகளால் சொல்லப்படும் பிரும்மம் ஸத்யம் ஜகத் மித்யை - எனப்படும் மாயாவாதம் தள்ளப்பட்டு; இந்த ஜீவனாகிற சேதனன் தனது நிஜஸ்வரூபத்தை பரமாத்மா ஜீவ ஐக்யத்தினால் அடைகிறதில்லை; ஸவிசேஷ பிரும்மத்தை உபாஸனமாகக்கொள்வதால் - நிர்விசேஷ பிரும்மம் உபாஸனைக்குரியதல்ல - नीलतोयद मध्यस्था विद्युल्लेखेव भास्वरा - கருநீலகன சியாம பிரும்மம் - மின்னலுடன்கூடச் சேர்ந்த பிரும்மம் - அதாவது லக்ஷ்மியுடன்கூடிய நாராயணருடன் - கூடி கைங்கர்ய, தாஸ்ய பாவத்தினால் அடையப்படும் பாவமே - சித்தவிருத்தியே - இஷ்டதைவத்துடன் ஒன்பதுவித பந்துத்வத்துடன் கூடச் சேர்க்கைபெற்று - அந்த நித்யதம்பதிகளின் ஆனந்த உகப்புக்காகவே சேதனன் வாழ்வதே மோக்ஷநிலையாகும்-வைகுண்ட பிராப்தி-என்று ஸ்தாபித்தார்.

இறைவன் அவரவர்களுக்கு இஷ்டமான தெய்வமானாலும்-ஸ்ரீமந் நாராயணரே பரதத்வம் என்றும் ஸர்வ உத்கிருஷ்டமான தேவதை என்றும்-ஐக்ய மிதுனமே அதாவது மஹாலக்ஷ்மியுடன் கூடிய ஸ்ரீமந் நாராயணரே-உத்தேஸ்யம்-என்றார். சங்கர பகவத் பாதாளுடைய நிர்விசேஷ பிரும்மம் ஒரு சூன்யமான பிரதேச த்தை-பாவத்தை-குறிப்பது என்றில்லாமல் - பிரத்யக்ஷத்திற்கும் - அனுமானத்திற்கும் சுருதிகளுக்கும் அறியப்படாதபடி - விருக்கும் தத்வமாக விருக்கிறது என்கிறார்-ஸ்ரீமத் ராமானுஜருக்கு பகவானு டைய ஸ்வரூபமே-ஸத்சித் ஆனந்தம். அவர் அவாப்த ஸமஸ்த காமன் வெளி உதவியேதுமின்றி - எல்லாக்காரியங்களையும் சாதிக் கத் திறமைவாய்ந்த ஸர்வசக்தி-ஸர்வக்ஞ (முக்காலங்களை அறிபவ ராகவும்)-ஸத்ய ஸங்கல்பாதி வீர்யம் கொண்டவராகவும் - தன்து அடிமைகளான பக்தர்களிடம் பரமபிரீதியாகவிருக்கிறார் - தூது போவது-சாரத்யம் செய்வதுபோன்ற நீசமான காரியங்களையும் தன் பக்தர்களுக்காக-தமது மேன்மையைப் பாராமல் செய்து கொடுக்கும் சுலபத்தன்மை சௌலப்ய வாத்ஸல்ய சௌசீல்யாதி களுடன் விளங்குகிறார். அவரே எல்லாக்கர்மங்களுக்கும் பல ப்ரதன் (பலனை அளிப்பவர்) - சுகதுக்கங்களை தன் இஷ்டம்போல பக்ஷபாதி அளிக்காமல் - அவரவர்களின் கர்மாக்களுக்கு ஏற்ப பலன்களை யாக அளிப்பவராகவும் ஜீவர்களை நற்காரியங்களில் தூண்டுபவ ராகவும் எந்த நீசமானத் தொழிலைச் செய்பவரிடமும் கருணை ஒன்றினால் சரணமடைந்து யாசிக்கப்பட்டால் ஆட்கொள்ளுபவ ராகவும் திகழ்கிறார்.

ஜீவனாகிற சேதனன் தனது ஸ்வரூப ஸ்திதிக்கு பரமாத் மாவை நம்புவதாகவிருந்தாலும் அவன் உண்மையான தத்வமே - அழிவற்றவனாகவும் - எல்லாக்காலங்களிலும் பரமாத்மாவுடன் சேர்ந்து காணப்படுகிறவனாகவும், தனது இஷ்டப்படி கர்மாக் களில் பிரவேசம் செய்வதற்கு ஸ்வதந்திர புத்தியை உடைத்தவ னாகவுமிருக்கிறான். இந்த ஜீவன் தேகத்தை விடவேறானவன்; இந்தி ரியங்களையும்விடத் தனிப்பட்டவன்-முக்கிய பிராணனையும்-புத்தி மனஸ் இத்யாதிகளிலும் வேறுபட்டவன். அவன் அணுஸ்வரூப மாக தேகத்தில் இருந்துகொண்டு - தர்ம பூதஞானத்தினால் தேகம் முழுதும் ஒரு விளக்கு அதைச்சுற்றி பிரகாசத்தை அளிப்பதுபோல

ஞானுகாரமாக விருக்கிறுன். அவனுக்கு சுகதுக்கங்கள் தேக முழு வதிலும் உண்டு அனுபவிக்கிறுன்; அதிகமான ஞானத்வத்தைக் (சேதனத்வத்தை) கொண்டிருப்பதாலும் - தேகத்துடன் கர்ம காரணத்திஞல் சம்பந்தபட்டிருப்பதிஞல், அவனுடைய ஞானம் - பிரகாசம் - சரீரபந்தம் ஸம்சாரமாகிற சுக துக்க அனுபவங்கள் - எல்லாம் தடைபட்டு - அதஞல் தாபதிரயங்களால் கொளுத்தப் பட்டவனுகவும்-மக்னபப்பட்டவனுகவும் தனது நிஜமானதும் - ஸ்வரூபத்திற்கே ஏற்ப பரமாத்மாவுடன் கூடிய இயற்கையான உறவை மறந்துபோய் தவிக்கிறுன். ஆகையால் ஜீவன் ஜனன மரணச்சுழல்களடங்கிய - ஸம்ஸ்ருதி - எனப்படும் சம்சாரகதியை அடைகிறுன். அதஞல் தன் நிஜஸ்வரூப ஸ்வபாவங்களேயும் - அனுதியான கர்ம வாஸனைகளால் ஏற்படும் பாப புண்யங்களேயும் விலக்கமுடியாமல் - இருப்பதாலும் - அவன் பிரளய காலத்திலும் அழிந்துபோகாமல் சூக்ஷ்ம அவஸ்தையை அடைந்து பரமாத்மா வின் விபூதியாகவே (ஐஸ்வர்யமாகவே) விளங்குகிறுன். ஆகவே அவன் பரமாத்மாவுக்கு அம்சனுகிறுன் - இதனுலே - அவன் பூர்ண மாகவிருக்கும் பரமேஸ்வரனுகவிருக்கும் ஸ்ரீமந் நாராயணரினுல் கழிக்கப்பட்ட உபயோகமில்லாத அம்சமாகவில்லாமல் - தனது ஆகாரமாகிற ரூபம், ஞான ஆனந்தமாகிற ஸ்வரூப ஸ்வபாவங்கள் யாவும் எக்காலங்களிலும் மாறுமல்—குணவிசிஷ்டனுக - பரமாத்மா வுக்குச் சரீரமாக விளங்குகிறுன்.

இந்த ஜீவனுக்குத் தன் இச்சைப்படி ஒரு காரியத்தில் பிரவே சிக்க-தனது பூர்வ கர்ம வாஸனைகளின்படி பிரவர்த்திக்க, பரிபூர்ண ஸ்வதந்திரமிருந்தாலும்-இதஞல் பரமாத்மாவைவிட்டு விலகுகிற வனுகவில்லை-அதனுலே பரமாத்மாவுக்குத் தம்மிடம் தன்னுல் ஒரு குறைக்கப்பட்ட ஸர்வ சேஷத்வத்தை உடையவனுகவில்லாமல்-பர மாத்மா முன்பும்-எப்பொழுதும் பூர்ணமாகவே விருக்கிறுர்:-அதா வது பூர்ணமாக நியந்திருத்வம், நியாம்யத்வம் - ஆட்சி செய்பவ ராக விருக்கிறுர். பரமாத்மாவே பலன் கர்மங்களுக்கு அளிப்பவ ஞகையால் பாப புண்ய கர்மங்களைக் காண்பவராகவும் -அதன்படி நிக்ரஹ அனுக்ரஹ உள்ளம் படைத்தவராகவும் இருக்கிறுர். இதஞல் ஸர்வேஸ்வரனுடைய ஸர்வ சேஷித்வமும் - நியந்திருத் வமும் மேற்படுவது. இத்துடன் ஜீவனுடைய ஸ்வாதந்திரியத்

திற்கும் அனுமதியேற்படுகிறது. (இங்கு பட்டருடைய மூத்கலம் நினைவு செய்து கொள்ளவேண்டியது. (त्वं मे अहंमे இத்யாதி) இவ்விதமிருப்பினும் பகவானுக்கு சேதனனிடம் அக்கறை யிருப்பதும் - சேதனன் பரமாத்மாவையே நம்பி வாழ்வதும் உபதேசிக்கப்படுகிறது. இவ்விதம் சொல்வதால் ஸ்வதந்திரத் தன்மையை - (भेद व्यपदे शात्) என்கிற பிரும்ம சூத்திரத்தினல் தெரிவிக்கப்படும் ஜீவனுடைய நிலை ஜீவனுடையதே; பரமேஸ் வரனுடைய ஸ்வரூபம் பரமேஸ்வரனுடையதே - எந்த அவஸ்தே யிலும் பத்தர் - முக்தர் ஆகிய தசைகளிலும் ஜீவன் வேறு - பரமாத்மா வேறு என்று கொள்கையை விடவில்லை.

ஜீவர்களுள் மூவகைப்பட்டவர் - நித்யர் எக்காலத்திலும் அழிவில்லாத வைகுண்டலோகத்திலிருப்பவர்., பத்தர் (ஸம்சார தசையிலிருப்பவர்) முக்தர் (சம்சாரகதியிலிருந்து விடுபட்டு-பகவா னுடன் முக்ததசையில் ஸாம்யம் (ஸமமான நிலையைப் பெற்றவர்). நித்யர்கள் ஸ்வபாவமாகவே ஆனந்தமும், கர்மத்திலிருந்தும் பிரகிருதியாகிற சம்சாரத்திலிருந்து விடுதலை பெற்றவர்கள், முக்தர் என்று சொல்லப்படுபவருக்கு ஞானத்தினுலும் - வர்ண ஆஸ்ரமம் இத்யாதி தர்மங்களினுலும் - பக்தியினுலும் சம்சார கதியிலிருந்து விடுபட்டவர்; பத்தர் சம்சாரத்தில் அழுந்திப் போய் - மக்கனப்பட்டவராக - அவித்யை, தன் இச்சை - தனக்குத்தானே ஸ்வதந்திரன் - என்னைக் கேட்பார் யாருமிலர் என்று தனக்கு சுயமாகவே வாழும் நாஸ்திகன். மூன்றுவது வர்க்கமாகிற பத்தர்களில் வருபவர்கள் மனிதர்கள் மட்டுமின்றி - தேவர்களும் - மிருகங்களும் - அசையாப்பொருள்களாகிற மரங்கள் முதலியனவைகளும் ஆகும். ஆத்மாக்கள் யாவருக்கும் ஒன்றே ஒன்று தான் - அதாவது ஞானகாரமாக விருக்கும்; ஆனுல் ஞானத்தின் ஸங்கோசவிகாஸம் கர்மாக்களினுலும் அவைகளால் அடையப்பெறும் தேகங்களாலும் யேற்படுவதால் - அந்த ஜிவர்களுக்கு வெளித்தோற்றத்தில் ஜாதி - இருப்பு (வாழ்வு) ஏற்படுகின்றன. இந்த வெளித்தோற்றங்களின் மாறு பாடுகள் தேகசம்பந்தத்தினுல் கர்மங்களில் ஏற்பட்டவை.

அசித்வஸ்து என்பதும் ஸத்யமே - உண்மையான தத்வமே யாகும். அதுவும் சேதனனைப்போல - சேதனனுடனும் சேர்த்து எல்லா நிலைகளிலும் பரமாத்மாவுடன் சரீர ஆத்மபாவத்தினுல் சம்பந்தப்பட்டது. அது தன் ஸ்வரூப ஸ்வபாவ நிலையில் மாறிக் கொண்டிருப்பதால் - விகாராஸ்பதமாக விருப்பதால் - அசித் வஸ்துக்கள் நாஸ்தி என்ற சப்தத்தினுல் அறியப்படுகிறது. இதனுல் வஸ்து இல்லை என்பதில்லை. அவஸ்தா மாறுதலேயாகும். ஸ்ரீமத் ராமானுஜருக்கு ஸாங்கியரின் கொள்கையாகிற ஸத்வரஜஸ்தமஸ்க ளடங்கிய பிரகிருதி சம்மதமாக விருக்கிறது; ஆனுல் ஸாங்கியனைப் போல பிரகிருதியை முதலாகவும் எல்லாமாகவும் கொள்ளாமல் - அவர்களுக்கு எதிராக-பிரகிருதியின் உண்மையான ஸ்வரூப பிர காசம் பரமாத்மாவின் அதீனத்தினுல் தான் யேற்படுகிறது-பிர கிருதி பரமாத்மாவுக்கு அடங்கின வஸ்து என்ருர். பிரகிருதியோ அசேதனம் - இதைப்போல - அசேதனமாக (ஞானஸங்கோச முள்ளவைகளாக - ஜடமாக) காலம் என்கிற தத்வமும் - சுத்த ஸத்வம் எனப்படும் பரமாத்மாவின் அபிராகிருத சரீரம் என்கிற தத்வமும் - இரு அசேதனங்கள் இருக்கின்றன என்கிருர். இம் மூன்று தத்வங்களும் பகவானுடைய ஸத்ய ஸங்கல்பத்தினுல் நிலை பெறுகின்றன; பகவான் ஒருவரையே நம்பி வாழ்கின்றன; இதனுல் இவை சேதனர்களைவிட வித்யாஸமாகக் காணப்படு கின்றன. இதனுல் பிரும்மாண்டத்தில் ஸர்வேஸ்வரனுடைய பரி பூர்ண ஸர்வசேஷித்வம் (பூர்ண ஆட்சி) நிலை பெற்றதாகிறது.

சாங்கியரின் பிரகிருதிதான் எல்லாம் என்கிற கொள்கை யைப் பற்றிச் செல்வோம். சாங்கியன் சொல்வது - பரம (அத்யந்த) சூக்ஷ்ம அவஸ்தையாகிற தமஸ்ஸீகளடங்கிய மூல பிரகிருதியிலிருந்து ஆவிர்பாவமாகி - கண்களுக்குப் புலப்படும்படி தெளிவாகி - சேஷ்டிதங்கள் கொண்டதாகவும் - இந்த சேஷ்டி தங்கள் (தர்மங்கள்) ஸத்வரஜஸ்தமஸ்ஸாதிகளால் ஆக்கப் பட்டிருப்பதால் - பிரகிருதிமயமாக விருக்கின்றன - அதனுல் பரமாத்மாவுடன் இணைக்கப்பட்டிருப்பதாலும் - பரமாத்மாவின் அதீனத்திலிருப்பதாலும் - "விசிஷ்டாத்வைதம்" - பரமாத்மா வின் ஸங்கல்பத்திற்கு அனுசரணையாக வாழ்வதாகவு மிருக் கிறது. குணம் என்பது ஒரு முப்பிரிவுகொண்ட கயிற்றின்

திரிந்துகொண்டு விளங்கும் ஒருபாகம் - கயிற்றின் பிரிவுகளில் ஒன்று எனலாம், ''குணம்'' என்கிற பெயர் அழகான பிரத்யேகத்திறமையுள்ள பதம். இதனால் நமக்கு அறிவுறுத்தப் படுகிறது - ''குணம்'' என்கிற வார்த்தை - சாதாரணமாக அறியப்படும் மனிதனின் - விலங்கின் ஸ்வபாவம் - ஸ்வரூபமல்ல - இது ஒரு பொருளை உண்டாக்குவதற்கு அத்யாவசியமான பகுதி, ஜாத்யாய் தர்மங்களைப் போல ஒரு பிரிவு (Constituent) மூலப்பொருளாரும் - பிருகிருதியின் மூலப்பிரிவுகளாகும். திரிந்து பின்னப்பட்ட ஒரு கயிற்றின் மூன்று பிரிவுகள்போல - மூன்று பாகங்களாகிற - ஸத்வரஜஸ்தமஸ் ஆகிய மூன்றும் சேர்ந்து - அவைகளால் உருவாக்கப்பட்ட பிரகிருதி திரவியமாகும். ஸத்வம்- வெள்ளைக் கயிற்றின்பகுதி எனலாம்; இது ஸ்வபாவமாகவே சுத்தமாகவும் - பிரகாசமுள்ளதாயும், உண்மையாகவும் - எல்லோருக்கும் ஹிதம் செய்வதுமாக விருக்கிறது, ரஜஸ் என்ப்படும் பிரிவு சிகப்பு நிறமுள்ளது. காரியங்களில் ஒரு சேதனனை பிரவர்த்திக்கச் செய்கிறது. அமைதியின்மை, உணர்ச்சிகள் கொண்டது, காரியங்களைச் சாதிக்க வல்ல ஆற்றல் வலிமை யுள்ளதாகவும் இருக்கிறது; தமஸ் எனப்படும் மூன்றுவது பிரிவு கருப்பு நிறமாகவும் - பாரமானதும்-இருளடைந்ததும் உதாஸீன பாவத்துடன் - அசைவற்றிருப்பதாகவுமான மூன்றுவது பிரிவாகும். பிரளய அவஸ்தையில் இந்த மூன்று பிரிவுகளாகிற ஸத்வரஜஸ்தமஸாதிகள் சமநிலையை யடைந்திருக்கின்றன; ஸ்ருஷ்டி, சமயத்தில் - இவைகள் கிளரப்பட்டு - சலனத்தை (சேதனனுடன்) அடைந்து - புத்தி மஹத் அஹங்காரம் தன் மாத்திரைகளாக இந்த பிரகிருதியாகின்றது. இவைகளுடைய பஞ்சீகரணத்தினால் - ஒன்று இன்னொன்றுடன் சேர்ந்து இணைக்கப்பட்டு - ஒன்று சேருவதால் - ஸ்ருஷ்டியின் பிரகரணம் வரிசை உண்டாகி-ஸத்வரஜஸ்தமஸ்களின் அளவுக்குப் பொருத்தமாக - பிரபஞ்சத்தின் பல்வேறுபட்ட ஸ்வரூப ஸ்வபாவங்களுடன் காணப்படும் சேதன அசேதன வஸ்துக்கள் உற்பத்தி செய்யப்படுகின்றன. இதனால் ஸ்ருஷ்டியில் உள்ள பொருள்களுக்கு நாமங்கள் வேறு ரூபங்கள் வேறு - குணம் ஆகாரம் (ரூபம்) எல்லாம் வெவ்வேறாகவும், வித விதமாகவும் தனிப்பட்டதாகவும் காணப்படுகின்றன.

ஆகவே சேதனனும் அசேதனனும் - பரமாத்மாவுக்குச் சரீர மாக (காரிய காரண ஐக்யம்) கொண்டதாக விளங்குகின்றனர் (பகவான் பிரகாரி - சேதனன் அசேதனம் பிரகாரம்) . இவை இரண்டும் அழிவற்றவை. பரமாத்மாவுடன் சேர்ந்து எல்லாக்

காலங்களிலுமிருப்பவை, பிரளயத்தில் பரமாத்மாவுடன் சூக்ஷ்ம அவஸ்தையிலும், ஸ்ருஷ்டி ஆரம்பமாகும் போது ஸ்தூல அவஸ்தையாக மாறி பரமாத்மாவுடன் எப்போதும் இருப்ப தால் - சித் அசித் விசிஷ்ட (சேர்ந்த) பிரும்மம் (நாராயணர்) எனச் சொல்லப்படுகிறார், நாரங்களுக்கு (ஜீவர்களுக்கு) இருப்பிட மாகவும் ஆதாரமாகவும் விருப்பதால் நாராயணர் என்றுசொல்லப் படுகிறார். எப்பொழுதும் மஹாலக்ஷ்மியுடன் கூடச் சேர்ந்த ஐக்யமிதுனமாகவிருக்கிறார். அத்தகைய சூக்ஷ்ம நிலையிலிருக்கும் போது - பிரகிருதி - மூலபிருக்ருதி அவ்யக்தம் என்று பல பெயர் களால் சொல்லப்படுகிறது. அச்சமயம் சேதன அசேதனங்களுக்கு ஞானம் சுருங்கிப்போய் (ஸங்கு சிதமாகப் போய்) பிற்பாடு ஸ்ருஷ்டி யேற்படும்போது - அவை ஸ்தூல சேதன அசேதனமாக மாறி - அவை ஞான விகாசம் சிறிது அடையப் பெற்றதாக ஆகி - அச்சமயம் ஆத்மா சரீரத்தில் புகுந்து அவரவர்களின் கர்மங்களுக்கு யேற்ப - சூஷ்ம அவஸ்தையில் இறுகிப்பிணைந்து கட்டப்பட்டிருக் கும் கர்மா - அவித்யாதிகளால் சூழப்பட்ட சேதனன் கர்மங்களைச் செய்வதற்கு யோக்யமான சரீரங்களை - பாபபுண்யங்களுக்கு யேற்ப பெற்று - அதனால் பகவானின் ஸங்கல்பத்திற்கு அனு சரணையாக ஸ்ருஷ்டி பிரகரணம் - "பிரபஞ்ச விரிதல் "தொடங்கு கிறது. அச்சமயம் பகவானும் அந்த ஆத்மாவுடன் ஒவ்வொரு வஸ்துவிலும் உள் நுழைந்து- "நான் பலவாகக் ஆகக் கடவேன்" என்று சங்கல்பித்து நாமரூப வ்யாகரணம்-இவ்வுலகம் ஸ்ருஷ்டிக்கு முன்பு நாமரூப பேதங்கள் அற்றதாகவிருந்தது - ஸ்ருஷ்டிக்குப் பின்பு - நாமரூப வ்யாகரணம் செய்யப் பட்டதாக ஆகிற்று - இதனால் பொருள் ஒன்றும் உண்டாக்கப்படவில்லை. பிரும்மம் ஸ்தூல சித்அசித் விசிஷ்ட பிரும்மமாக ஆகும் போது - பல பேதங்கள் இருப்பினும் - காரணமான பிரும்மமும் காரியமாகிற பிரபஞ்சமும் (ஜகத்தும்) வேறல்ல காரிய காரணங்கள் ஒன்றே என்வாறு அதாவது ஒன்றான பிரும்மம் தனது சரீரத்வாரா வித்

விதமான சேதனப் பொருள்களும் அசேதனப் பொருள்களு
மடங்கிய உலகமாகின்றது. காரணத்தைக் காட்டிலும் காரியத்
திற்கு நாமரூப காரிய பேதங்களிருப்பதைக் கொண்டு இரண்டை
யும் வெவ்வேறாகக் கருத முடியாது. இந்த பேதங்களிருந்த
போதிலும் காரிய காரணங்கள் ஒன்றே என்பதாம். இதனால்
பிரும்மத்திற்கு ஸ்வரூப ஸ்வபாவங்களில் மாறுதல் இல்லாத
படியால் - பிரும்மம் ஸத்யம் - சரீரத்வாரா - சூக்ஷ்ம சித் அசித்
வஸ்துக்கள் ஸ்தூல சித் அசித் வஸ்துக்களாக - பிரும்ம விபூதிக
ளாக மாறுகின்றன என்பதாம். இப்படி பிரும்மம் ஜீவாத்மா
வுடனும் ஒவ்வொன்றிலும் "அனுப்ரவேசம்" செய்வதால் -
ஒவ்வொரு பொருளுக்கும் நாம ரூபமடங்கிய வஸ்துத்வம்
யேற்படுகிறது. அதனால் எல்லாப் பொருள்களும் பிரும் மாத்மக
மாக விளங்குகின்றன, இப்படி சேதன அசேதனங்கள் பிரும்மத்
திற்கு சரீரமாக விருத்தலால் - சேதன சேதனங்களிலுள்ள
தோஷங்கள் [பிரும்மத்தினிடம் ஒட்டமாட்டாது - என்பது
(விலக்ஷணத்வாதி-கரணத்தில்-நது த்ருஷ்டாந்த பாவாத் (2-1-9)
என்னும் சூத்திரத்தில் விளக்கப்பட்டதாகும். ஜீவனே பரதந்திர
னாகக் புண்ய பாபகர்மங்களுக்கு யேற்ப சுகதுக்கங்களை அனுபவிக்
கிறான். கர்ம வசப்படாத பரமாத்மாவோ இன்ப துன்பங்களை
அடைவதில்லை. அதனால் ஜீவனைவிட்டு வேறுபட்டவனாக - அனுக்ரஹ
நிக்ரஹமுள்ளம் படைத்தவனாக விருக்கிறான் என்பதாம். உலகை
சரீரமாகக் கொண்டவனாக விருந்தாலும் - அனைவரையும் உள்
ளிருந்து மேலான நியமிப்பவனாகவும் தான் எவராலும் நியமிக்கப்
படாதவனாயிருக்கும் தன்மையை ஸர்வேஸ்வரன் இருப்பதால் -
அவர் ஸ்ருஷ்டிக்கு உபாதான காரணமாகவும் வேதங்களின்
கருத்துப்படி ஆகிறான் என்பதாம். அவனே நிமித்த காரண
மாகவும் ஸஹகாரியாகவும் ஸர்வ அந்தர்யாமித்வத்தினாலும்
ஆகிறான் என்பதாம். सर्वस्य जगतः स्रष्टृत्वं आधारत्वं नियन्तृत्व-
शेषित्वं अपहतपाप्मत्वा दयोगुणाश्च विद्यन्ते - என்பது. பிரும்மசூத்ரம்
உபய லிங்காதிகரணம் என்கிறதில் பிரும்மம் எல்லாக் கல்யாண

குணங்களுக்கு இருப்பிடமாகவும், ஹேய (நீச) குணங்கள் ஒன்றிலும் பற்றப்படாத புருஷோத்தமனாகவிருக்கிறார்.

இந்தக் கருத்துக்களால் வேதத்தினால் ஆதரிக்கப்படாத ஸாங்கிய மதத்தை நிரஸனம் செய்தும், வேதத்தினால் ஆதரிக்கப்படாத நையாயிகம் முதலான பரமாணு காரணமாக எழும் பக்ஷங்களும் தள்ளப்பட்டவையாகும். காணாதர்-அக்ஷபாதர்-சமணர் சைவர்-முதலான பல மதங்களைச் சேர்ந்தவர்கள் தங்கள் தங்கள் தர்க்கங்களாலே பரமாணுவே ஜகத் காரணம் என்று நிலை நிறுத்தியுள்ளார்களாதலாலே ''தர்க்கம் நிலையில்லாது''— என்கிற நிலையை ஆதரித்து சங்கர பகவத் பாதாளைப் போல வேதத்திற்குப் பிராமாண்யம் கொடுத்து வேதத்தின் கௌரவத்தை உயர்த்தினார் ஸ்ரீமத் ராமானுஜர். ஆகவே சங்கரரைப் போல அவரது மதமும் வைதிக மதமாகும். நையாயிகர் முதலானோர் ''பரமாணு ஜகத் காரணம்'' என்னும் ஒரு விஷயத்தில் ஏக கண்டராக விருந்த போதிலும் - பரமாணுவின் ஸ்வரூபம் எத்தகையது - என்று நிர்ணயிப்பதில் அவர்களுடைய தர்க்கங்கள் நிலையில்லாமற் போகவே - எவ்விதமெனில் சிலர் பரமாணுவை சூன்யமென்றனர்; வேறு சிலர் சூன்ய மற்றது என்றனர்; பிறிது சிலர் அர்த்த (பாதி) ஸ்வரூபமென்றனர்; சிலர் அது க்ஷணிகமென்றனர். சிலர் அது நித்யம் என்றனர். சிலர் ஒரு படிப்பட்டது என்றனர், சிலர் அது மெய்யெனக் கூறுகின்றனர். மற்றவர் அதைப் பொய்யெனக் கூறினர். இவ்வண்ணம் பரமாணு ஸ்வரூப விஷயத்தில் அவர்களுடைய தர்க்கங்கள் நிலையில்லாமற்போவதால் ஸாங்கிய மதத்தைப் போல பரமாணு காரணவாதிகளும் வேதத்தில் ஆதரிக்கப்படாத தாகையால் - கேவலம் தர்க்கத்தையே அடிப்படையாகக் கொண்ட சாங்கியத்தைத் தள்ளினது போல - இந்த இதர மதங்களும் ஸ்ரீமத் ராமானுஜரால் தள்ளப்பட்டவையாம்.

பிரும்மம் விசித்திர சக்திகளுடன் கூடியிருப்பதால் - ''ப்ரம புருஷன் காதில்லாமல் கேட்கிறான் - கண்ணில்லாமல் பார்க்

கிருன்'' என்கிற சுருதிப்படி-பிரும்மம் நிமித்த காரணமாகவும் உபாதானகாரணமாகவும் ஆவதில் யாதொரு குறையுமில்லை என்பது ஸ்ரீமத் ராமானுஜரின் ஸித்தாந்தம். பரமாத்மாவிற்கு அப்போது - அப்போது யேற்படும் அவாந்தர பிரளயம் பகவத் லீலையாகும்; இது ஒரு தனிப்பட்ட கொள்கையாகும் இதனுல் ஸர்வேஸ்வரனுக்கு யேற்படும் தனிப் பெருமையை விளக்குவதாம்.

பகவான் சங்கரருக்கு - மாயை அல்லது பிரமம் முக்கிய மான நம்பிக்கையாகும். சுத்த பிரும்மத்திற்கு - இந்த மாயை யினுல் யேற்படுத்தப்பட்டுள்ள விதவிதமான அத்யாஸங்கள் டங்கிய தோற்றங்கள் - பிரபஞ்சமாகிற ஜகத்தின் பொய்த் தோற்றங்களாகும். இந்தமாயையாகிற ஜகத்மித்யை என்கிற கொள்கையானது ராமானுஜருக்குப் பிடிக்காமல் - அவர் ஜகத் ஸத்யம் என்கிற கொள்கையை ஸ்தாபிதம் செய்து - அதற்கு தர்க்கரீதியினுலும் சுருதி ஸ்மிருதி பிரகாரமும் ஆதாரங்களைக் காண்பித்து வேதபிரமாண சாஸ்திரமாக ஸித்தாந்தம் செய்தார்.

ஒரு சேதனன் தனது தேகத்தில் பந்தநிலையை அடைந்திருக் கும்போது- அவனுக்கு தன் கர்மாக்களுக்கு யேற்ப சுகதுன்பங்கள் யேற்பட்டு-அதனுல் அவன் அவித்யைக்குப் பலியாகி-தாபங்களால் மக்னப்பட்டு - அப்பொழுது அந்த ஜீவன் தேகத்தையே ஆத்மா வாக நினைக்கிருன். தேக ஆத்மபிரமம் - அத்துடன்தான் தனக்கே உரியவன் - பிறருக்கு வசப்படாதவன் என்கிற ஸ்வதந்திர ஆத்ம பிரமமும் உள்ளவனுக, அவன் அந்த சம்சாரநிலையில் பகவானுக்கு வாஸ்தவத்திலே சரீரமாக விருக்கிருன் என்கிற உண்மையை மறந்துபோகிருன். அதனுல் சுத்தமான கர்மங்களும் - பகவத்கிரு பையும் - ஆசிரம தர்மங்கள் இத்யாதிகளும் அந்த மக்னப்பட்ட ஜீவனுக்கு பாபபுண்யங்களை அறிவுறுத்தி-வித்யையாகிற உபாஸனு மார்க்கத்திலும் தன் ஸ்வய அறிவினுல் (அனுபவங்களால்) ஏற்படும் ஞான ஒளியின் வாயிலாக பகவானே ஸர் வாத்மகன் என்கிற நிலையை உணருகிருன்.

பக்தி எனப்படும் மார்க்கத்தினுல் சேதனன் பகவத் பிரஸாதத்தையடைகிறுன். பக்தி என்பது கேவலம் உணர்ச்சிகள் ததும்பும்படி மெய் (தேக) நிலே மறந்து போகும்படியான அவஸ் தையில்லே. அது ஒரு நெறியாகும் - வித்யை யாகும். உள்ளத்தை பகவானுடைய சங்கல்பத்திற்கு அடக்கி - வாழ்தலும் - மனத்தை யும் புத்தியையும் தேகத்தையும் கர்மங்களேயும் பகவத் ஆராதனே யாகச் செய்யப்படுவதாகும் - ஆகவே ஞானமும் கர்மமும் அந்தர் கதம் - ஒவ்வொன்றும் முக்கிய பாகத்தை வகிக்கிறது. ஆனுல் அவைகளே - சங்கரரின் அபிப்ராயப்படியோ - அல்லது கர்ம மீமாம்ஸகர்களின் படிக்கோ - முக்திக்கு முக்யமான ஸாதனமல்ல. இவை அகண்டமான பரம பக்திக்கு முக்கிய வாயில்களாகும். அதனுல் சித்த சுத்தியடைந்து மதி நலம் அருளப்பெற்று-பக்தியை உண்டாக்குகிறது. ஞானம் என்பது தியானம், மனனம் நிதித்யா ஸம் இத்யாதிகளால் சொல்லப்படும், செய்யப்படும் ஸ த் ய ப் பொருளே ஆவிருத்தி செய்வது - இந்த ஆத்மா பரமாத்மாவுக்குச் சரீரம், பக்தியை உண்டாக்குகிறது, இவை கர்ம நாசம் யேற்படும் போதுதான் (அதாவது தேக முடிவு ஏற்படும் போதுதான்) அடையப்படுகிறது.) இத்தகைய் நிதித்யாஸத்தினுல் ஸஞ்சித் ஆகாம்ய பாபங்கள் நசிக்கின்றன. பிராரப்த பாபங்கள் அனுபவி த்தே திரவேண்டும். என்பது ஒருபக்ஷம் பகவத் ஆராதனேயாகச் செய்யப்படும் கர்மங்கள் - நாளடைவில் பகவத் ஸ்வரூபத்தை சேதனனிடத்தில் உண்டு பண்ணுகின்றன. இதனுல் சேதனன் சரணுகதி என்கிற மார்க்கத்தை அவலம்பித்து - ஈஸ்வரனேத் தன் குற்றங்களேப் பொறுக்கும்படி பிரார்த்தித்து நிக்ரஹத்தைத் மறந்து அனுக்ரஹ சித்தமுள்ளவனுக இறைவனே வேண்டுகிறுன். இதை பிரபத்தி என்றும் - தீர்க்க சரணுகதி என்றும் வைணவர்கள் கூறு வார்கள். சரணுகதியினுல் பிராரப்த பாபங்களும் போக நேரிடும் என்பதும் ஸ்ரீமத் ராமானுஜரின் கருத்தாகும்.

ஸ்ரீமத் ராமானுஜருக்கு மோக்ஷம் என்பது ஜீ வ னி ன் பரமாத்மாவுடன் ஸ்வரூப ஐக்யம் - (ஸ்ரீமத் சங்கரர் சொல்வது போல) அல்ல - சம்சாரத்திலிருந்தும் அவித்யை யிலிருந்தும் விடுதலே பெற்றவனுகவும் — தேகத்திலிருந்து (கர்மங்களிலிருந்து) விடுபட்டவனுகவும் - வைகுண்ட பிராப்தியாகிற பகவானுடைய

லோகத்தில் சாமீப்யம் - ஸாரூப்யம் - ஸாயுஜ்யம் அடைபவனாக வும்— தனக்குப் பிடித்தமான பரமாத்மாவுடன் நிஜஸாக்ஷாத் காரத்தையும் ஸாந்நித்யத்தையும் அடைபவனாகவும் - ஆகிறான். முக்தாத்மா பகவானுடைய "ஸாம்யத்தை"— ரூபத்தினாலும் போகத்தினாலும் அடைகிறான், அதாவது பகவானுக்கு ஸ்வரூப ஸ்வபாவத்தினால் யேற்படும் ஸர்வக்ஞத்வமும் யேற்படுகிறது. அபஹதபாப்மத்வாதி குணங்களும் முக்தனுக்கு யேற்படு கின்றன, ஆனால் பகவானுடன் ஸ்வரூப ஐக்யம் யேற்படுகிறதில்லை- அடைவதில்லை. (பிரும்மனோபவ நது ஸ்வரூபஐக்யம்). கர்மம் அவித்யையிலிருந்து விடுபட்டமுக்தன் பகவானைப்போல ஸர்வக் ஞத்வம், ஸர்வ கல்யாண குணங்களுக்கு இருப்பிடமாக ஆனாலும் - பரமாத்மாவுக்கே தனியாகயேற்பட்ட ஜகத் வ்யாபாரம் - அதாவது ஸ்ருஷ்டி ஸ்திதிலயம் இத்யாதி காரியங்கள் ஜீவனுக்கு வர்ஜம் - தள்ளப்பட்டவை. ஜீவனால் செய்யப்பட வேண்டிய கர்த்தவ்யமல்ல. அதனால் அவனுக்கு ஸர்வ வியாபகமுமில்லை. விபுவாகவுமில்லை அணுவேதான்.

ராமானுஜருக்கு நம்மாழ்வாரின்படி வைகுண்டம் என்கிற லோகம் உண்டு. முக்தன் அங்கே போய் தன் இஷ்டப்படி சரீரத்துடனோ-சரீரமில்லாமலோ - சஞ்சரிக்கிறான். அவன் பகவா னுக்கு அனுகூலனாக-வாழ்கிறான். பூர்ணகாமனாகவும் ஆகிறான். அவனுக்கு பகவத் பிரஸாதத்தினால் பூலோகத்திற்குத் திரும்பி வருவது கிடையாது. இத்தகைய பேரானந்தமும், நபுனராவிருத்தி மீண்டும் சம்சாரத்தில் பிறப்பது என்பது இல்லை. இது ஸ்ருதி ஸ்மிருதிகளின் வசனங்களில் காட்டப்பட்ட உண்மையாகும்.

அந்த முக்தனுக்கு கர்மபந்தங்கள் அறுபட்டுப்போய் - ஞானம் ஸங்கோசமடையாமல் விகஸிக்க - பிரபிரும்மானுபவமே அவனது ஸ்வபாவத்திற்கு ஏற்பட-அதையே ஜிவயாத்திரையாகக் கொண்டு - அனுவர்த்திப்பவனாக அநவதிகாதிசய ஆனந்தமடை கிறான். அதனால் புநராவிருத்திபயம்-சங்கை வேதாந்த வாக்கியங் களாலே ஏற்படுவதற்கு பிரஸக்தியில்லை என்பதாம்.

பகவத் ராமானுஜர் அந்திமஸ்திதியில் ஐந்து கார்யங்களை வைஷ்ணவர்களுக்கு ஆளவந்தாரின் ஆணைபேரில் விதித்தார். ஸ்ரீ பாஷ்யத்தைப் படித்து அனுஸந்திப்பது; திருவாய்மொழி போன்ற ஆழ்வார்களின் அருளிச் செயல்களை அனுஸந்திப்பது! அதுவுமில்லாதபோனால் த்வயமந்திரத்தை ஸதா - அனுஸந்தானம் செய்வது. அதுவுமில்லாவிடில் - அர்ச்சை எனப்படும் பகவத் திவ்ய க்ஷேத்ரங்களில் உள்ள விக்ரஹங்களுக்கு சேவைசெய்தல். அதுவும் முடியாவிடில் - ஒரு வைஷ்ணவனை அண்டிவாழ்வதனால் பகவத் பாகவததர்மம் விளக்கப்பட்டதாகும். சேதனனுக்கு ஆத்மஸ்வரூபம் ஆனந்தம் மட்டுமின்றி பகவத் உகப்பே பகவத உகப்புக்குப் புதம்பாக வரும் ஒவ்வொரு செயல்களும் தள்ளப்பட வேண்டியவையே என்று சித்தாந்தம் செய்தார். பாகவத தர்மமே பரம புருஷார்த்தமாகும் என்றார்.

ருத்ரோத்காரி
மாசி மகம்
வெள்ளிக்கிழமை
பௌர்ணமி பிரதமை

S. Jagannarayanan
17 – 2—84